

ஆசாரிய ஸ்வாமிகள்

# உபந்நியாசங்கள்

## 1957-58

முதற் பகுதி

ஸ்ரீ ராம ஜயம்

1



கலைமகள் காரியாலயம்

சென்னை-4

முதற் பதிப்பு, விளம்பி௵ ஆடிமீ
இரண்டாம் பதிப்பு, விளம்பி௵ ஐப்பசிமீ
மூன்றாம் பதிப்பு, பிலவ௵ சித்திரைமீ
நான்காம் பதிப்பு, சௌம்ய ௵ கார்த்திகை மீ



விலை ரூ. 2-50

வெளியிட்டோர்:
கலைமகள் காரியாலயம்
சென்னை-4

அச்சிட்டோர்:
எம். எல். ஜே. பிரஸ் (பி) லிட்.
சென்னை-4.

# பொருளடக்கம்

குருப்யோ நம:

# முன்னுரை

சென்னை நகர் செய்த புண்ணியத்தால் சென்ற சில மாதங்களாக இங்கே ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளவர்கள் எழுந்தருளியிருக்கிறார்கள். நாள்தோறும் அவர்களுடைய திவ்ய தரிசனத்தைப் பெற்று இன்புறுபவர்களும் ஸ்ரீ சந்திரமௌளீசுவரருடைய பூஜையைக் கண்குளிரக் கண்டு மகிழ்ச்சி பெறுகிறவர்களும் பலர். அவர்களைத் தனியே அணுகித் தங்கள் தங்கள் உள்ளக் கிடக்கைகளை வெளியிட்டு அவர்கள் அருளும் இன்னுரைகளால் ஆறுதல் அடைகிறவர்களும் பலர். தம்முடைய சொந்தக் குறைபாடுகளைக் கூறிக்கொள்வதோடு சமுதாயத்தில் உள்ள குறைகளையும் உண்டாகியிருக்கும் இன்னல்களையும் சொல்லி ஆசாரியஸ்வாமிகளுடைய நடைமுறைக்கு ஒத்த உபதேசங்களைக் கேட்டுப் பலர் அமைதி பெறுகிறார்கள்.

இப்படி ஸ்ரீ ஆசார்யஸ்வாமிகளுடைய திருவாக்கினால் நலம் பெறுவதெல்லாம் வேறு ஒன்றை நோக்கும்போது சிறிதாகி விடும். தவமும் ஞானமும் அன்பும் அறிவும் இணைந்து ஓர் உருவெடுத்ததுபோல விளங்கும் அப்பெருமான் இரவில் பூஜை ஆனவுடன் தம்முடைய அமுதமொழி வெள்ளத்தைச் சொரியும் போது அதைக் கேட்டுப் புளகாங்கிதம் அடைந்து போற்றும் மக்களைக் கண்டவர்கள் அந்தக் காட்சியை என்றும் மறக்கமுடியாது. அப்படிக் காணுவது சற்றுச் சிரமந்தான். காணவேண்டுமென்று போகிறவர் தனியே நின்று பார்த்தால் அல்லவா அதைக் காண முடியும்? அவரும் அந்தக் கூட்டத்திலே கரைந்து ஒன்றாகி அந்த இன்னமுத உரை வெள்ளத்தில் அமிழ்ந்துவிடுவார் அல்லவா?

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் என்ற திருநாமத்துக்கு மதிப்பை உண்டாக்கி எழுந்தருளியிருக்கும் அந்த

ஞானவள்ளல் பேசத் தொடங்கிவிட்டால் கூட்டத்தில் பேச்சு நின்றுவிடும். ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருப்பார்கள். அத்தனை பேரும் மூச்சைக்கூடப் பலமாக விடாமல் அப்பெருமானுடைய திருவாக்கிலிருந்து என்ன வரப்போகிறது என்று காத்திருப்பார்கள்.

ஒலிபெருக்கிக்கு முன்னால் வந்து அமர்ந்துகொண்ட பிறகு அவர்கள் சிறிது நேரம் மௌனமாக இருப்பார்கள், ஸ்ரீ சந்திர மௌளீசுவரருடைய பூஜையிலே விளைந்த ஆனந்த அலை அடங்குவதற்காக அப்படியிருக்கிறார்களோ? அல்லது இன்று எந்த விஷயத்தை எந்த முறையில் சொல்லலாம் என்ற சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார்களோ? இல்லையெனில் இவர்களுக்கும் சற்றே மௌன அப்பியாசத்தை உண்டாக்கலாம் என்ற திருவுள்ளமோ?—இன்னதென்று சொல்லத் தெரியவில்லை. ஒரு கால்மணி நேரம் இந்த இன்ப மௌனம் நிலவும். மௌனமான சூழ்நிலையில் ஒரு சிறந்த வீணையின் நரம்பு மெல்லத் தெறித்து இசை அலை மெல்ல எழுகிறதைப் போல அவர்களிடமிருந்து மெல்ல இனிய குரலில் வார்த்தை எழும்; அது அவர்கள் சொந்த வார்த்தையாகவும் இருக்கும்; ஏதாவது சுலோகமாகவும் இருக்கும். சில சமயங்களில் பகவானுடைய ஸ்தோத்திரமாகவும் இருக்கும். ஏதானாலும் அதில் ஒரு நயம், ஒரு குழைவு, ஒரு நெகிழ்ச்சி இருக்கும். அது அம்பாளுடைய ஸ்துதியாக இருந்துவிட்டாலோ அவர்களுடைய உள்ளமென்னும் வீணைதான் இந்த இன்னிசையலையை எழுப்புகிறதோ என்ற வியப்பு உண்டாகும்.

மெல்ல வார்த்தைகளை ஒன்றன்பின் ஒன்றாக ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் சொல்லி வரும்போது கேட்பவர்களுடைய மனம் மெல்ல மெல்ல அவற்றைப் பின்தொடரும். வேறு வேறு கவலைகளும் கடமைகளும் வேதனைகளும் படைத்தவர்கள் மனிதர்கள். முன் இருந்து கேட்பவர்களில்தான் எத்தனை விதமான மனப்பாங்கு உடையவர்கள்! அத்தனை பேரும் ஏதோ யோக சாதனத்தில் ஈடுபட்டவர்களைப் போல மனம் முழுவதும் அவர்களுடைய இனிய வார்த்தைகளை நிழல்போலப் பின்பற்றி அமர்ந்திருப்பார்கள். நல்லவர்களுடைய பேச்சை, அருள் நிறைந்தவர்களின் பேச்சைக் கேட்பதும் ஒரு வகை யோகமென்றுதான் சொல்லவேண்டும்;

உபந்நியாசத்தின் தொடக்கத்தில், 'இவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள்?' என்பது தெரியாது. அது தெரியாமை

யால் கேட்பவர்களுக்கு ஆவல் அதிகமாகிறது. ஒருமைப்பாடு உண்டாகிறது. சில சமயங்களில் அவர்கள் ஒரு கருத்தைச் சொல்வதற்கு முன்னால் அதற்கு எதிரான கட்சியைத் தெளிவாகச் சொல்வார்கள். அதுதான் உண்மை என்று தோற்றும்படி சொல்வார்கள். பிறகு முதலில் கூறிய அத்தனை சமதானங்களுக்கும் ஆட்சேபம் கூறி முடிப்பார்கள். இந்த நாட்டில் ஒரு மதம் இல்லை, ஒரு வழிபாடு இல்லை, ஒரு பொதுமை இல்லை என்று ஆரம்பித்து விரித்துக்கொண்டே போவார்கள். அத்தனையும் நியாயம் என்று தோன்றும். 'பிறகு, இப்படித் தோன்றினாலும் ஒரு பொதுமை உண்டு' என்று சொல்லி எல்லாவற்றுக்கும் மூலம் வேதம் என்பதைக் காரணங்களுடன் நிறுவுவார்கள்.

மிகவும் நுட்பமான கருத்துக்களைச் சாஸ்திரங்களை வாசிக்காதவர்களும் — பள்ளிக்கூட மாணாக்கர்களும் — புரிந்துகொள்ளும்படி விளக்குவதில் அவர்கள் வல்லவர்கள். அப்படி விளக்கும்போது பல உபமானங்கள் வரும். யுக்திக்குப் பொருத்தமான விளக்கங்கள் வரும். உலகியல் நிகழ்ச்சிகளை உதாரணமாகக் காட்டுவார்கள். அம்பிகையின் வர்ணம் சிவப்பு என்பதற்குக் காரணத்தை விளக்கும் உபந்நியாசத்தைப் பார்த்தால் இந்த அற்புதமான கலையில் அவர்கள் எவ்வளவு கைவந்தவர்கள் என்பது தெரியும். விபூதி ருத்திராட்ச மகிமைகளை விளக்கும் பேச்சில் எவ்வளவு அழகாக யுக்திக்குப் பொருத்தமாகத் தம் கருத்துக்களை விளக்குகிறார்கள்!

ஒருவருடைய பேச்சில் மக்களுக்கு ஆர்வம் உண்டாவதற்குப் பல காரணங்கள் உண்டு. பேசுகிறவருடைய பெருமை ஒரு காரணம். இங்கே, 'இவர்கள் பெரிய மடாதிபதிகேள், ஆசாரிய புருஷர்' என்ற எண்ணத்தால் அவர்களுடைய பேச்சுக்கு ஒரு தனி மதிப்பு உண்டாகிறது என்பது உண்மைதான். ஆனால் அந்த மதிப்பைக் கருதாதவர்களுக்கும் அவர்களுடைய உபந்நியாசங்கள் இன்பத்தையும் வியப்பையும் ஊட்டுகின்றன. அவர்கள் பேசுவதை ஆங்கிலப் பத்திரிகைகளும் தமிழ்ப் பத்திரிகைகளும் சுருக்கமாக வெளியிடுகின்றன. அவற்றைப் படிப்பவர்கள் யாவருமே அவர்களுடைய ஆசார்ய பீடத்துக்கு மதிப்புக் கொடுத்து வணங்குகிறவர்கள் என்று சொல்ல முடியாது. ஆனாலும் அந்தப் பேச்சுக்களில் உள்ள இனிமையும் அறிவொளியும் நடைமுறையில் பயனைத் தரும் இயல்பும் யாவரையுமே சிந்திக்க வைக்கின்றன; பாராட்டச் செய்கின்றன.

அவர்கள் கருத்தை அழகுபடுத்திச் சொல்லுகிற மாதிரியே தனி; அதில் அவர்களுக்கென்று ஒரு பாணி இருக்கிறது. அதோடு யாவரும் நலம்பெற வேண்டும் என்ற பரிவு இருக்கிறது. அதனால் அந்தப் பேச்சில் அருள் கனிகிறது. கட்சி, பிரதிகட்சி, மறுப்பு, கண்டனம் என்றெல்லாம் சொல்லும் ஆயுதங்களை அந்தப் பேச்சுக்களில் காண இயலாது. மற்றவர்கள் கட்சி கட்டிப் பேசுவதைக்கூட அவர்கள் சொல்லும் போது நமக்கு அதில் உள்ள முனைப்புத் தோன்றுவதில்லை. கூரத்தாழ்வார், 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்பதற்கு, 'அஸ்தி த்ரோணம் அத: பரம்' என்று சொன்னதாக ஒரு வரலாறு உண்டு. சாந்த முனிவராகிய ஆசார்ய ஸ்வாமிகள், அதற்கு ஒரு புதிய பொருள் கற்பித்துச் சொல்லியிருக்கிறார்கள், 'சிவனுக்கு மேல் தும்பை மலர் இருக்கிறது என்று நான் பொருள் செய்துகொள்கிறேன்' என்று அந்தக் கதையில் வரும் காரத்திலே நெய் ஊற்றியிருக்கிறார்கள்.

அவர்கள் பேசும்போது எந்தத் தனி மனிதரையும் குறை கூறுவதில்லை. பொதுவாகச் சமுதாயத்தில் உள்ள குறையை நயமாக எடுத்துச் சொல்வார்கள். இப்போது அநுஷ்டானத்திற்கு வர முடியாத லட்சிய வாதங்களை அவர்கள் வற்புறுத்திச் சொல்வதில்லை. இப்போதுள்ள மக்களின் நிலையை நன்றாகப் புரிந்துகொண்டு அவர்கள் முன்னேறுவதற்கு அடுத்தபடியாக எது நடைமுறைக்கு ஒத்தது என்று தேர்ந்து உபதேசம் செய்கிறார்கள். உடலுழைப்பைப்பற்றி அவர்கள் பேசிய பேச்சைக் கேட்டவர்களுக்கும் வீட்டில் வீணாகிற காய்கறியின் தோல்கள், இலைகள் இவற்றைக் கொண்டு பசுமாட்டைக் காப்பாற்றலாம் என்று பேசியதைக் கேட்டவர்களுக்குமே இந்த உண்மை விளங்கும்.

அவர்களுடைய நல்லுரைகளில் நிலவும் இனிமையையும் தெளிவையும் பரிவையும் கண்டு கேட்டவர்களுடைய காதும் அறிவும் இதயமும் நிறைவு பெறுகின்றன. அது மட்டுமா? அந்தப் பேருரைகளில் வெளியாகும் மேதையைப்பற்றிச் சொல்லப் போனால் அது மிக மிக விரியும். அவர்களைப் பல்கலைக் களஞ்சியம் என்றே சொல்லவேண்டும். வேதத்திலிருந்தும் உபநிடதங்களிருந்தும் சாஸ்திரங்களிலிருந்தும் அவர்கள் பல மேற்கோள்களை எடுத்துக் காட்டுகிறார்கள். ஆதி சங்கராசாரியர்வர்களுடைய திருவாக்கிலிருந்து பல அழகிய சுலோகங்களைக் கூறித் தம் கருத்தை விளக்குகிறார்கள்,

வைஷ்ணவப் பெரியார்களுடைய வாழ்க்கையைப் பற்றியும் சில சமயங்களில் சொல்கிறார்கள். வடமொழி மேற்கோள்கள் மாத்திரமா? தேவாரமும் திவ்யப் பிரபந்தமும் திருக்குறளும் அவர்கள் பேச்சுக்கு அணிசெய்கின்றன. அவற்றிலுள்ள பொருள் நுட்பங்களை அவர்கள் விளக்கும்போது தமிழும் அவர்களால் பயன் பெறுகிறதை எண்ணி இன்புறுகிறோம்.

ஆங்கில நூல்களில் உள்ள பல செய்திகளை - முக்கியமாகத் தத்துவ நூல்கள், சரித்திர நூல்கள் - ஆகியவற்றிலுள்ள செய்திகளை அவர்கள் எடுத்துச் சொல்லும்போது அவர்களுடைய பரந்த அறிவைக் கண்டு பிரமித்துத்தான் போகிறோம். சாசனங்களிலுள்ள நுட்பமான செய்திகளை அவர்கள் பல இடங்களில் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

இவ்வாறு அவர்கள் செய்துவரும் உபந்நியாசங்கள் பொன்னால் பொறித்து வைப்பதற்கு உரியவை; இந்த நாட்டுச் சமய இலக்கிய உலகத்தைப் பின்னும் வளப்படுத்துபவை. அவர்கள் சென்னை மாநகருக்கு எழுந்தருளியபோது முதலில் மயிலாப்பூர் ஸம்ஸ்கிருதக் கல்லூரியில் தங்கினார்கள். அப்போது அவர்கள் அருளிய உபந்நியாசங்களை அன்பர் அனந்தன் அவர்கள் குறுக்கெழுத்தில் எடுத்தார். அவற்றைத் தொகுத்து ஒருவாறு அடைவுபடுத்தி வெளியிடவேண்டும் என்ற எண்ணம் பல அன்பர்களுக்கு உண்டாயிற்று. பத்திரிகைகளில் வருபவை உபந்நியாசங்களின் சுருக்கமே. அவற்றின் ஆங்கில மொழி பெயர்ப்புத் தொகுதி ஒன்று புத்தக உருவத்தில் வெளியாகியிருக்கிறது.

மயிலாப்பூரில் நிகழ்ந்த உபந்நியாசங்களையும் வேறு இடங்களில் நிகழ்ந்த சிலவற்றையும் ஸ்ரீ அனந்தன் குறுக்கெழுத்தில் எடுத்துத் தட்டெழுத்தில் பிரதி செய்து கொடுத்தார். அவற்றை ஒழுங்குபடுத்தி யாவரும் எளிதில் வாங்கிப் படிக்கும் வகையில் சில தொகுதிகளாக வெளியிடவேண்டும் என்று எண்ணினோம். அதன் விளைவே இந்த முதல் தொகுதி.

கலைமகள் காரியாலயத்துக்கு இந்த அருளமுதப் பேருரைகளை வெளியிடும் வாய்ப்புக் கிடைத்தது பெறுதற்கரிய பெறும் பேறே யாகும். இந்த உபந்நியாசங்களை வெளியிடவேண்டும் என்பதில் பேரார்வம் உடையவராக இருக்கும் ஸ்ரீ ரா. மகாலிங்கையரவர்களுக்கு ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகளிடம் இருக்கும் பக்திக்கு உவமையே இல்லை. அவர்களுடைய தூண்டுதலும் கலைமகள்

அதிபர் ஸ்ரீ நா. ராமரத்தினம் அவர்களுடைய அன்புமே இந்த வெளியீடுகளுக்கு உரத்தைத் தந்தன.

இவை தமிழில் இருந்தாலும் பாரததேசத்தில் உள்ள யாவருமே அறிந்து பயன் அடையும் பான்மையுடையவை. உலக நன்மையைக் குறிக்கொண்டு அருளிய கருத்துக்கள் பல இவற்றினிடையே இருக்கின்றன. ஆதலின் இவற்றை வேறு மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும்படி இறைவன் திருவருள் கூட்டிவைத்தால் அப்போது இந்த அற்புத விரிவுரைகளை ஆற்றிய மகான், 'உலக குரு' என்ற பட்டத்தைப் பெற்றிருப்பது எவ்வளவு பொருத்தமானது என்பது தெரியவரும்.

கலைமகள் காரியாலயம்,
மயிலாப்பூர்.
22-7-'58

கி. வா. ஜகந்நாதன்

# 1

# அம்பாளின் தியானம்

அம்பாளுடைய சரணத் தியானமே மதந்தான், அந்தச் சரணத் தியானத்தை நாம் பண்ணினோமானால் நாம் நிரம்பி இருக்கலாம்; ஒன்றும் தெரியாத ஆடுமாடுகள் மாதிரி நாம் சாகக்கூடாது. சாந்தியும் ஆனந்தமும் நிரம்பி, உயிர் உடலிலிருந்து பிரிந்தால் அதுவே பூரணத்துவம். அதற்கு வேண்டிய காரியங்களை நாம் செய்வதாக இருந்தால் நமக்குச் சாப்பாடு வேண்டும்; உத்தியோகம் வேண்டும், இல்லாவிட்டால் ஒன்றும் வேண்டாம்; கல்யாணம் வேண்டாம்; குழந்தை குட்டி வேண்டாம்.

இந்த லோகத்தில் பிறந்தவர்கள் எப்படியும் மரணம் அடையத்தான் வேண்டும். எல்லோரும் சேர்ந்தாற்போல் செத்தால் நல்லதுதான். சாகிறதானால் எப்படிச் செத்தாலும் சாவுதான். ஆனாலும் அதில் வித்தியாசம் உண்டு. சாகாமல் இருப்பதற்கு அம்பாளுடைய சரணாரவிந்தத்தை அடைய வேண்டும். அம்பாளுடைய சரண கமலத்தைக் காட்டிலும் சாந்தி அளிக்கக்கூடியது வேறு ஒன்றும் இல்லை. அந்தமாதிரி பூரணம் அடைந்த பிறகு ஏற்படுகிற மரணம் மரணம் அல்ல. அதற்கு அமிருதம் என்று பெயர். செத்தும் சாகாதவர் ஆகலாம். மரணத்தை அதோடு நிறுத்திவிடலாம். அதற்குப் பிறகு அமிருதமாக இருக்கலாம். மிருதத்துவம் இல்லை. பூரணத்துவம் அடையலாம்.

இதற்கான தகுதி நமக்கு வந்துவிட்டதா என்று சோதித்துப் பார்த்துக்கொள்ளவேண்டும். காமத்தினாலே கோபத்தினாலே நம் மனம் பாதிக்கப்படாமல் இருக்கிறதா என்று சோதித்துப் பார்த்துக்கொள்ளத்தான் ஸ்வப்னம் இருக்கிறது. இப்படி எல்லாம் பரீட்சித்துப் பார்க்காது போனால் சாப்பாடு எதற்கு? உத்தியோகம் எதற்கு? இந்த ஜன்மம் எடுத்தும் பயன் இல்லை. இது ஒன்று இருந்தால்தான் நாம் மதம் மதம் என்று சொல்லிக் கொள்ளத் தகுதி உண்டு.

கல்யாணம் பண்ணிக் குழந்தை குட்டிகள் பெறுவதே ஒரு ஜீவனுக்கு மனிதப் பிறவி கொடுக்கத்தான். பிறவி கிடைத்தால் ஜீவன் பூரணத்துவம் அடைய மார்க்கம் உண்டாகும். காமமே அதற்காகத்தான் வைத்திருக்கிறது, ஒருவனுடைய சுகத்திற்காக அல்ல. இப்படி எல்லாம் ஸ்வாமி நம்மை ஏமாற்றுகிறார். இயற்கை ஏமாற்றுகிறது.

நாக்கில் ருசி இருக்கிறது. நாக்கு மரத்துப்போய் ருசி இல்லாவிட்டால் எதையாவது ஒன்றைத் தின்றுகொண் டிருப்பானே தவிர, இப்பொழுதுபோல உணவை மாற்றி மாற்றிச் சாப்பிடமாட்டான். ருசி இருக்கிறது. அதனால் நல்ல பதார்த்தங்களைச் சாப்பிடுவதற்கு நினைக்கிறான். நாக்கில் ருசி இருப்பது அப்படிச் சாப்பிட்டு ஆனந்தப்படுவதற்காக அல்ல. சாப்பிடுவதனாலே உடம்பு வளருகிறது. நாக்கில் ருசி வைத்திருப்பதே உடம்பை வளர்ப்பதற்காகத்தான்.

நம் குழந்தையைக் கண்டவுடனே ஆசையோடு தூக்கிக் கொண்டு கொஞ்சுகிறோம். அது களுக்கென்று சிரிக்கிறது. அதனால் ஆனந்தம் உண்டாகிறது. அதே சமயம் பக்கத்து வீட்டுக் குழந்தையைக் கண்டால் அதிருப்தி வருகிறது. இந்தக் குழந்தையிடத்தில் அபிமானம் இருப்பது ஏன் என்றால் இந்தக் குழந்தையை நாம் நன்றாக வளர்க்கவேண்டும் என்பதற்காகத் தான். பெற்ற குழந்தையிடத்தில் நமக்குத் தனி அபிமானம் இல்லாதுபோனால் அந்தக் குழந்தை அப்படி அப்படியே சுற்ற வேண்டியதுதான். சரியாக யாரும் வளர்க்கமாட்டார்கள். அந்தக் குழந்தை வளர அதனிடத்தில் அபிமானம் உண்டாகச் செய்திருக்கிறார் பகவான். அதுபோல இந்த உடம்பு வளர நாக்கில் ருசியை வைத்திருக்கிறார்.

காமம் எதற்கு? ஒரு சரீரம் பிறப்பதற்கு. இன்னொரு ஜீவன் ஒரு சரீரத்தை எடுப்பதற்காகக் காமத்தை வைத்திருக்கிறார். அதனால் அந்த ஜீவன் க்ஷேமத்தை அடைவதற்கு வழி உண்டாகிறது. 'க்ஷேமத்தை அடையக் காணோமே; எல்லாம் வீணாகத் தானே போய்க்கொண் டிருக்கிறது? காம க்ரோத லோப மோக மத மாச்சரியங்களை உண்டாக்கிப் பாவத்தை அதிகப்படுத்திக் கொள்வதற்குத்தானே ஆகிறது? பூரண நிலையை யாரும் அடையவில்லையே!' இப்படி நமக்குச் சந்தேகம் வரும். அப்படிச் சந்தேகப்படவேண்டாம்.

ஒரு மாமரத்தில் நிறைப் பழங்கள் பழுக்கின்றன. விதைகள் உண்டாகின்றன. நன்றாகக் காய்க்கிற மாமரத்தில் முந்நூறு நானூறு மாங்கொட்டைகள் உண்டாகின்றன. கொட்டை உண்டாவதற்குக் காரணம் மீண்டும் மரம் உண்டா

வதற்குத்தான். அத்தனை கொட்டைகளும் மரங்கள் ஆகிவிடு கின்றனவா? அப்படி ஆனால் உலகில் இடமே இராது. ஒரு கொட்டை முளைத்து நல்ல மரம் ஒன்று உண்டானால் போதும். மற்றக் கொட்டைகள் அத்தனையும் வீணாக வியர்த்தமாகப் போனாலும் பரவாயில்லை.

அப்படித்தான் லட்சக் கணக்கில் நாம் இவ்வளவு பேரும் வீணாகப் போய்விட்டாலும் குற்றம் இல்லை. நம்மில் யாராவது ஒருவன் பூரணத்துவம் அடைந்தால் போதும். ஒரு மகான் ஒவ்வொரு தலைமுறையிலும் இருந்திருக்கிறார் என்று கதை கேட்கிறோம். பூரணத்துவம் இல்லாமல் சிலர் ஏமாற்றலாம்; நாம் ஏமாந்து போகலாம். அப்படிப் பத்துப் பேர் உலகைப் பூரணத்துவம் அடைந்ததுபோல ஏமாற்றினாலும் அவர்களில் ஒருவர் நல்லவராய் இருப்பார். கோடி கோடி சரீரம் உண்டாவதற்குப் பயன் அது ஒன்றே போதும். அந்த ஒன்று நமக்கு எல்லாம் சக்தி. அந்த ஒரு சக்தியைச் சிருஷ்டி பண்ணுவதற்காகத்தான் இத்தனை காமம்; இத்தனை துக்கம்; இத்தனை வியாதிகள். "அநேக ஜன்மங்களின் முடிவில் ஞானி என்னை அடைகிறான்" என்று பகவான் கீதையில் சொல்லுகிறார்.

बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते ।

பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே।

உறியடி என்று ஓர் உத்ஸவம் உண்டு. அப்போது சறுக்கு மரத்தில் பத்து இருபது பேர் ஏறுகிறார்கள். எல்லாரும் ஏறிவிட முடியாது. ஒருவன் ஏறுகிறான்; சறுக்கி விழுகிறான். பலர் ஏறி ஏறி விழுகிறார்கள். கடைசியில் ஒருவனாவது ஏறிவிடுகிறான். அந்த ஒருவன் ஏறுவதற்கு இத்தனை பிரயாசை; பல பேர் சறுக்கி விழவேண்டி யிருக்கிறது. அப்படி நம்மில் ஒருவன் பூரணத்துவம் அடைந்துவிட்டால் போதும். இத்தனை கோயில், இத்தனை மதம், பிரசாரம் எல்லாவற்றுக்கும் அது ஒன்றே லட்சியம். மனித ஜன்மா எடுப்பதன் பிரயோஜனமே அதுதான்.

துணி, அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. வீடு அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. நம் மனம் அழுக்கு இல்லாமல் ஆகவேண்டும். அதற்கு அம்பாளுடைய சரணாரவிந்தத் தியானந்தான் வழி.

நம்முடைய மதத்தை ரட்சிக்கவேண்டுமென்று சொல்லுகிறோம். இந்த நவீன காலத்தில் அவரவர்கள் தம் தம் மதத்தை ரட்சித்துக்கொள்ள ஒவ்வோர் ஏற்பாடு செய்துகொண் டிருக்கிறார்கள். பணத்தைச் செலவழித்துப் பிற மதஸ்தர்களைத்

தங்கள் மதத்திற்கு மாற்றிக்கொள்கிறார்கள். 'இப்படி நாம் செய்யவேண்டாமா?' என்று நினைக்கலாம்.

பணம் ஒரு மதத்திற்குப் பலம் ஆகாது. ஒரு முரடன் சண்டை போட்டுத் தன் மதத்தில் எல்லோரையும் சேர வேண்டும் என்பான். அப்போது அவன் மதத்திற்குப் பயம் ஆதாரமாக இருக்கும். எப்போதுமே பஞ்ச காலத்தில் கிறிஸ்துவ மதமும் சண்டைக் காலத்தில் இஸ்லாமிய மதமும் பரவும். சாந்தமாக இருக்கிற காலத்தில்தான் ஒருவன் வேதாந்தியாக வருவான். கோடி கோடி மக்கள் வீணாகப் போனாலும் ஒருவன் பூரணத்துவம் அடைந்துவிட்டால் அதுதான் நம்முடைய மதத்தின் பிரயோஜனம். அவன் ஒருவனுடைய அநுக்கிரகத்தினாலே உலகம் க்ஷேமம் அடையும். இந்த ஒருவன் உண்டாவதற்குத்தான் பிரசாரம் பண்ணுகிறோம்; உபந்நியாசம் பண்ணுகிறோம்; ஜனங்களுக்கு மதத்தில் பக்தியை உண்டு பண்ணுகிறோம். இல்லையானால் இவை ஒன்றுமே வேண்டாம்.

நாம் நிறைந்து இருந்தால்தான் பிறருக்குச் சொல்ல யோக்கியதை இருக்கும். என்னிடம் குறை இருந்தால் நான் சொல்வது பிறரை ஏமாற்றுவதுதான். பகவான் அநுக்கிரகம் பூரணமாக எனக்கு வந்துவிட்டால் யாருக்கும் சொல்லத் தேவை இல்லை. இப்படி உபந்நியாசம் பண்ணுகிற நேரத்தில் என்னிடம் உள்ள குறைகள் என்ன என்பதை நானே விசாரம் பண்ணிக்கொண்டிருந்தால் மிகவும் உபயோகமாக இருக்கும்; அவரவர்கள் நிறைவை உண்டுபண்ணிக்கொள்ள வேண்டும் என்பதுதான் நம்முடைய மதம்.

உலகில் பௌத்த மதம், கிறிஸ்துவ மதம், இஸ்லாமிய மதம் எல்லாம் எப்போது உண்டாயின என்று காலம் தெரிகிறது. அதற்கு முந்தி உலகமே இருண்டு கிடந்தது. ஞானிகளே இல்லை. அஞ்ஞானமயமாக ஜனங்கள் ஆடு மாடுகளைப்போல இருந்தார்கள் என்று சொல்லமுடியுமா? அப்படிச் சொல்கிறவர்களும் இருக்கிறார்கள். அதற்கு முந்தி உள்ள காலத்தை இருட்டுக் காலம் என்று அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் சரித்திரத்தை நன்றாகப் பார்த்தால் அதற்கு முந்தியே வேதத்தை ஆதாரமாகக் கொண்ட வைதிக மதம் இருந்திருக்கிறது எனத் தெரிகிறது; உலகம் முழுவதும் இருந்திருக்கிறது. ஆகையால் எங்கே பார்த்தாலும் வேதம் இருந்திருக்கிறது. வரவரக் குறைந்து இப்போது நாம் கடைசியாக அகப்பட்டுக்கொண்டிருக்கிறோம். இப்போது எல்லோரும் ஒவ்வொரு நாளும் அம்பாளுடைய தியானத்தில் ஈடுபடுவதுதான் வழி.

காயத்திரி, பஞ்சாட்சரம், அஷ்டாட்சரம் இப்படி அவரவர்கள் தங்கள் தங்களுக்கு உபதேசமான மந்திரத்தைத் தியானம் பண்ணிக்கொண்டிருந்தால் இன்னொரு மதத்தைப் பற்றிய அவசியம் ஒன்றுமே இல்லை. அதைப் பண்ணுமல் வெறும் பிரசாரம் பண்ணுவதால் மதத்தை வளர்க்கமுடியாது. பல கோடி மக்களும் இப்படி ஈடுபட்டால் இதில் இரண்டொரு பேர் பூரணத்துவம் அடைவார்கள். எத்தனை ஆபத்துக் காலமாக இருந்தாலும் அவர்களால் நாம் க்ஷேமம் அடைவோம்; உலகம் க்ஷேமம் அடையும்; மதமும் வளரும். இத்தனை பேரும் அம்பாளுடைய தியானத்தில் ஈடுபடுவது கடமை.

நாமே நம்மைப் பரீட்சை பண்ணிக்கொள்ளலாம். பரீட்சை செய்துகொள்வதற்காகத்தான் பகவான் ஸ்வப்னம் உண்டாக்கியிருக்கிறுர். விழித்துக்கொண்டிருக்கும்போது உடல் வேலை செய்கிறது. தூங்கும்போது உடம்புக்கு வேலை இல்லை. நன்ருகத் தூங்கினேன் என்கிருன். அப்போது மனமும் லயப்பட்டுப் போகிறது. காமாட்சியின் கடாட்சம் இருக்கிறதா என்பதைப் பார்க்க ஒரு வழி உண்டு. தூக்கத்தில் ஸ்வப்னம் வரும்போது அவளைத் தியானம் செல்துகொண்டிருப்பது போல வருகிறதா என்று பார்க்கலாம். இல்லை, திருடனுக்குப் பயந்து அழுவது போலவோ காமத்தால் இன்புறுவது போலவோ ஸ்வப்னம் வருகிறதா என்பதையும் பார்த்துக்கொள்ளலாம். வெளிப்படையாகத் தியானம் பண்ணுவதுபோல் ஏமாற்றுகிறவர்களுக்கு ஸ்வப்னத்தில் திருடன்தான் வருவான். காமத்தைத்தான் ஸ்வப்னம் காட்டும். நிஜமான பக்தியாக இருந்தால் ஸ்வப்னத்தில் பகவந்நாமாவை ஜபிப்பதுபோல இருக்கும்! தரிசனம் செய்வதுபோல வரும். அப்போது கொஞ்சம் திருப்தி அடையலாம். இப்படித் தினமும் நம்முடைய பக்தியை ஸ்வப்னத்தில் சோதித்துக்கொள்ளலாம்.

நம்முடைய மதம் பக்தியினுல் தியானத்தினுல் ஒவ்வொருவரும் தம்மை ஆத்மசுத்தி செய்துகொள்வதனுல்தான் வளர்ந்திருக்கிறது. மற்ற மதங்கள் பிரசாரம், சண்டை இவற்றினுல் பெருகியிருக்கலாம். மற்ற மதங்கள் இத்தனை பிரசாரம் செய்தும் சண்டைகள் முதலியவற்ருலும் பண உதவி செய்வதாலும் தங்கள் மதத்தில் வந்து சேருங்கள் என்ருலும் நாமும் வெளியே போகிறவர்களை அடித்து விரட்டிவிட்டுக் கவலைப்படாமல் இருந்துகொண்டிருந்தாலும் நம்முடைய மதத்தில் பலகோடி மக்களுக்குமேல் இருக்கிருர்கள் என்ருல் காரணம் என்ன? யாரோ ஒரு மகான் நன்ருக இருக்கிருர். அவரை ஒருவன் பார்க்கும்போது தன்னை அறியாமல் ஓர் எண்ணம் உண்டா

கிறது. பார்த்தவுடனேயே அவரிடத்தில் ஒரு பக்தி: இந்த மதத்தில் ஒரு நம்பிக்கை அவனுக்கு உண்டாகிறது.

நம்முடைய மதத்தை அபிவிருத்தி பண்ணவேண்டுமென்று பிற மதஸ்தர்களுடைய வழியைப் பின்பற்ற முடியாது. நம்முடைய மதம் ஏற்பட்ட வழி அது அல்ல.

வேதத்தில் ஒரு வாக்கியம் இருக்கிறது, மரம் பூத்தால் வண்டுகள் தாமாகவே அதில் போய் இருக்கும். அவைகளைப் போங்கள் என்று யாரும் சொல்லவேண்டியதில்லை. நம்மை நாமே ஒவ்வொருவரும் சோதித்துப் பார்த்துக்கொண்டு வந்தால் நம்மில் எவனாவது ஒருவன் பூரணத்துவம் அடைந்துவிட்டால் போதும்; லோகம் எல்லாம் அவன் வழிப்படி நடக்கும். இதற்குப் பிரசாரம் பண்ணவேண்டாம். பின் எதற்கு இப்படி எல்லாம் உந்நியாசம் பண்ணவேண்டுமென்றால் ஏதோ தற்கால சாந்தியாக உங்களுக்கெல்லாம் திருப்தி உண்டாக வேண்டும் என்பதற்தாகச் செய்கிறேன். இந்த நேரத்தில் நாம் எல்லாம் அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத் தியானம் பண்ணலாம். அப்படிப் பண்ண ஆரம்பித்துவிட்டால் ஒரு நாளும் நம் மதத்திற்குக் குறைவு வராது. நம்முடைய மதத்துக்குக் குறைவு வந்தால் அது இன்னொரு மதத்தினால் வராது. நம்முடைய அநுஷ்டானக் குறைவினால்தான் வரும். உடம்பில் சக்தி குறையும்போது நோய் வருகிறது. வியாதி வருவதற்கு நம்முடைய பலஹீனந்தான் காரணம்.

சிவபூஜை, பஞ்சாட்சரம், அஷ்டாட்சரம் இவற்றை எல்லாம் நம்மில் எத்தனை பேர் தினமும் ஜபம் பண்ணிக்கொண்டு வருகிறோம்? ஏதோ ஒரு சிலர் வைத்துக்கொண்டிருக்கிறார்கள், புஸ்தகசாலையில் புஸ்தகத்தைப் பாதுகாத்துக்கொண்டிருப்பதுபோல. நம்மிடம் அநுபவமில்லாத குறை, வெகுநாள் முன்பே வந்துவிட்டது. வரவரக் குறைந்து வருகிறோம். இப்படிக் குறைந்து குறைந்து சில கோடி ஜனங்களுக்கு வந்து நிற்கிறது கணக்கு. இதர மதங்கள் பெருகுவதற்குக் காரணம்- இங்கே வருவதற்குக் காரணம் - நம்முடைய அநுஷ்டானக் குறைவே.

எல்லாரும் அம்பாளைத் தியானம் பண்ணவேண்டும். எனக்கு முக்கியம் அம்பாள். அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத்தான் லோகக்ஷேமார்த்தம் தியானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். எல்லாரும் பண்ணவேண்டும். அம்பாளும் ஸ்வாமியும் சேர்ந்து அர்த்த நாரீசுவரராகவும் இருக்கிறார்கள். லோகக்ஷேமார்த்தம் ஒரே பிரம்ம ஸ்வரூபம் பரமசிவனாகவும் மகாவிஷ்ணுவாகவும் பிரம்மாவாகவும் இருந்தாலும் இவை எல்லாம் ஒரே ஸ்வரூபம். ஒரே பரமாத்மா, மூன்று ரூபத்தை

எடுத்துக்கொண்டு இப்படி லோகத்திற்கு அநுக்கிரகம் பண்ணச் செயல்படுகிறது. சரஸ்வதி அஷ்டோத்தரத்தை எடுத்துக் கொண்டாலும்,

ब्रह्मविष्णुशिवात्मिकायै नमः ।

ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாயை நம:

என்று வருகிறது. லக்ஷ்மி அஷ்டோத்தரத்தை எடுத்துக்கொண்டாலும் இப்படியே வருகிறது. அம்பாளே பிரம்ம ரூபமாகச் சிருஷ்டிகர்த்ரியாகவும் கோவிந்த ரூபிணியாகக் கோப்திரியாகவும் ருத்ர ரூபமாக ஸம்ஹார ரூபிணியாகவும் விளங்குகிறாள் என்று லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் இதே கருத்து வருகிறது. அவள் ஒருத்திதான் இப்படியெல்லாம் விளையாடுகிறாள். இதைப் புரிந்துகொண்டு அவளுடைய சரணாரவிந்தத் தியானம் பண்ணி நம்முடைய மதத்தை ரட்சிக்கவேண்டியது நம் கடமை.

உலகம் முழுவதும் நம்முடைய மதமாக இருந்தது. இப்போது மாறிப்போய் இருக்கிறது. நம்மில் எவனாவது ஒருவன் நிரம்பி வந்தால் அப்படி மறுபடியும் செய்யலாம். ஆகையால் நீங்கள் அந்தச் சகாயம் பண்ணவேண்டும். நம்முடைய கோளாறுகளை நாமே நீக்கிக்கொள்ள வேண்டும். நாம் நிறைந்து போய்விட்டால் பிரசாரம் பண்ணவேண்டாம். ஒவ்வொரு நாளும் அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத் தியானம் பண்ண வேண்டும். இல்லையானால் முன்பு சொன்னதுபோலச் சாப்பிட வேண்டாம்: உத்தியோகம் வேண்டாம்; குழந்தை குட்டிகள் வேண்டாம். நாளைக்குச் சாகப்போவதை இன்றே செத்து விடலாம். எனக்கும் உலகம் முழுவதும் நம் மதம் பரவவேண்டும் என்றுதான் ஆசை. அதற்காகச் சண்டைக்குப் போக என்றால் முடியாது.

நாம் எல்லோரும் சகோதர சகோதரிகள் என்று வெறும் வாயளவில் சொல்லிக்கொண்டிருந்தால் போதாது. நாம் எல்லோரும் சகோதர சகோதரிகள் என்கிற உணர்ச்சி வர வேண்டுமானால் நம் எல்லோருக்கும் ஒரே தாய் ஒரே தகப்பன் தான் என்கிற உண்மை தெரிய வேண்டும்.

जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ।

ஜகத: பிதரௌ வந்தே பார்வதீபரமேச்வரௌ|

என்று காளிதாசன் சொன்னான் என்று நாம் காதாலே கேட்டுக் கொண்டிருக்கிறோம். நான்கு பேருக்கு, இரண்டு பேருக்கு அம்மா அப்பாவாகப் பலர் இருக்கிறார்கள். எல்லாருக்கும் அம்மா அப்பா யார்? பார்வதி பரமேசுவரர்கள்தாம் என்பதை உண்மையாகப் புரிந்துகொண்டுவிட்டால் நாம் எல்லோரும்

அவர்களுடைய குழந்தைகள், சகோதர சகோதரிகள் என்கிற எண்ணம் வந்துவிடும். சாட்சாத் ஜகன்மாதாவைத் தெரிந்து கொள்கிறவரைக்குந்தான் துவேஷம், விரோதம், வெறுப்பு எல்லாம் இருக்கும். அவளைத் தெரிந்துகொண்டு விட்டால் நமக்குள் துவேஷம் வராது; தப்புக் கண்டுபிடிக்க வராது. வெறுப்பு வராது. நாம் எல்லோரும் சகோதரர்கள் என்கிற அன்பு வந்துவிடும்.

நம்மிடையே குறை இருக்கிறவரைக்கும் பிரசாரம் பண்ண முடியாது. நிறைவு வந்தால் பிரசாரம் பண்ணவேண்டிய அவசியம் இல்லை. ஆகையால் இப்படி நான் உபந்நியாசம் பண்ணவேண்டாம். இருந்தாலும் எனக்கு இப்படிப் பேசும் போதுதான் அந்த நினைவுகள் எல்லாம் வருகின்றன. பேசும் பொழுது என் நினைவையும் சுத்தப்படுத்திக் கொள்கிறேன். நினைக்கிறதைச் செயலாக்கவேண்டும் என்று அம்பாளைப் பிரார்த்திக்கிறேன். எப்போதெல்லாம் குறை தோன்றுகிறதோ அப்போது அம்பாளிடத்தில் முறையிட்டு அந்தக் குறை இல்லாமல் இருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். முதலில் நாம் தப்புப்பண்ணுமல் இருந்தால் போதும். அநுஷ்டானங்களை விடாமல் செய்துகொண்டு அவளுடைய சரணுரவிந்தங்களைத் தியானம் செய்துகொண் டிருந்தால் போதும். ஒருத்தருக்கும் கஷ்டம் வராது. இதற்கெல்லாம் விசை நம்மிடத்தில்தான் இருக்கிறது.

யாராவது ஒரு தலைமுறையில் ஒரு மகான் வரமாட்டாரா என்றுதான் பரம்பரையாக உபதேசம் செய்துவருகிறேம்! உபந்நியாசம் பண்ணி வருகிறேம். படிக்கத் தெரியாவிட்டாலும் நம் குழந்தைக்காவது பயன் படாதா என்று நம் லைப்ரரியில் புத்தகத்தைப் பத்திரமாகச் சேமித்து வைப்பது போன்றது இது. எல்லோரும் காளிதாசனைப்போல் ஜகத்துக்கெல்லாம் மூலமாக இருக்கிற சக்தியைத் தாய் தந்தையாகக் கொண்டு விட்டால் ஆயிரம் மதம் வேண்டாம்; ஆயிரம் சச்சரவுகள் வேண்டாம். அந்த அம்பாளுடைய சரணுரவிந்தத்தைத் தியானம் செய்யலாம்.

2

# மூலமாகிய வேதம்

நம்முடைய மதம் என்பது சைவம், வைஷ்ணவம் என்று இரண்டு பெரிய பிரிவுகளாக இருக்கின்றது: 'இதை இரண்டு மதம் என்று சொல்வதா! ஒரே மதந்தான் என்று சொல்வதா?' என்று சந்தேகம் வரும்.

கிறிஸ்துவ மதத்திலும் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. இருந்தாலும் ஒரே மதம் என்று சொல்கிறார்கள். காரணம் என்ன? இரண்டு பேரும் சமமாகப் பூஜை செய்ய ஒரே கர்த்தரின் பெயரைச் சொல்லி வணங்குகிறார்கள். புத்த மதத்தில் ஹீனயானம், மஹாயானம் என்று இரண்டு பிரிவுகள் இருந்தாலும் இரண்டையும் இரண்டு மதமாகச் சொல்வதில்லை; காரணம், அவர்கள் இரண்டு பேருக்கும் புத்தரே தலைவர்.

அப்படிச் சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் ஒரே ஸ்வாமி இருக்கிறாரா? இல்லை. இப்போது சாதாரண வைஷ்ணவர்கள் எப்படி இருந்தாலும் ஆசாரிய புருஷர்களாக இருப்பவர்கள் சிவன் கோயில் பக்கமே வரமாட்டார்கள். விஷ்ணு தான் அவர்களுக்கு ஸ்வாமி. அவர்களுக்குச் சிவன் ஸ்வாமியே அல்ல. விஷ்ணுவினுடைய பக்தர்கள் அநேகருக்குச் சிவன் ஒரு பக்தன்தான் என்பது அபிப்பிராயம். சைவர்களிலும் சிலர், 'விஷ்ணு ஸ்வாமியே அல்ல. சிவன்தான் ஸ்வாமி. விஷ்ணு அவனுக்கு அடியான்' என்று கொள்கிறார்கள். இப்படி இவர்கள் இரண்டு பேரையும் எப்படி ஒரு மதம் என்று சொல்வது?

'அது போகட்டும்; இவர்கள் இரண்டு பேரையும் ஒரு மதம் என்று சொல்ல இரண்டு பேருக்கும் பொதுவாக ஏதாவது ஒரு மதப் புஸ்தகம் இருக்கிறதா?' என்று கேட்கலாம், சைவர்கள் தேவாரம் முதலிய திருமுறைகளைத் தங்கள் மத நூல்களாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். வைஷ்ணவர்களோ நாலாயிரப் பிரபந்தம் என்கிறார்கள். புஸ்தகங்களும் வேறாகப் போய்விட்டன; ஸ்வாமியும் வேறாகப் போய்விட்டார். அப்படி இருக்க இரண்டு பேரையும் ஒரே மதம் என்று எப்படிச் சொல்வது?

நமக்குள் சைவர்கள், வைஷ்ணவர்கள் என்று வேருகச் சொல்லிக்கொண் டிருந்தாலும் வெள்ளைக்காரன் நமக்கு ஹிந்துக்கள் என்று பெயர் வைத்தானே நாம் வாழ்ந்தோம். அவன் வைத்த பெயர் நம்மைக் காப்பாற்றியது.

அப்படியானல் நமக்கு ஒரு மதமா? இரண்டு மதமா? இது பெரிய சந்தேகமாகிவிட்டது. சைவம், வைஷ்ணவம், சாக்தம், கௌமாரம் என்று பல பிரிவுகள் இருக்கின்றன. பிள்ளையாரை வைத்துக் கும்பிடுகிறவர்கள் இருக்கிருர்கள். அவர்கள் காணபத்தியர்கள். இப்படி உள்ளவை ஆறு மதங்கள் என்று பல நாளாகச் சொல்லிக்கொண் டிருக்கிறோம். வங்காளத்தில் சாக்தர்கள் இருக்கிருர்கள். இங்கே வைஷ்ணவர்களுக்குள் அநேகம் பிரிவுகள் இருந்தாலும் அவர்கள் எல்லாருக்கும் மகா விஷ்ணு ஸ்வாமியாதலால் அவர்களை வேண்டுமானல் ஒரே மதம் என்று சொல்லலாம். அப்படியே சைவர்கள் என்ருலும் வீர சைவம், சித்தாந்த சைவம் என்று பல பிரிவுகள் இருக்கின்றன. இவர்களை எல்லாம் சைவர்கள் என்று சொல்லிவிடலாம். காரணம், இவர்களுக்கு ஸ்வாமி ஒருவரே. ஆனல் வைஷ்ணவர்கள், சைவர்கள், சாக்தர்கள் என்று தனித்தனி ஸ்வாமியை வழிபடுகிறவர்களை ஒரே மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று எப்படிச் சொல்வது?

சாதாரணமாக வைஷ்ணவர்களுக்கு ஸ்வாமி வேறே, புஸ்தகம் வேறே; சைவர்களுக்கு ஸ்வாமி வேறே, புஸ்தகம் வேறே என்று சொன்னலும் அப்படி அன்று. இப்போது இருக்கிறவர்களுடைய மனேபாவத்தைக் கவனித்தால் அது வேறு மதம் என்று சொல்லக்கூடிய ஸ்வபாவம் வளர்ந்திருக்கிறதே தவிர, அவர்களுடைய நூலைப் பார்த்தோமானல் உண்மை தெரியவரும். சைவத் திருமுறைகள், நாலாயிரப் பிரபந்தம் என்கிற இரண்டையும் பாடினவர்களுடைய அபிப்பிராயத்தில் இது வேறு மதம் அது வேறு மதம் என்ற பேதம் இல்லை, இது எங்கள் புஸ்தகம், அது அவர்களுடைய புஸ்தகம் என்று நினைத்திருக்கமாட்டார்கள். ஏனென்ருல் அவர்கள் காலத்திற்கு முந்தியே ஒரு மதம் இருந்திருக்கிறது. ஆழ்வார்கள் பாடுவதற்கு முந்தி வைஷ்ணவ மதம் இருந்திருக்கிறது. நாயன்மார்களுக்கு முந்தியும் சைவ மதம் இருந்திருக்கிறது. இந்த மதத்திற்கு முதல் நூல் எது என்று பார்த்தால் மறைகள்தாம்; வேதங்களே. சைவர்கள் ஈசுவரனையே,

'வேதமோ டாறங்க மாயினனை
வேதநாதன், வேதகீதன், ஆரணன்காண்'

என அநேக இடங்களில் சொல்லுகிறார்கள். வைஷ்ணவ நூல்களிலும் இப்படித்தான், 'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லியிருப்பதை நாம் சரியாகக் கவனித்தால் அவர்களுக்கு மூலப்புஸ்தகம் ஒன்றே என்பது தெளிவாகும். இப்போது இருக்கிறவை அந்தப் புஸ்தகத்தை ஆதாரமாகக் கொண்டு உண்டானவை. இப்படியே நம்முடைய மதங்கள் எல்லாம் வேதத்திலிருந்து வந்தவை. வேர் ஒன்று; கிளைகள் பல.

ஸ்வாமியைக் காட்டிலும் வேதத்தை உயர்வாகப் பேசுகிறார்கள். நான்கு வேதம், ஆறு அங்கம் என்று சொல்லுவார்கள். வேதமாகவும் அங்கமாகவும் இருப்பவன் பகவான். அங்கம் ஆறு இல்லாமற் போனால் வேதத்துக்கு அர்த்தம் தெரியாது. திருவொற்றியூரில் வக்காணிக்கும் மண்டபம் என்று சுவரில் சாசனத்தில் எழுதியிருக்கிறார்கள். வியாகரண மண்டபம் அது. வியாகரணம் ஆறு அங்கங்களில் ஒன்று. எல்லா மதத்திற்கும் மூலம் வேதம். அந்த மூலத்தை ரட்சிக்க வேண்டும். மூலத்தை ரட்சிக்க வேண்டுமானால் அந்த மூலம் எந்தப் பாஷையில் இருக்கிறதோ அந்தப் பாஷையை ரட்சிக்க வேண்டும். வேதத்தை ரட்சிக்கத்தான் ஸம்ஸ்கிருத பாஷை அவசியம்.

திருவள்ளுவர் குறளை எழுதி அதை அரங்கேற்ற மதுரைக்கு வந்தார். பொற்றாமரைக் குளத்தில் சங்கப் பலகை இருந்தது. அந்தக் காலத்தில் யாராவது நூல் எழுதினால் அதைச் சிதம்பரத்தில் அரங்கேற்றுவார்கள். அல்லது மதுரையில் அரங்கேற்றுவார்கள். கம்பர், ராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றினார் என்று தெரிகிறது. இப்படி ஒவ்வோர் இடத்தில் அரங்கேற்றுவது வழக்கம். மதுரையில் சங்கப் பலகை இருந்தது. அதிலே கொண்டுபோய் எல்லாரும் நூல்களை வைத்தால் எந்த நூல் மிக உயர்ந்ததோ அதற்கு மாத்திரம் பலகை இடம் கொடுக்கும். பாக்கி இருப்பது குளத்தில் விழுந்துவிடும். திருவள்ளுவர் தம் புஸ்தகத்தைக் கொண்டுபோய்ச் சங்கப்பலகையில் வைத்தாராம். குட்டைப் புஸ்தகம் அது. அது மாத்திரம் பலகையில் இருக்கப் புலவர்கள் எல்லாரும் குளத்தில் விழுந்துவிட்டார்களாம். குறள் அங்கே அரங்கேற்றப்பட்டது. இந்தப் புஸ்தகத்தை இன்னார் பண்ணினார், அதில் இன்ன உயர்ந்த விஷயங்கள் இருக்கின்றன என்று அதைப்பற்றிப் பல புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அப்படிப் பலர் தோத்திரம் பண்ணிய பாடல்களைச் சேர்த்து இன்ன பாட்டு இன்னார் பாடினது என்று குறிப்பு எழுதி வைத்திருக்கிறார்கள். திருவள்ளுவ மாலை என்று அதற்குப் பெயர். அதில் ஒருவர் பாடுகிறார்:

'ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேதம் உடைத்துத் தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து.'

பாஷையை வைத்துக்கொண்டு, 'இது என் பாஷை, அது உன் பாஷை. இந்தப் பாஷைதான் உயர்ந்தது, அந்தப் பாஷைதான் உயர்ந்தது' என்று இப்போது பலர் சண்டை போடுவதைப் பார்த்தால் மிகவும் துக்கமாக இருக்கிறது. நாம் எல்லாரும் ஊமையாகப் போனால் தேவலை என்றுகூடத் தோன்றுகிறது. நம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க இருக்கும் கருவி பாஷை. அது எல்லா ஊரிலும் ஒன்றாக இருக்க முடியாது. ஒவ்வொரு கூட்டம் ஒவ்வொரு பாஷையைப் பேசும். ஒவ்வோர் ஊரிலும் வெவ்வேறு பாஷை இருக்கும். பாஷையில் சண்டை என்பது பெரிய தப்பு. மதத்தைக் காட்டிலும் ஸ்வாமியைக் காட்டிலும் பாஷைதான் உயர்வு என்று நினைப்பது மிகவும் தப்பு.

'சைவமும் தமிழும் தழைத்தோங்க' என்று சைவத்தோடு தமிழையும் சேர்த்துச் சொல்லிக்கொள்கிறார்கள். இப்படிப் பாஷை அபிமானத்தைத் தனியாக வைத்திருப்பதே பெரிய அபசாரம் என்று தோன்றுகிறது. இதனால் லோகத்தில் பல கஷ்டங்கள் வருகின்றன. மதத்தினாலே சண்டை என்று இருக்கிறதைப் பார்த்தால், 'மதமே வேண்டாம்; பாஷையே வேண்டாம்' என்றுதான் தோன்றுகிறது. கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு, காங்கிரஸ் என்று, கட்சிகள் ஒன்றுக்கொன்று சண்டை யிட்டுக்கொள்ளுவதானால் கட்சி எதற்கு? ராஜாங்கம் எதற்கு? என்றுகூட, எனக்குத் தோன்றுவது உண்டு. எல்லாம் ஒரே காடு மாதிரி இருந்துவிட்டுப் போகட்டும் என்று ஒரு சமயம் தோன்றுகிறது. காடு மாதிரி இருந்தால் இவ்வளவு கஷ்டம் இல்லை. மிருகங்கள், பட்சிகள் இவற்றுக்கிடையே இத்தனை சண்டை, இத்தனை துவேஷம், இத்தனை பகை இல்லை. மதம் இருந்தால் சண்டை வருகிறது. கட்சி இருந்தால் சண்டை வருகிறது. பாஷை இருந்தால் சண்டை வருகிறது. இது எவ்வளவு பெரிய தப்பு?

இப்போது தமிழ் அபிமானம் உள்ளவர்கள் ஸம்ஸ்கிருதத்தைக் கண்டால் ஆக்ஷேபிக்கிறார்கள். இவர்கள் ஹிந்தியைக்கூட ஆக்ஷேபிக்கிறார்கள். காரணம், ஹிந்தி, ஸம்ஸ்கிருத பாஷையை அடிப்படையாகக் கொண்டிருப்பதுதான். ஹிந்தி வந்தால் அதை ஒட்டி ஸம்ஸ்கிருதம் வந்துவிடும் என்பது இவர்கள் எண்ணம். வடக்கே போனால் இதைவிட அதிகமாக ஹிந்திப்

புலவர்கள் சம்ஸ்கிருதத்தை எதிர்க்கிறார்கள். காரணம், ஹிந்தியைத் தேசீய பாஷையாக மாற்றவேண்டும் என்பது அவர்களது எண்ணம். இதற்குக் காரணம் அதிகமான ராஜ்யங் களில் ஹிந்திதான் பேசுகிறார்கள் என்கிறார்கள். அதே சமயம் சிலர், 'சம்ஸ்கிருதத்தை அப்படிச் செய்துவிடலாமே. எல்லா ராஜ்யங்களிலும் சம்ஸ்கிருதம் இருந்திருக்கிறது. வைத்தியம், தத்துவம் முதலிய எல்லாத் துறைகளிலும் சம்ஸ்கிருதத்தில் புஸ்தகங்கள் இருக்கின்றன' என்று சொல்ல ஆரம்பிக்கிறார்கள். இதைக் கேட்கும்போது அடியோடு சம்ஸ்கிருதத்தை அழித்து விட வேண்டும் என்று ஹிந்தி வித்வான்கள் ஆரம்பித்து விட்டார்கள். தமிழ்நாட்டில் முப்பது வருஷமாகத்தான் சம்ஸ்கிருதத்தின்மேல் வெறுப்பு வளர்ந்து வருகிறது. அதற்கு முந்திக் கிறிஸ்துவர்கள் முதற்கொண்டு அதில் அன்பு கொண்டிருந்தார்கள்.

ஹிந்தியைத் தேசீய பாஷை என்றால் சம்ஸ்கிருதத்தை உலக பாஷை,-'இன்டர்நாஷனல் லாங்க்வேஜ்'-என்று சொல்ல வேண்டும். அதற்கு எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. சம்ஸ்கிருதம் எந்தப் பிராந்திய பாஷையும் அல்ல; பொதுப் பாஷை. சம்ஸ்கிருதம் படிக்கிறது கஷ்டம் என்றால் ஹிந்தி படிக்கிறது அதைக் காட்டிலும் கஷ்டம். ஹிந்தி படிக்க ஆறு மாதம் வேண்டும் என்றால் அதைவிடச் சுலபமாகச் சம்ஸ்கிருதத் தைத் கற்றுக்கொள்ளலாம் என்பதை ஒருவர் நிரூபித்துக் காட்டியிருக்கிறார்.

சம்ஸ்கிருதத்திற்கு இங்கே வாய் எதிர்ப்புத்தான் இருக் கிறது. வடக்கே காரியத்தில் எதிர்க்கிறார்கள். அரசாங்க பாஷையாக ஹிந்தி இருக்கவேண்டும் என்ற அரசியல் நோக்கத் திற்காக ஒரே கட்சியாக இருந்துகொண்டு சம்ஸ்கிருதத்தை எதிர்த்து நிற்கிறார்கள். சாஸ்திரம், வேதம், புராணம் எல்லாம் சம்ஸ்கிருதத்தில் இருக்கின்றன என்பதனாலேயே இங் குள்ளவர்களுக்கு இன்னும் அதில் நிறையப் பக்தி இருக்கிறது. பாஷை என்ற ஒரு காரணத்திற்காக மட்டும் சம்ஸ்கிருதம் வேண்டும் என்றால் நான்கூட வேண்டாம் என்று சொல்வேன். ஆனால் நம்முடைய மதத்திற்கு மூலமான வேதம், சாஸ்திரம் எல்லாம் அந்தப் பாஷையில் இருப்பதனால் வேதத்தை ரட் சிப்பதற்காக அதையும் ரட்சிக்கத்தான் வேண்டும்.

திருக்குறளுக்குச் சிறப்புப்பாயிரம் பாடின, முன்னே சொன்ன புலவரும் இப்படித்தான் நினைத்திருக்கிறார். 'சம்ஸ் கிருதம் உயர்வா? தமிழ் உயர்வா?' என்று யோசனை பண்ணிப் பார்த்தேன். இதுவரைக்கும் சம்ஸ்கிருதம் உயர்வு என்று சொல்லவேண்டியிருந்தது. இன்று அது நிவிருத்தியாகிவிட்டது.

சம்ஸ்கிருதமும் தமிழும் சமந்தான். ஒன்று உயர்வு, ஒன்று மட்டம் என்று சொல்ல முடியாது. எதனாலே என்றால் சம்ஸ்கிருதத்தில் வேதம் இருக்கிறது. தமிழில் இப்போது திருக்குறள் இருக்கிறது. இதுவும் ஒரு தமிழ்மறை. வேதத்திற்குச் சமமான ஒன்று தமிழில் இல்லை என்றால் சம்ஸ்கிருதம் உயர்வாக இருக்கலாம். திருக்குறள் வேதத்திற்குச் சமானமாக இருக்கிறது. அதனாலே சம்ஸ்கிருதம், தமிழ் இரண்டையும் சேர்த்துப் பார்க்கிறபோது ஒன்றைக் காட்டிலும் ஒன்று சிறந்தது, உயர்ந்தது எனச் சொல்ல முடியாது.

'ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேதம் உடைத்துத் தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து'

என்று அவர் சொல்லிவிட்டார்.

சம்ஸ்கிருதத்திற்கு எதனால் கௌரவம்? வேதம் அதில் இருப்பதனால்தான் என்பதை அந்தப் புலவர் சொல்லியிருக்கிறார்.

'வேதம் இருந்தால் என்ன? எல்லாவற்றையும் மொழி பெயர்த்து விடலாமே' என்று நினைக்கலாம். பல நூல்கள் அப்படி இந்தக் காலத்தில் மூல பாஷையிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. அவற்றில் மூலமே உருமாறிப் போய்விடுகிறது. ஒரு விஷயத்தை ஒரு மனிதன் சொன்னால் அது அவனிடமிருந்து எந்த வாக்கில் வருகிறதோ அதே வாக்கில் இருந்தால் ஒரு காலத்தில் இல்லாவிட்டாலும் மற்றொரு காலத்தில் அதன் உண்மைப் பொருளைத் தெரிந்துகொள்ள முடியும். ஒரு பொருளைச் சொல்வதற்கு ஒரு பாஷையில் அழகான சொல் ஒன்று இருக்கும். அதை மொழி பெயர்க்கும்போது அதற்கு ஏற்ற சொல் இதர பாஷையில் இருக்காது; சில சமயங்களில் நான்கைந்து வார்த்தைகளைப் போட்டுச் சுற்றி வளைத்துச் சொல்லவேண்டியிருக்கும். அந்த ஒரு வார்த்தை அந்த இடத்தில் எந்த அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிறதோ அந்த அபிப்பிராயத்தை மொழிபெயர்ப்பில் காணமுடியாமல் போகலாம். இரண்டாவது, மொழிபெயர்க்கிறவன் தன்னுடைய ஞானத்திற்கு ஏற்றாற் போலத்தான் பொருள் பண்ணிக்கொண்டு சொல்ல முடியும். ஒருவன் பண்ணிய மொழிபெயர்ப்புச் சரி அல்ல என்று இன்னொருவன் பண்ணுவான். பண்ணுகிறவனுடைய அபிப்பிராயத்திற்கும் மதத்திற்கும் ஏற்றபடி அந்த மொழிபெயர்ப்பு இருக்கும். மொழிபெயர்ப்புகளில் எதை எடுத்துக்கொள்வது என்ற சந்தேகம் வரும்போது, மூலம் எப்படி இருக்கிறது என்று பார்க்கத் தோன்றும்.

ஆகவேதான் மூலத்தை அப்படியே வைத்துக்கொண் டிருக் கிறோம். அதிலிருந்து பல கிளைகள் உண்டாகியிருக்கலாம். எல்லாம் ஒன்றுதான். பெயரைச் சொல்லி அழைக்கிறார்கள் என்ற நினைவு நமக்கு வந்துவிட்டால், இவன் அவனை மாற்ற வேண்டும் என்றும் அவன் இவனை மாற்ற வேண்டும் என்றும் நினைக்கமாட்டார்கள். அப்படி நினைத்து மாறவேண்டியது இல்லை. மூலமாக இருக்கும் வேதத்தைத் தங்கள் புஸ்தகமாகக் கொண்டவர்களில் ஒவ்வோர் ஆசாரியருக்கு ஒவ்வோர் அபிப் பிராயம் தோன்றியிருக்கிறது.

ஆதி சங்கராசாரியார், 'பரப்பிரம்மம் ஒன்றுதான். அந்த ஒன்று அநேக வேஷம் எடுத்துக்கொண் டிருக்கிறது. வேஷம் பல; மூலமாகிய பரமாத்ம ஸ்வரூபம் ஒன்று' என்று நிர்த்தாரணம் பண்ணியிருக்கிறார்.

அதற்கு அடுத்தாற்போல வைஷ்ணவ சித்தாந்தத்தில், 'விஷ்ணு ஒருவர்தாம் ஸ்வாமி. மற்றவர்கள் ஸ்வாமியே அல்ல. மற்றவர்கள் இந்த ஸ்வாமிக்குப் பக்தர்கள்தாம்' என்று இருக் கிறது. சைவர்கள், 'சிவன் ஒருவன்தான் ஸ்வாமி. மற்றவர்கள் ஸ்வாமியே அல்ல' என்று சொல்கிறார்கள். இவர்கள் இரண்டு பேருக்கும், 'சிவன் ஸ்வாமியா விஷ்ணு ஸ்வாமியா?' என்று சண்டை, வாக்குவாதம். சிவபுராணத்தில் பார்த்தால் சிவன் விஷ்ணுவோடு சண்டை போட்டிருப்பதாகவும் விஷ்ணுவை அடக்கியிருப்பதாகவும் வரும். இப்படியே விஷ்ணு புராணத்தை எடுத்துப் பார்த்தால் சிவன் விஷ்ணுவைப் பூஜித்திருப்பதாகவும் அவரோடு சண்டை போட்டுக்கொண் டிருப்பதாகவும் வரும். 'ஆகவே அவர் வேறே, இவர் வேறே; ஒருவராக இருந்தால் சண்டை போடுவார்களா? வேறான பொருள் ஒன்றாக இருக்க முடியாது. எங்கள் விஷ்ணுவேதான் ஸ்வாமி' என்று வைஷ்ண வர்கள் சொல்லுவார்கள்.

இவர்களுடன் சைவர்கள் வேறு விதத்தில் சண்டைக்குப் போக வேண்டும். 'அப்படியானால் மகாவிஷ்ணுவினுடைய அவ தாரந்தானே ராமன்? மகாவிஷ்ணுவினுடைய அவதாரந்தான் பரசுராமன் என்று சொல்லுகிறீர்களே, இரண்டு பேரும் சண்டை போட்டுக்கொண் டிருக்கிறார்களே. சண்டை போட்டுக் கொள்வதனால் இரண்டு பேரும் வேறாகப் போய்விடுவார்களா?' என்று அவர்களைக் கேட்கலாம்.

இப்படி எல்லாம் வேதத்தை மூலமாக வைத்துக்கொண்டு அதிலிருந்து கிளைத்த அபிப்பிராயங்களை ஒன்று சேர்த்துக் கொண்டு வந்திருக்கிறோம். அபிப்பிராயங்களையே ஆதாரமாகக் கொண்டு, மூலத்தை மாற்றி வெவ்வேறு மதங்களைச் செய்துவிட வில்லை. மூலம் ஒன்றாக இருக்கிறது. மூலம் மொழிபெயர்க்கப்

படாமல் மூல பாஷையிலேயே இருந்துகொண்டிருப்பதனால்தான் அந்த அந்த ஆசாரிய புருஷருக்கு ஏற்றபடி காலத்திற்குக் காலம் அபிப்பிராயம் ஒன்றுசேர்ந்து வந்திருக்கிறது. இன்னொரு மதமாகப் போகவேண்டிய அவசியம் ஏற்படாமல் இருந்து வந்திருக்கிறது. இந்த மதங்களுக்கெல்லாம் வைதிக மதம் என்ற பொதுப்பெயர் இருந்துகொண்டிருக்கிறது. வேதத்தைப் பிரமாணமாக, ஆதாரமாகக் கொண்ட மதங்கள் இவை. அந்த மூலம் அழிந்து போய்விட்டால் எல்லாம் அழிந்துபோய்விடும். அந்த மூலந்தான் பரமாத்ம ஸ்வரூபம் என்று எல்லா ஆசாரியர்களும் சொல்லியிருக்கிறார்கள். அந்த மூல வாக்கியத்திலிருந்துதான் எல்லாக் கொள்கைகளும் உண்டாயிருக்கின்றன.

இதற்குத் திருஷ்டாந்தமாக நான் ஒன்று சொல்வது வழக்கம். கிறிஸ்துவர்களின் பைபிளை (Bible) எடுத்துக்கொண்டால் அவர்கள் சொல்லுகிறார்கள்: 'முதலில் ஆதாம் (Adam) என்ற ஆண் இருந்தார். ஈவ் (Eve) என்ற பெண் ஒருத்தி அதற்குப் பிறகு உண்டானாள். ஒரு மரம் இருந்தது. அந்த மரத்தின் பழத்தைச் சாப்பிடவேண்டும் என்று அந்தப் பெண் சொன்னாள். ஆண் சாப்பிடவில்லை. பெண் சாப்பிட்டாள்.'-இது ஒரு கதை. இதனுடைய தத்துவம் என்ன?

இதுபோலவே வேதத்திலும் சிறிது மாறுதலாக ஒரு கதை வருகிறது. ஒரு மரம் இருக்கிறது. அதற்குப் பிப்பலம் என்று பெயர். அந்தப் பிப்பல மரத்தில் இரண்டு பட்சிகள் இருந்தன. அதிலுள்ள பழத்தை ஒரு பட்சி சாப்பிட்டுக்கொண்டிருந்தது. இன்னொரு பட்சி சாப்பிடவில்லை. சாப்பிடாமல் ஆனந்தமாகப் பிரகாசித்தது. சாப்பிடாததனால் இது சுயம் பிரகாசியாக ஆனந்தமாக இருக்கிறது. இதுதான் நம்முடைய வேதத்திலும் மூலமாக வருகிறது.

பிப்பல மரத்திற்குத் தமிழில் அரசமரம் என்று பெயர். இதைத்தான் வடமொழியில் போதித்துருமம் என்கிறார்கள். புத்தருக்கும் அரசமரத்தடியில்-போதிமரத்தடியில்-தான் ஞானம் உண்டாயிற்று என்று சொல்கிறார்கள். பிப்பலம், அரசமரம், போதித்துருமம், ஞான தரு என்பவை எல்லாம் ஒன்றுதான். இதைத்தான் வெள்ளைக்காரர்கள் ஞானவிருக்ஷம் (Tree of Knowledge), என்கிறார்கள்:

இதற்கு உள்ளே இருக்கிற தத்துவத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும். விருட்சம் என்பது நம்முடைய சரீரம். உள்ளே பரமாத்மா, ஜீவாத்மா என்று இரண்டு பட்சிகள் இருக்கின்றன. ஜீவாத்மாவிற்கு இந்திரியங்களின் சம்பந்தம் ஏற்படுகிறது. மாயையினால் ஆசை ஏற்படுகிறது. பரமாத்மா கர்மேந்

திரியங்கள், ஞானேந்திரியங்கள் இவற்றில் அகப்படாமல் சுயம் பிரகாசியாய் இருக்கிறான். இதுதான் தத்துவம்.

மூலம் எதைச் சொன்னாலும் அதை மொழிபெயர்ப்பது என்ற காரியத்தில் ஈடுபடாமல் அப்படியே ரட்சித்துக்கொண்டு வந்தால் தத்துவம் லோகத்தில் இருக்கும். உண்மையான சாந்தி கிடைக்கும். இந்த மூலத்தை அடிப்படையாகக்கொண்டு எத்தனையோ மகான்கள் அதற்குப் பிறகு வந்திருக்கலாம். தனியாக ஒரு மதத்தை ஏற்படுத்த வேண்டுமென்று அநேக விஷயங்களைச் சொல்லியிருப்பார்கள். இந்தப் பிரகாசம் எல்லாம், மூலத்தை ரட்சித்துக்கொண்டிருப்பதால்தான். ஜர்மனி, ரஷ்யா, லண்டன், ஸ்வீடன் போன்ற பல நாடுகளில் இன்றைக்குச் சம்ஸ்கிருதத்தில் பல நூல்கள் இருக்கின்றன. கணக்கு வழக்கு இல்லாமல் அறிஞர்கள் வேதமாகிய இந்த மூலத்தை வைத்துக் கொண்டு ஆராய்ச்சி பண்ணிப் பல பாஷைகளில் பலவிதமான நூல்களை எழுதியிருக்கிறார்கள். இவ்வளவுக்கும் காரணமான மூலம், காப்பாற்றப்பட்டு வரவேண்டும். வேதம், சம்ஸ்கிருதத்தில் இருக்கிறது என்பதற்காகவே சம்ஸ்கிருதம் அழிந்துபோகாமல் காப்பாற்றப்பட வேண்டும்.

'வேதமோடு ஆகமம்'

என்று தமிழ் வேத நூல்களில் சொல்லியிருக்கிறார்கள். சைவ சித்தாந்தம் நன்றாக இருக்க வேண்டுமானால் அதற்கு மூலமான வேதம், ஆகமம் ஆகிய நூல்கள் உள்ள சம்ஸ்கிருதம் நன்றாக இருக்கவேண்டும். வெறும் பாஷை அபிமானத்திற்காக ஒன்றை ஆதரிப்பது, ஒன்றை அழிப்பது என்ற போக்கில் நாம் போகக் கூடாது. உலகில் எத்தனை மதங்கள் இருந்தாலும் மூலம் வேதம். நமக்குள் எத்தனை பேதங்கள் இருந்தாலும் மூல புஸ்தகம் வேதம். மூல ஸ்வாமி பரம்பொருள். மற்றதெல்லாம் அவரவர்களுடைய அபிப்பிராயத்தின்படியான சித்தாந்தம். வேதத்தை மறந்துவிட்டுத் திருவாய்மொழி, தேவாரம் முதலியவை படித்துப் பிரயோஜனம் இல்லை. மூல தத்துவத்தை என்றைக்கும் அறிந்துகொள்ள முடியாமல் போய்விடும்.

வேர் பூமிக்குள்தான் இருக்கும். மறைந்துதான் இருக்கும். வேரைப் பார்க்கமுடியாது. பூவைப் பார்க்கலாம். கிளைகளைப் பார்க்கலாம்; பழத்தைப் பார்க்கலாம்; வேரைப் பார்க்க வேண்டும் என்று மண்ணைக் கிளறினால் மரமே அழிந்துவிடும். வேர் மண்ணுக்குள் மூடித்தான் கிடக்கவேண்டும்.

வேதத்தில் முன் பின் போக நடுவில் உள்ள விஷயங்களுக்கு ரகசியம் எனப் பெயர் வைத்தார்கள். வேதம் முழுவதையுமே தமிழில் மறை என்கிறார்கள். மறை என்ற பெயர் தமிழில் மிகப்

பொருத்தமகக இருக்கிறது. வேர் தெரியாமல் மண்ணுக்குள் தான் இருக்கவேண்டும். வேராகிய வேதத்தைத் தனியாக, ரகசியமாக உட்கார்ந்து சொல்லிக்கொண்டுதான் இருக்க வேண்டும்.

அதற்கு விளம்பரம் எதுவும் இல்லை. எழுதின சுவடி எதுவும் இல்லை. புஸ்தகம் வைத்துக்கொள்பவன் அதமன் எனச் சொல்லுகிறார்கள்.

गीती शीघ्री शिरःकंपी तथा लिखितपाठकः ।
अनर्थज्ञोऽल्पकण्ठश्च षडेते पाठकाधमाः ॥

கீதீ ஶீக்ரீ ஶிர: கம்பீ ததா லிகிதபாடக :।
அநர்த்தஜ்ஞ: அல்பகண்டஶ்ச ஷடேதே பாடகாதமா: ॥

கீதீ என்றால் பாடுகிறவன்; ஶீக்ரீ - வேகமாக மெயில் மாதிரி சொல்கிறவன்; சிர: கம்பீ - தலையை ஆட்டுகிறவன்; அப்படியே லிகித பாடக:- எழுதிக்கொண்டு படிக்கிறவன்; அனர்த்த க்ஞன்;-விபரீதமாகப் புரிந்துகொள்பவன்; அல்ப கண்டன்- தொண்டை இல்லாதவன் ஆகிய ஆறு பேரும்.

पाठकाधमाः

பாடகாதமா:

என்று சொல்லியிருக்கிறது. வேதத்தைச் சுத்தமான ஸ்வரந் தோடு கணீர் என்று தலையாட்டாமல் சொல்ல வேண்டும்; எழுதிப்படிக்கக்கூடாது; புஸ்தகம் பார்க்கக்கூடாது. 'வேதத்துக் குப் பெயர் ச்ருதி: காதாலே கேட்பது ச்ருதி. தமிழில், 'எழுதாக் கிளவி' என்பார்கள். கிளவி என்றால் நூல். வேதம் எழுதாத நூல்.

ஒரு ஜாதி இதற்காகவே உட்கார்ந்து மனத்திற்குள் உருப் போட்டுக்கொண்டிருக்கவேண்டும். அந்த ஜாதி, தன் காரியத்தை விட்டால் வேர் போய்விடும். வேர் போய்விட்டது என்றால் இலை, காய், கிளை எல்லாம் வாடிப்போய்விடும். இப்படி அழிந்து போகாமல் இருக்க இவன் வேறு ஒருவன் வாய்மூலமாகத் தெரிந்துகொள்ளவேண்டும்; தெரிந்துகொண்டதை இவன் இன்னொருவனிடம் கொடுத்தாகவேண்டும். இந்த ஜாதிக் குச் செய்தாகவேண்டிய ஒரு பெரிய கடமை இருக்கிறது.

'திரைகடலோடியும் திரவியம் தேடு'

என்று வைசியர்களுக்குச் சொன்னார்கள். பிராம்மணன் அக்கரைச் சீமைக்குச் சென்றால் அவனை ஜாதிப் பிரஷ்டம் பண்ணினார்கள். பணத்திற்காக அவன் வெளியூர்களுக்கு ஓடிவிடுவது என்று வந்துவிட்டால் வேதத்தை ரட்சித்தாகவேண்டுமே! யார்

ரட்சிப்பார்கள்? அவனவன் அவனவனுக்குக் குறிப்பிட்ட கர்மாக்களைச் செய்தால்தான் உலகம் காப்பாற்றப்படும்; மூலம் ரட்சிக்கப்படும். இதற்காகத்தான் ஒரு தனி ஜாதியே ஏற்பட்டது. இந்தக் காரியமே இல்லை என்றால் தனி ஜாதி இருக்கவேண்டிய அவசியமே இல்லை. காரியம் இல்லாமல் ஒரு ஜாதி இருந்தால், அது, தானே அழிந்து போய்விடும்.

சுங்கச் சாவடிகள் இருக்கின்றன. முன்பு சுங்கம் வசூல் செய்தார்கள்; சாவடி இருந்தது. இப்போது சுங்கம் வாங்கப் படுவதில்லை. அந்தச் சாவடிகளைப் போய்ப் பாருங்கள். ஒவ்வொரு செங்கல்லாக விழுந்துவிட்டது. ஒரு காரியம் இல்லாவிட்டால் சுங்கச் சாவடி மாதிரிதான் ஆகிவிடும். அக்கிரகாரங்கள் அப்படித்தான் ஒவ்வொரு செங்கல்லாக இடிந்து விழுந்து கொண்டிருக்கின்றன. நாம் அழியக்கூடாது என்பதற்காகச் சொல்லவில்லை. உலகம் முழுவதும் ஆதி தத்துவமாகப் பிரகாசித்துக்கொண்டிருந்த ஒன்றை அப்படியே நாம் ரட்சித்தாக வேண்டும். பொருள் தெரியவில்லையே என்று கவலைப்பட வேண்டாம். அது உருமாறிப் போகாமல் நம்முடைய தலைமுறையிலும் வரப்போகிற தலைமுறையிலும் விளங்கும்படியாகச் செய்ய வேண்டும்.

ஒரு பொட்டையன் விளக்கை எடுத்துக்கொண்டு நடந்து போனான்; எதிரே வந்தவன், 'ஏண்டா பொட்டை, உனக்கு எதற்கு விளக்கு?' என்று கேட்டானாம். 'உனக்குக் கண் இருக்கிறதல்லவா? நீ என் மேலே விழாமல் இருப்பதற்குத்தான் நான் விளக்கை வைத்திருக்கிறேன்' என்று சொன்னானாம். யாருக்குக் கண் இருக்கிறதோ அவனுக்கு அது உபயோகப் படுகிறது.

நம்முடைய மதங்களுக்கெல்லாம் மூலமான வேதத்தை நாம் புரிந்துகொண்டாலும் புரிந்துகொள்ளாவிட்டாலும் வரப் போகிற தலைமுறையினருக்காவது உபயோகப்படட்டும் என்று நாம் காப்பாற்றி யாகவேண்டும். இதனால் எத்தனை பேர் கஷ்டப் பட்டாலும் பரவாயில்லை; அழிந்தாலும் இந்தக் காரியத்தைச் செய்துகொண்டே அழியலாம். காரியத்தை விட்டுவிட்டாலும் அழியத்தான் போகிறோம், இப்படி அழிந்தால் கடமையைச் செய்துகொண்டே அழிந்தோம் என்ற திருப்தியாவது இருக்கும்.

வேதத்தோடு மாத்திரம் இல்லை. கிராமங்களில் பஞ்சாங்கக்காரன் என்று ஒரு ஜாதி உண்டு. நாம் என்ன நினைக்கிறோம்? அரிசி, பருப்பு, வாழைக்காய், வாழையிலை இவற்றையெல்லாம் வாங்கிக்கொண்டு, வாயில் வெற்றிலை போட்டுக்கொண்டு ஒரு மணிக்குமேல் ஸ்நானம் செய்துவிட்டுச் சாப்பிடுகிறவர்களே

பஞ்சாங்கக்காரர்கள் என்று நினைக்கிறோம். முன்னாளில் அச்சு இல்லை. பஞ்சாங்கம் அச்சிடுவது இல்லை. அவர்கள் அந்தக் காலத்தில் மகாமேதாவிகளாக இருந்திருக்கிறார்கள்; இன்றைக்கு எம். ஏ. பட்டம் வாங்கிக்கொண்டு வான சாஸ்திரம் முதலியவற்றைப் பார்க்கிறவர்களைப்போல் இருந்திருக்கிறார்கள் அவர்கள். திதி வார நட்சித்திர யோக கரணங்களாகிய பஞ்ச அங்கங்களையும் ஒவ்வொரு நாளும் கணித்து வீடு வீடாகச் சென்று சொல்லிவந்தார்கள். அப்போது அவர்களுக்கு ஒரு கௌரவம், ஒரு மரியாதை இருந்து வந்தது. இப்போது பஞ்சாங்கம் அச்சிட ஆரம்பித்துவிட்டார்கள். அவர்களுக்குக் காரியம் இல்லை. காரியம் இல்லாததனாலே கௌரவம் போய் மட்டமானவர்கள் ஆகிவிட்டார்கள். உண்மையான யோக்கியதை இருந்தால்தான் ஒருவனுக்குக் கௌரவம், ஜனங்களுக்கு அவனிடத்தில் ஒரு மரியாதை, பக்தி எல்லாம் ஏற்படும். அவனுக்கு நடவடிக்கை போய்விட்டது. வானநூலறிவு போய் விட்டது. பக்தியினாலே ஏற்பட்ட கட்டுப்பாடு போய்விட்டது. சைவர்களிலும் சிவபூஜை பண்ணிக்கொண்டிருந்தவர்களுக்கு அந்தக் காலத்தில் மிக்வும் மரியாதை. இப்போது பூசாரி என்று ஏளனம் பண்ணிக்கொண்டிருக்கிறோம்.

இவ்வளவிற்கும் மூலம் வேதம். அதை ரட்சித்தால்தான் உலகம் க்ஷேமாக இருக்கும். தத்துவம் இருக்கும். அதனால் என்ன ஆபத்து வந்தாலும் குற்றம் இல்லை. வெறும் பணம், சாந்தியை, இன்பத்தைக் கொடுக்காது. கொடுப்பதானால் அமெரிக்காக்காரன் சாந்தியாக இன்பமாக இருக்கவேண்டும். அவனிடம் இருக்கும் டாலர் யாரிடமும் இல்லை. அவன் கம்யூனிசத்தைக் கண்டு ஒவ்வொரு நாளும் நடுங்கிக்கொண்டிருக்கிறான். நாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம், அவன் எப்போதும் சுகமாக இருக்கிறான் என்று. கஷ்டம் சுகம் இரண்டும் எப்போதும் வரக்கூடியவை. இதையெல்லாம் பார்க்காமல்தான் நாம் நம் கடமையைச் செய்யவேண்டும்.

3

# ஏழை பங்காளன்

ஒருவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டால், அதை நிவிருத்தி பண்ணுவதற்குப் பக்கத்தில் இருக்கிறவர்கள் எல்லோரும் மிகவும் சிரமப்படுகிறார்கள். பல பேரிடம் அவனை அழைத்துப் போகிறார்கள்; வைத்தியர்களிடத்திலும் அழைத்துக்கொண்டு போகிறார்கள். அநேகம் பேர் என்னிடமும் வந்து, 'குடும்பத்திலே இந்த மாதிரி சிரமம் இருக்கிறது; நிவிருத்தி ஆக வேண்டும்' என்று கேட்கிறார்கள். ஆனால் அந்தச் சமயத்தில் எனக்குத் தோன்றுகிற அபிப்பிராயத்தை, வந்து கேட்கிறவர்களிடத்தில் சொன்னால் அவர்களுக்கு மிகவும் துக்கம் ஏற்படும். அதனால் அந்த அபிப்பிராயத்தை மறைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதை இப்போது சொல்கிறேன்.

ஒருவனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது; அவன் பைத்தியத்தை நிவிருத்தி பண்ணினால் அவன் நம்மாதிரி ஆகிவிடுகிறான். அதற்குப் பிறகு நம்மைப்போல் மனசில் தோன்றியதை மறைத்துப் பேச ஆரம்பித்துவிடுகிறான். பைத்தியமாக இருக்கிறபோது ஒளிக்கிறதில்லை; மறைக்கிறதில்லை; ஒருவன் நான்கு வருஷம் பைத்தியமாக இருக்கிறான் என்றால் அந்த நான்கு வருஷத்திற்குள் மற்றவன் செய்கிற பாவங்களில் எதையும் அவன் செய்கிறதில்லை.

உலகத்தில் பாவம் பண்ணாமல் இருக்கிறவன் யாராவது உண்டா என்றால் குழந்தை அல்லது பைத்தியக்காரன்தான். ஞானிகளின் உயர்ந்த நிலைக்கு உதாரணம், 'பாலோன்மத்தவத்' என்று சொல்லுவார்கள். பாலன் என்றால் குழந்தை. உன்மத்தன் என்றால் பைத்தியம். உன்மாதம் என்றால் தலைக்குமேல் ஏறிப்போகிற பித்தம். உன்மாதத்தை உடையவன் உன்மத்தன். ஈசுவரனுக்கு உன்மத்தசேகரன் என்று பெயர். உன்மத்தன் என்றால் ஊமத்தம்பூ, சம்ஸ்கிருதத்தில் ஊமத்தைக்கு உன்மத்தம் என்று பெயர். ஊமத்தம்பூவை அவன் தரித்துக்கொண்டிருக்கிறான். அதில் சிவனுக்கு அதிகப் பிரியம். உன்மத்தசேகரன் என்பதற்கு இரண்டாவது அர்த்தம் பைத்தியத்துக்குள் தலைவன் என்பது. பைத்தியக்கார வேஷம் போடுவதில் சிவனுக்குப் பிரியம்.

சிவனுக்கு மிகவும் பிரியமானது எருக்கம்பூ, தும்பைப்பூ, ஊமத்தம்பூ; உலகத்தில் எந்தப் பொருளுக்கும் விலை உண்டு என்ற நிலை வந்துவிட்ட இந்தக் காலத்திலுங்கூட எருக்கம்பூ, தும்பைப்பூ, ஊமத்தம்பூ இவற்றுக்கு விலை இல்லை. தன்னைப் பூஜை பண்ணுகிறவனுக்குக் கஷ்டம் இல்லாமல், 'ஏண்டா அதை எடுக்கிறாய்?' என்று தன் பக்தர்களை யாரும் அதட்டாமல் இருக்கவேண்டும் என்பதற்குத்தான் ஈசுவரன் ஊமத்தம்பூ, எருக்கம்பூ, தும்பைப்பூ இவற்றிலே பிரியம் அதிகம் வைத்திருக்கிறான். ஊமத்தம்பூவிலும் கருஊமத்தம்பூவை எடுத்து ஸ்வாமிக்குப் பூஜை பண்ணுவது வழக்கம். எருக்கம்பூவில் வெள்ளெருக்கம்பூ விசேஷம்.

அப்பைய தீக்ஷிதர் என்ற பெரிய சிவபக்தர் முந்நூறு வருஷத்திற்கு முந்தி விரிஞ்சிபுரத்திற்குப் பக்கத்தில் இருந்தார். அவர் தாமாக மனசு உருகிப் பல ஸ்தோத்திரங்கள் பண்ணியிருக்கிறார்.

अर्कद्रोणप्रभृतिकुसुमैरर्चनं ते विधेयम् ।

அர்க்கத்ரோணப்ரப்ருதிகுஸுமை : அர்ச்சநம் தே விதேயம்!

என்று பரமசிவனை ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். அர்க்கம் என்றால் எருக்கம்பூ. துரோணம் என்றால் தும்பைப்பூ. 'எருக்கம் பூ, தும்பைப்பூ இவற்றினால் பூசை பண்ணினாலும் பிரீதி அடையக் கூடியவனாக, சுலபமாக ஆராதிக்கக் கூடியவனாகப் பரமேசுவரன் இருக்கிறான்'. என்று ஸ்தோத்திரம் செய்கிறார். 'நீ யார்? உன்மத்தசேகரன்; உன்மத்தர்களுக்கெல்லாம்-பைத்தியக்காரர்களுக்கெல்லாம் சேகரனாக-தலைவனாக இருக்கிறாய்' என்றும், 'ஊமத்தம்பூவைத் தலையில் வைத்துக்கொண்டிருக்கிறாய்' என்றும்-சிலேடையாகத் தோன்றும்படி இரண்டு அர்த்தத்திலே சொன்னார். ஈசுவரனுக்கு ஏழை பங்காளன் என்ற பெயர். ராஜாவாக இருந்தால் கிட்டக்கூடப் போகமுடியாது. பைத்தியக்காரன் எங்கே போனாலும் அவனைப் பார்க்கலாம். அவனைச் சுற்றிக்கொண்டு ஓடலாம். சிலகாலம் பைத்தியக்காரனாக இருக்கிறவனுக்கும் பைத்தியம் பிடித்த காலத்தில் பாவம் இல்லை என்று சொன்னால் எப்பொழுதும் பைத்தியக்காரனாக இருப்பவனுக்கு எப்பொழுதும் பாவம் இல்லை என்றே சொல்ல வேண்டும். பாவத்திற்கு மேற்பட்டவன் ஈசுவரன். அதற்கு உட்பட்டவர்கள் ஜீவர்கள். பாவத்திற்கு உட்பட்டிருக்கும் ஜீவாத்மாவை அதற்கு மேற்பட்டிருக்கும் ஒருவனாகிய பரமாத்மாவினால்தான் இழுத்துக் கரையேற்றமுடியும். சேற்றில் இருந்துகொண்டே சேற்றில் இருப்பவனை இழுத்துக் கரையேற்ற முடி

யாது. கரையில் இருக்கிறவனால்தான் சேற்றில் இருப்பவனை இழுக்கமுடியும். பாவியாக இருப்பவனைப் பாவம் இல்லாதவனாக இருக்கிறவன்தான் இழுத்துவிட முடியும். ஈசுவரன் எப்பொழுதும் பைத்தியக்காரன்; எப்பொழுதும் பாவம் இல்லாதவன்.

தமிழ் நாட்டில் பல மஹான்கள் இருந்தார்கள். அவர்கள் இந்தத் தேசத்தில் பக்தியை நிறைய விருத்தி பண்ணினார்கள். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளை ஈசுவரன் தடுத்தாட் கொண்டான் என்று சொல்லுவார்கள். அவர் கல்யாணம் பண்ணிக்கொள்ள இருந்தபோது ஈசுவரன் கிழப்பிராம்மணராக வந்து, 'நீ என் அடிமை' என்று சொல்லிச் சண்டை போட்டார் என்ற கதை பலருக்குத் தெரிந்திருக்கும். தம்மைத் தடுத்து ஆட்கொண்ட பரமசிவனைச் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பாட ஆரம்பித்தார்.

'பித்தாபிறை சூடிபெரு மானேஅரு ளாளா' என்று பாடினார்; **பித்தா** என்றுதான் ஆரம்பித்தார்.

மகாவிஷ்ணு, லோகம் எல்லாவற்றையும் ரக்ஷிக்கிறார். அவர் பெரிய ராஜா; சக்கரவர்த்தி. திரிபுவன சக்கரவர்த்தி, பரமசிவன் பைத்தியக்காரன். இருவர் உடம்பிலும் எத்தனை பொருள்கள் இருக்கின்றன என்று கணக்குப் பார்ப்போம். இரண்டையும் ஏலத்திற்கு விட்டால் இவரிடம் இருக்கும் பொருளுக்கும் விலை இல்லை; அவரிடம் இருக்கும் பொருளுக்கும் விலை இல்லை. இந்தப் பைத்தியக்காரனிடம் என்ன இருக்கின்றன? சாம்பல், எருக்கம்பூ, தும்பைப்பூ, ஊமத்தம்பூ, மண்டை ஓடு - இவற்றைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. இவற்றை யாராவது விலைகொடுத்து வாங்குவார்களா? அவரிடம் என்ன இருக்கின்றன? கௌஸ்துபம், பீதாம்பரம், சக்கரம், கதை. இவற்றிற்கு விலை இதுதான் என்று சொல்லமுடியாது. எல்லாவற்றையும் காட்டிலும் சிரேஷ்டமாக மகாலக்ஷ்மி இருக்கிறாள்; அவளை ஒருத்தராலும் விலைகொடுத்து வாங்கமுடியாது. அவளிடம் இருக்கும் பொருள்களும் மகாவிஷ்ணுவிடம் உள்ள வஸ்துக்களும் விலை இல்லாதவை. பரமசிவனிடம் உள்ளவையும் விலை இல்லாத வஸ்துக்கள்.

பைத்தியக்காரப் பிராம்மண வேஷம்போட்டான் ஈசுவரன். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் குருக்கள். பைத்தியக்காரனாக அவரிடம் போய், 'நீ என் ஆள்; இதோ பார் ஓலையை' என்று கத்தினார். 'போடா பைத்தியக்காரா?' என்று சொல்லிவிட்டார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அப்புறந்தான் ஈசுவரன் என்று தெரிந்தது; 'பித்தா, பிறைசூடி!' என்று ஸ்தோத்திரம் செய்தார். பைத்தியக்காரனைப்போல மற்றவர்கள் வைத்துக்கொள்ளாத பூவை எல்லாம் பரமசிவன் வைத்துக்கொண்டிருக்கிறான்.

अर्कद्रोणप्रभृतिकुसुमैरर्चनं ते विधेयं
प्राप्यं तेन स्मरहर फलं मोक्षसाम्राज्यलक्ष्मीः ।
एतज्जानन्नपि शिव शिव व्यर्थयन् कालमात्मन्
आत्मद्रोही करणविवशो भूयसाऽधः पतामि ॥

அர்க்கத்ரோணப்ரப்ருதிகுஸுமைரர்ச்சநம் தே விதேயம்
ப்ராப்யம் தேந ஸ்மரம்ஹர பலம் மோக்ஷஸாம்ராஜ்யலக்ஷ்மீ: !
ஏதஜ்ஜாநந்நபி ஶிவ ஶிவ வ்யர்த்தயந் காலமாத்மந்
ஆத்மத்ரோஹீ கரணவிவஶோ பூயஸாத: பதாமி !!

தீக்ஷிதருக்கு ஒருமுறை சந்தேகம் வந்தது. 'ஈசுவரனிடத்தில் நான் பக்தி பண்ணுகிறேனே; என் ஜன்மா கடைத்தேறுமா? கடைத்தேருதா? நிஜமான பக்தி இருக்கிறதா? சும்மா வேஷம் போடுகிறேனா? சமயம் வந்தால்-ஆபத்து வந்தால் ஈசுவரன் நினைப்பு மறந்துபோகுமா?' என்ற சந்தேகம் அவருக்கு வந்துவிட்டது. அவருக்குத் தம்மைத்தாமே பரீட்சை செய்துகொள்ள வேண்டும் என்ற ஆசை.

நாம் ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டிருக்கிறோம். மழை வந்தால் ஓடிவிடுகிறோம். இதுதான் நம் பக்தியின் நிலை. நன்றாக இருக்கிற வரைக்கும் பக்தன் என்று நம்மை நினைத்துக்கொண்டிருப்போம். நம் பக்தி, சோதனைக் காலங்களில் தளர்ந்துவிடும். தம் பக்தியைச் சோதித்துக் கொள்ளவேண்டுமென்று அந்தப் பெரியவர் ஆசைப்பட்டார்.

நமக்குக் கொஞ்சங்கூட அப்படிப்பட்ட ஆசை இல்லை. 'நமக்குக் கெட்ட எண்ணமே வரவில்லை' என்று எண்ணிக்கொண்டிருப்போம். திடீரென்று ஸ்வப்னம் கண்டால் அதில் கெட்ட காரியம் பண்ணுவதாகத் தோன்றும். ஸ்வப்னம் என்பதே வாழ்க்கையில் நிறைவேருத அபிலாஷைகளின் ஸ்வரூபம். ஸ்வப்னத்தில் கெட்ட காரியம் பண்ணுவது போலக் கண்டால் நாம் அப்படி எண்ணிக்கொண்டிருக்கிறோமே என்று மனசு துக்கப்பட வேண்டும். கெட்ட காரியமோ கெட்ட காமமோ ஒரு நாளும் ஸ்வப்னத்தில் வராமலிருந்தால் அப்பொழுது நல்லவர்களாக இருக்கிறோம் என்று சந்தோஷப்படலாம். நம்மை நாமே சோதித்துப் பார்த்துக்கொள்ளத்தான் ஈசுவரன் ஸ்வப்னத்தை வைத்திருக்கிறார்.

அப்பைய தீக்ஷிதருக்கு இது தெரியும். எவ்வளவோ முறை இறைவனைத் தியானம் செய்வதுபோல் ஸ்வப்னம் கண்டிருக்கிறார். இருந்தாலும் பின்னும் பரீட்சை செய்து பார்க்க வேண்டுமென்று நினைத்தார்.

அருக்கு எல்லாச் சாஸ்திரங்களும் தெரியும். அவர் நூற்றுநான்கு கிரந்தங்கள் எழுதிருக்கிறார். சிவ பக்திக்கு நிறையப் புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார். ராமானுஜ மதம், மத்வ மதம் ஆகியவற்றிற்கும் புஸ்தகம் எழுதியிருக்கிறார். அவர் மாதிரி எல்லாச் சாஸ்திரங்களிலும் புஸ்தகம் எழுதினவர் ஒருத்தரும் இல்லை. அவரோ அத்வைதி.

महेश्वरे वा जगतामधीश्वरे जनार्दने वा जगदन्तरात्मनि ।
न वस्तुभेदप्रतिपत्तिरस्ति मे तथाऽपि भक्तिस्तरुणेन्दुशेखरे ॥

மஹேச்வரே வா ஜகதாமதீச்வரே
ஜநார்தநே வா ஜகதந்தராத்ம நி—
ந வஸ்துபேதப்ரதிபத்திரஸ்தி மே
ததாபி பக்திஸ்தருணேந்துசேகரே ॥

'வேறு வேறாக இரண்டு பொருள் இல்லை. இரண்டும் ஒரு பொருள்தான் என்ற தீர்மானம் எனக்கு' என்று தமக்கு அத்வைத சித்தாந்தத்தினிடம் உள்ள அபார பக்தியை அவர் வெளிப்படுத்தியிருக்கிறார். அநேகமாக எல்லாரும் தங்கள் மதத்திற்குச் சாதகமான நூல்களை எழுதுவார்கள், இன்னொரு மதத்திற்கு அநேகமாக நூல்களை எழுதிக்கொடுக்க மாட்டார்கள். ஆனால் அவர் எழுதிக் கொடுத்தார். அவருக்கு ஈசுவரனிடத்தில் மகாபக்தி; 'எங்கும் நிறைந்திருக்கிற ஒரு வஸ்துவே எல்லாமாய் இருக்கிறது. அதுவே பரப்பிரம்ம ஸ்வரூபம். அதைத் தவிர இரண்டாவது வஸ்து இல்லை' என்பது அவர் கருத்து.

அத்தகைய பெரியவருக்குத் தம்முடைய பக்தியைச் சோதித்துக்கொள்ள வேண்டும் என்ற ஆசை உண்டாகி விட்டது.

'பைத்தியம் பிடித்தால் அந்தச் சமயத்தில் கெட்ட வார்த்தைகள் சொல்லாமல் காம வார்த்தைகளைச் சொல்லாமல் ஈசுவர பக்தி பண்ணினால் அப்பொழுது நம்முடைய பக்தி மெய்யானதுதான் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். ஆகையால் நமக்குப் பைத்தியம் வந்தால் நல்லது' என்று நினைத்தார். ஊமத்தங்காய், ஊமத்தம்பூ இவற்றைச் சாப்பிட்டால் பைத்தியம் பிடித்துவிடும் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் மற்றொரு பயம் வந்தது. 'பைத்தியம் பிடித்து உளறும்போது, அது ஈசுவரநாமாவாக இருந்துவிட்டால் குற்றம் இல்லை. கெட்ட வார்த்தைகளாகவோ காமவார்த்தைகளாகவோ வந்துவிட்டால் அப்புறம் ஆயுள் முழுவதும் அப்படியே பைத்தியமாகத் திரிய வேண்டி வந்துவிடுமே; ஜன்மம் முழுவதும்

வீணாய்ப் போய்விடுமே! திரும்பவும் பைத்தியம் தெளிந்தால் தானே, ஈசுவரனிடத்தில் பக்தி பண்ணி ஜனனநிவிருத்தி பண்ணிக்கொள்ளலாம்?' என்று எண்ணினார். பைத்திய நிவிருத்திக்காக ஒரு மருந்தையும் சித்தம் பண்ணி வைத்துக் கொண்டார். சிஷ்யர்களைக் கூப்பிட்டுப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, 'நான் சொல்வதையெல்லாம் எழுதுங்கள்' என்று சொல்லிவிட்டு, பைத்தியம் பிடிக்கிற மருந்தைச் சாப்பிட்டார். அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. உடனே உளற ஆரம்பித்துவிட்டார். அவர் சொன்னவற்றையெல்லாம் சிஷ்யர்கள் எழுதிக்கொண்டார்கள். திரும்ப அந்தப் பைத்தியக் காலத்திற்குள் ஊமத்தம்பூவின் குணத்தை மாற்றக்கூடிய மருந்தைக் கொடுத்தார்கள். பைத்தியம் தெளிந்துவிட்டது. அவருக்குப் பைத்தியம் பிடித்திருந்த காலத்தில் என்ன பிதற்றினார் என்று பார்த்தால் ஐம்பது சுலோகங்கள் ஈசுவரன்மேல் பாடியிருந்தார். 'உன் அநுக்கிரகத்தை நான் என்ன சொல்வேன்! பரம சுலபமான புஷ்பங்களைப் பக்தர்களிடமிருந்து கிரகித்துக்கொண்டு, அவர்களுக்கு நீ எவ்வளவு பெரிய அநுக் கிரகம் செய்கிறாய்! நான் போடுவது தும்பைப் பூ. நீ எனக்குக் கொடுக்கிறது மோக்ஷம்' என்று கண்ணிலிருந்து தாரை தாரையாக ஜலம் வர ஸ்தோத்திரம் செய்தார். அந்தக் கிரந்தத்துக்கு, **'ஆத்மார்ப்பண ஸ்துதி'** அல்லது, **'உன்மத்த பஞ்சாசத்'** என்று பெயர்.

உன்மத்தம் என்றால் ஊமத்தம்பூ. ஊமத்தம்பூவைச் சாப்பிட்டுவிட்டுப் பாடிய பாட்டு அது. அவருக்கு நிறைந்த பக்தி இருந்ததால்தான், பைத்தியம் பிடித்தபோதும் அந்தப் பக்தி மாறவில்லை. பக்தியில் ஈடுபட்டிருந்ததனால் அப்படியே தன்மயமாக இருந்தார்.

பைத்தியம் பிடித்தபோதுகூடப் புத்தி மாறாமல் ஓர் ஆத்மா இருந்ததானால் அது, தான் சாகிறபோது - என்ன துக்கம் வந்தாலும் கஷ்டம் வந்தாலும் கையும் காலும் இழுத்து விடுகிற வியாதி வந்தாலும்-ஈசுவரன் ஒருவனைத்தான் நினைக்கும்; மற்றதை நினைக்கக்கூடாது என்று ஈசுவரனையே நினைக்கும். கடைசி க்ஷணத்தில் உயிர் உடலிலிருந்து போகிற சமயத்தில் எந்த எண்ணத்தோடு இந்தச் சரீரத்தை விடுகிறோமோ அந்த எண்ணத்திற்குத் தகுந்தபடியே, அடுத்த பிறவியில் சரீரம் உண்டாகிறது. பகவத்கீதையில் இதைத்தான்,

यं यं वापि स्मरन् भावं त्यजत्यन्ते कलेवरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥

யம் யம் வாபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே கலேவரம் |
தம் தமேவைதி கௌந்தேய ஸதா த்த்பாவபாவித ||

என்று பகவான் சொல்கிறார். ஈசுவரத் தியானத்தோடு இந்தச் சரீரத்தை விட்டால் அப்போது அந்த ஈசுவர ஸ்வரூபத்தில் போய் ஐக்கியமாகிவிடும். துக்கத்தோடு உயிரை விட்டால் துக்கத்தோடு இருக்கும்படியான ஜனனம் வரும். கோபத்தோடு விட்டால் கோபத்தோடு இருக்கும்படியான ஜனனம் வரும். அதனால்தான் கடைசி நிமிஷத்தில் ஈசுவரனுடைய நினைப்போடு உயிர் விடுபவர்களுக்கு ஜனனமே நிவிருத்தி யாகிவிடுகிறது என்று சொல்வார்கள்.

அதனால் சிலர், 'அப்படியானால் உயிர்விடுகிற சமயத்தில் ஈசுவரனை நினைத்தால் போதாதா? எதற்காக நித்தியம் ஜபம் பண்ணவேண்டும்?' என்று கேட்பார்கள். ஜீவிய காலம் முழுவதும் பண்ணிக்கொண்டிருந்தாலே துக்கம் வரும்போது, 'ஐயோ, அப்பா!' என்று அழ ஆரம்பித்துவிடுகிறோம். அப்படி இருக்கும்போது உயிரை விடுகிறபோது ஈசுவர் நினைவு சுலபமாக வந்துவிடுமா? அதற்கு அதிகமான பழக்கம் வேண்டும். குடும்பத்தில் எவ்வளவு துக்கம் வந்தாலும் உடம்புக்கு எவ்வளவு துக்கம் வந்தாலும் அவற்றையெல்லாம் உதறிவிட்டு, ஜன்ம நிவிருத்திக்குச் சதா காலமும் ஈசுவரனை நினைக்கிற நினைப்பு நமக்கு வந்துவிட்டதா என்று ஒவ்வொரு நாளும் ஸ்வப்பனத்தில் பரீட்சை செய்து பார்க்கலாம். நாம் க்ஷேமத்தை அடைய ஒரு நல்ல காரியம் எப்போதும் வேண்டும். நல்லது என்றால் ஈசுவரனை நாடுவதுதான் நல்லது; வேறொன்றும் அன்று.

எப்பொழுது பார்த்தாலும் யாரைப் பார்த்தாலும் அந்தக் காலத்தில், பல பேர், 'ராம் ராம்' என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். காலப் போக்கினால் இப்பொழுது அந்த வழக்கம் குறைந்துவிட்டது; என்றாலும் இன்னும் சிலர் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். வாயால் சொல்வது ஒரு காரியம். சொல்லாமல் மனசிலே நினைக்கும் பழக்கம் வந்துவிட்டால் இன்னும் விசேஷம். வாயால் சொல்லாமல் எப்பொழுதும் ஹிருதயத்தில் பக்தி செய்வதே விசேஷம். காரியம் இருந்தால் அதைச் செய்ய வேண்டும். காரியம் பண்ணுகிறபோது காரியத்தையே நினைத்துக்கொண்டிருக்கலாம். அதை முடித்த பிறகு இன்னொரு காரியம் ஆரம்பிப்பதற்கு இடையில் உள்ள காலத்தில் பகவானுடைய நினைப்பு வரவேண்டும். வேறு நினைப்பு வரக்கூடாது. இப்படி இடை வேளையில் பகவானுடைய நாமத்தை நினைக்கலாம். ஸ்வரூபத் தியானமும் செய்யலாம். ஸ்வரூபம், நாமம், எல்லாம் ஈசுவரனுக்கு இருப்பதே இதற்காகத்

தான்: கால்சட்டை போட்டுக்கொள்கிற மாதிரி நினைத்தால் கால் சட்டை போட்டுக்கொள்கிறதுபோல் ஸ்வப்னம் வருகிறது. எந்தப் பழக்கம் இப்பொழுது நினைப்பில் இருக்கிறதோ அந்தப் பழக்கம் நமக்கு ஸ்வப்னத்தில் வரும். பகவந் நாமாவைச் சொல்வதுபோல ஸ்வப்னம் வரவில்லை என்றால், 'ஐயோ, ஜன்மா வீணாய்ப் போச்சே! இனியாகிலும் அந்தப் பழக்கம் வரவேண்டும்' என்று முயற்சி செய்யவேண்டும். இந்தப் பழக்கம் கொஞ்சம் முற்றினால் அது சாகிற காலத்திலும் வரும். இதையே நிதரிசனமாகப் பார்த்தார் அப்பைய தீக்ஷிதர்.

ஈசுவரன் பைத்தியக்காரப் பிராம்மணன். கையிலே ஒரு கபாலத்தை ஏந்திக்கொண்டு பிக்ஷாடன மூர்த்தியாகத் திரிகிறான். பழைய நாளில் பிராம்மணன்தான் பிச்சை எடுப்பான். மற்ற ஜாதிக்காரர்கள் நாமாகக் கொடுத்தாலும் வாங்கிக்கொள்ள மாட்டார்கள். 'பிச்சைக்காரப் பார்ப்பான் தெரு' என்று கும்பகோணத்தில் ஒரு தெருக்கூட இறக்கிறது. பிராம்மண சந்நியாசிகள் அன்ன பிக்ஷை எடுப்பார்கள். மற்றவர்கள் அரிசிப் பிக்ஷை வாங்குவார்கள். பிராம்மணர்கள் உஞ்சவிருத்தி செய்வார்கள். மற்ற ஜாதிக்காரர்கள் பிச்சை வாங்குவதில்லை. 'ஏதாவது வேலை செய்துவிட்டு அதைக் கூலியாகப் பெற்றுக் கொள்கிறேன்' என்பார்கள். இப்போது இவன் செய்கிற காரியம் நல்லதோ கெட்டதோ அதை அப்படியே மற்றவர்களும் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

ஈசுவரன் பிச்சைக்காரப் பார்ப்பானாகத்தான் இருக்கிறான். அவன் மகரிஷி. எப்போது பார்த்தாலும் தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருக்கிறான். சாக்ஷாத் நாராயணன் திரிபுவன சக்கரவர்த்தி. அதனால் எப்போதும் அவனுக்கு அபிஷேகம் இல்லை. அபிஷேகம் என்பதுகூட அவனுக்குச் சுகந்த தைலந்தான். சிவன் கோயிலில்தான் ஆறு கால அபிஷேகம்; சில இடத்தில் இருபத்துநான்கு மணி நேரமும் அவன் தலைக்குமேல் அபிஷேகத் தண்ணீர் விழுந்துகொண்டிருக்கும். அதற்குத் தாராபாத்திரம் என்ற ஒன்றை மேலே கட்டியிருப்பார்கள். எப்பொழுது பார்த்தாலும் தண்ணீருக்குள்ளேயே மூழ்கிக்கொண்டிருப்பவன் பார்ப்பான். பிக்ஷாடனன் என்று அவனுக்குப் பெயர். அதனாலே பிராம்மணனுடைய சுபாவமும் ஈசுவரனுடைய சுபாவமும் ஒரே மாதிரி இருக்கின்றன. எப்போது பார்த்தாலும் பிச்சை; எப்போது பார்த்தாலும் தண்ணீரிலே மூழ்கியிருப்பது.

ருத்திரனை, 'விச்வாதிகன்' என்றும், 'மகரிஷி' என்றும் வேதம் சொல்கிறது. பிச்சைக்காரப் பிரம்மணன் அவன். 'அறவாழி அந்தணன்' என்று திருக்குறளில் சொல்கிறார். அவனை

ஆராதிப்பது மிகவும் சுலபம்; அவன் நமக்கு மிகவும் எளியவன். அந்தரங்க அன்போடு ஒரு தும்பைப்பூவை எடுத்து அவன் தலையில் போட்டாலும் அவன் திருப்தி அடைவான்.

இது சம்பந்தமாக ஒரு கதை நினைவுக்கு வருகிறது. ஆண்டவன் தும்பைப்பூவைத் தரித்துக்கொண்டிருக்கிறன். எருக்கிலே வெள்ளெருக்கு வேண்டும். ஊமத்தை என்றால் கரு ஊமத்தை வேண்டும். தும்பைப் பூவுக்குச் சிரமம் இல்லை ஈசுவரனிடத்திலே பக்தியினலே ஒரு தும்பையை எடுத்துப் போட்டாலும் போதும். அது நமக்குப் பரம மோக்ஷத்தை வாங்கித் தந்துவிடுகிறது. இதைப்பற்றித்தான் நான் நினைப்பேன்.

ராமாநுஜாசாரியார் ஒரு சமயம், 'நமக்கு விஷ்ணுவைத் தவிர வேறு ஸ்வாமி இல்லை. அவன்தான் நமக்குப் பெரியவன். ஏகாந்தமாக அவன் ஒருவனைத்தான் பூஜை பண்ணவேணும். சிவன் கோயிலுக்குப் போகக்கூடாது. சிவனைக் கொண்டாடக் கூடாது' என்று உபதேசம் பண்ண ஆரம்பித்தார். இந்தக் கொள்கையுள்ளவர்களுக்கு ஏகாந்திகள் என்று பெயர். ஏகம் தான் அந்தம். 'நமக்கு ஒரு பெருமாள் என்றால் போதும். இதர தெய்வங்களை யெல்லாம் உபாசிக்க வேண்டாம். தேவதாந்தரமே கூடாது.'

ஒவ்வோர் ஊரிலும் சிவன் கோயில், பெருமாள் கோயில் இரண்டுமே இருக்கும். பெருமாள் கோயிலுக்குக் காலையில் போவார்கள். சிவன் கோயிலுக்கு நர்த்தன காலத்தில் மாலையில் போவார்கள். இப்படி இருக்கிறபோது சிவன் கோயிலுக்குப் போகக் கூடாது என்று ராமாநுஜர் ஒரு தனியான மதத்தைப் பிரசாரம் பண்ண ஆரம்பித்தது சோழராஜாவுக்குத் தெரிந்தது. 'விஷ்ணுவைத் தவிரக் கடவுள் இல்லை; தேவதாந்தரமே கூடாது' என்று இவர் ஒரு மதம் பண்ணிவிட்டாரே என்று வித்வான்களுக்கும் ராஜாவுக்கும் தோன்றியது. அது சாஸ்திர மாக இருந்தால் அவரையே கூப்பிட்டுக் கேட்போம் என்று அவரை அழைத்து வரும்படியாக மகாராஜா ஆள் அனுப்பினன். கங்கைகொண்ட சோழபுரம் என்ற ஊர் இருக்கிறது, கும்பகோணத்துக்கு வடக்கே பத்து மைலிலே. அந்த ஊருக்கு ராமாநுஜாசாரியாரை அழைத்து வரும்படி ஆள் அனுப்பினர்கள். அவரை அழைத்து வந்து சபையைக் கூட்டி இந்த விஷயத்தை நிர்த்தாரணம் பண்ண வேண்டும் என்பது ராஜாவினுடைய ஆசை.

ராமாநுஜாசாரியார் அப்போது ஸ்ரீரங்கத்தில் இருந்தார். அவருடன் இருந்த கூரத்தாழ்வார், மகாராஜா இப்படி அழைத்துவர ஆள் அனுப்பியது தெரிந்தவுடன், "ஸ்வாமி,

நீங்களோ சிவன் கோயிலுக்குப் போகக்கூடாது என்கிறீர்கள்; சிவனைத் தொழக்கூடாது என்கிறீர்கள். அரசன் சைவன்; சிவாலயங்களெல்லாம் கட்டியிருக்கிறான். அவனுடைய அநுஷ்டானத்திற்கு நீங்கள் அபசாரம் செய்கிறீர்கள். உங்களை அழைத்துத் தண்டனை கொடுக்கத்தான் ஆள் அனுப்பியிருக்கிறான்போல் இருக்கிறது. உங்களுக்காக உங்கள் காஷாய வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு நான்தான் ராமாநுஜாசாரியார் என்று அவனிடம் போகிறேன். எனக்கு வருகிற ஆபத்து வரட்டும். நீங்கள் என்னுடைய வெள்ளை வேஷ்டியைக் கட்டிக்கொண்டு சோழ ராஜ்யத்தை விட்டே போய்விடுங்கள். நீங்கள் இல்லையென்றால் எங்களுக்கு ஆசாரியரே இல்லாமல் போய்விடும்' என்று சொன்னார். கூரம் என்ற கிராமத்தைச் சேர்ந்த வித்வான் இவர்; அதனால்தான் கூரத்தாழ்வார் என்று பெயர். ராமாநுஜாசாரியாரும் அப்படியே வெள்ளை வேஷ்டி தரித்துக்கொண்டு இரவோடு இரவாக ஸ்ரீரங்கத்திலிருந்து இருபத்தெட்டு மைலில் உள்ள திருநாராயணபுரம் போனார்; மறுபடியும் அங்கிருந்து முந்நூறு மைல் தூரத்திற்கு அப்பால் மைசூர்ப் பக்கத்தில் உள்ள மற்றொரு திருநாராயணபுரத்திற்கே போய் விட்டார்; சோழராஜ்யத்தை விட்டே போய்விட்டார். இப்போது கூட வைஷ்ணவர்கள் அங்கே, 'வெள்ளைச் சாத்துபடி உத்ஸவம்' எனக் கொண்டாடுவது பழக்கமாக இருக்கிறது.

அந்தக் கிருகஸ்தர் காஷாயம் உடுத்துக்கொண்டு, 'நான் தான் ராமாநுஜாசாரியார்' என்று சோழனிடம் வந்தார். 'இவர் தாமா ராமாநுஜாசாரியார்?' என்று ராஜா கேட்டபோது, மந்திரி, 'ராமாநுஜாசாரியாருக்குச் சமானமான அவ்வளவு யோக்கியதை உடையவர்' என்று சூசகமாகச் சொல்லிவிட்டார். அப்புறம் சாஸ்திர வாக்கியார்த்தங்கள் சொன்னார். அநேக வித்துவான்கள் அதற்காகத்தானே வந்திருந்தார்கள். அவர்கள் எல்லாரும் தீர்மானம் பண்ணி, 'சிவனுக்கு மேலே உயர்ந்த பொருள் இல்லை' என்று சாஸ்திர வாக்கியார்த்தங்கள் சொல்லி ஓர் ஓலையில், 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்று எழுதினார்கள். கூரத்தாழ்வாரும் ஒரு வித்துவான்தானே? 'நீங்களும் இதற்கு ஆட்சேபம் இருந்தால் தெரிவியுங்கள். இல்லாவிட்டால் இதில் கையெழுத்துப் போடுங்கள்' என்று அந்த ஓலையை அவரிடம் நீட்டினார்கள். சந்நியாசி வேஷம் போட்டுக்கொண்டு வந்தவர், 'அஸ்தி த்ரோணம் அத: பரம்' என்று எழுதினார். இதற்குச் சிலேடையாக இரண்டு அர்த்தம். 'மரக்காலைக் காட்டிலும் பதக்குப் பெரிசு' என்பது ஒரு பொருள். சிவம் என்பதற்கு மரக்கால் என்று அர்த்தம் பண்ணிக் குறும்பாக எழுதிவிட்டார். அரசனுக்குக் கோபம் வந்தது. ஏதோ அதற்குச் சிக்ஷை கொடுத்

தான் என்று குருபரம்பரைச் சரித்திரம் வந்துகொண்டிருக்கிறது.

'அஸ்தி த்ரோணம் அத: பரம்' என்பதை நான் அடிக்கடி நினைப்பேன். 'அர்க்கத்ரோண ப்ரப்ருதிகுஸுமை:' என்று அப்பைய தீக்ஷிதர் எழுதிய சுலோகத்தையும் நினைத்துப் பார்ப்பேன். துரோணம் என்பதற்குப் பதக்கு என்று அர்த்தம் செய்வதைவிடத் தும்பைப் பூ என்று சொல்லலாமே என்று தோன்றும். 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்பது இல்லை; பரதரம் இருக்கிறது. சிவனுக்கு மேலே துரோணம் இருக்கிறது. 'அஸ்தி த்ரோணம் அத: பரம்.' துரோணம் என்றால் தும்பைப் பூ. 'சிவனுக்கு மேலே அது உசத்தி' என்று அதற்கு ஓர் அர்த்தம் தோன்றுகிறது.

பெரியவர்களுக்கு அபசாரம் வரக்கூடாது; அவர்கள் குறும்பாக எழுதினார்கள் என்று நாம் நினைக்கக்கூடாது என்று எனக்கு இந்தப் பொருள் தோன்றுகிறது.

இங்கே பக்தர்கள் நிறையத் தும்பைப் பூவைக் கொண்டு வருகிறார்கள். நான் அப்படியே ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்கிறேன். என்னைக் காட்டிலும் கொண்டுவந்து கொடுக்கிற பக்தர்களுக்குத்தான் அதிகப் புண்ணியம். ஸ்வாமியைக் காட்டிலும் ஸ்வாமியைப் பூஜை பண்ணுகிற வஸ்து உசத்தி என்று வேதமே சொல்கிறது. ருத்திரத்திலே, முடிக்கிறபோது,'இந்தக் கை இருக்கிறதே, இதுதான் எனக்குச் சகல மோக்ஷத்தையும் சம்பாதித்துக் கொடுக்கிறது' என்று வருகிறது. பகவத் ஸ்வரூபம் மோக்ஷத்தைச் சம்பாதித்துக் கொடுக்கும் என்று நினைக்கிறேன். இல்லை, இல்லை, இந்தக் கைதான் மோக்ஷத்தைத் கொடுக்கிறது.

இந்தக் கைதான் பகவான். பகவானா? இல்லை, இல்லை, பகவத்தர:-பகவானைக் காட்டிலும் மேற்பட்டது. தரம் என்று சொன்னால் (Comparative degree). பகவத் தரம். ஏன்? கை, ஈசுவரனைப் பூஜை பண்ணுகிறது அல்லவா? ஈசுவரனைப் பூஜை பண்ணி எனக்கு மோக்ஷத்தை வாங்கிக் கொடுப்பது இதுதானே? ஆகவே, 'பகவத்தர:'- சரி; அந்தக் கைக்கும் மேலே இருக்கிறதல்லவா தும்பைப்பூ? அதனாலே சிவாத் பரதரம் நாஸ்தி'. இல்லை; 'அஸ்தி த்ரோணம் அத: பரம்' என்று அந்த ஆழ்வாரோடு சேர்ந்து எனக்கும் சொல்லத் தோன்றுகிறது.

ஈசுவரன் பரம சுலபன்; ஏழை பங்காளன். ஆழ்வார்கள் எல்லாரும் அநுபூதிமான்கள்; மிகவும் படித்தவர்கள்; எல்லாரும் பாசுரங்கள் பாடியவர்கள். ஈசுவரானுக்கிரகம் பெற்ற நாயன்மார்களில் பலபேர் சாதாரணமாக இருந்தவர்கள். ஒன்றும்

தெரியாதவர்கள். எழுதக்கூடத் தெரியாது. பேசக்கூடத் தெரியாது. மீன் பிடிக்கிறவன், மரம் வெட்டுகிறவன், வண்ணான், இப்படி அறிவில்லாதவர்களாக இருந்தவர்களுங்கூட ஈசுவர பக்தி பண்ணி ஈசுவரனுடைய அநுக்கிரகத்தினால் மோக்ஷத்தைப் பெற்றிருக்கிறார்கள். ஈசுவரன் பைத்தியக்காரப் பிராம்மணனாக இருக்கிறான். 'வேதியா, வேதகீதா, அந்தணா!' என்றெல்லாம் சொல்லிப் பாடுகிறார்கள். எல்லாராலும் சுலபமாக ஆராதிக்கக் கூடியவன் ஈசுவரன். அவனை நினைத்து மனசு கரையவேண்டும். நம் ஜன்மா ஸபலம் ஆகிவிடும். அதனால்தான் ஒன்றும் தெரியாத சில நாயன்மார்களும் அவனைப் பக்தி பண்ணினார்கள்.

4

# ஜன்ம நிவிருத்தி

ஈசுவரனும் அம்பாளும் சேர்ந்து ஒரு சரீரம்.. சக்தியும் சிவனும் ஒன்றுதான். சக்தி (Energy), சிவன் (Matter) இருவரும் லோகக்ஷேமார்த்தம் அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தோடு ஒரே பொருளாக விளங்குகிறார்கள். இதுபற்றி ஸ்வாமிக்கும் அம்பாளுக்குமே கலகம் பண்ணிவிடலாம் என்று சிலர் நினைத்தார்களாம். அம்பாளிடம் சென்று அவர்கள் சொல்கிறார்கள்: "அவருக்கு என்ன புகழ்? மன்மதனையே எரித்தாராம். எரித்தவர் யார்? சிவனா'

காமனைக் கண்ணால் எரித்தவராம்.
காலனைக் காலால் உதைத்தவராம்.

காமனைக் கண்ணால் எரித்தவன் என்று அவர் பெயரை வாங்கிக் கொண்டு போய்விட்டாரே! எரித்தது எந்தக் கண்? நெற்றிக் கண். நெற்றிக் கண்ணில் பாதி உன்னுடையதாயிற்றே. நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து செய்த காரியத்தை இரண்டு பேரும் சேர்ந்து செய்ததாகச் சொல்ல வேண்டாமா? அதுதான் போகட்டும். காலனைக் காலால் உதைத்தாராமே? உதைத்தது வலது காலா? இடது காலா? இடது கால் அல்லவா உதைத்தது? அந்தக் கால் உன்னுடைய தல்லவா? நீ அல்லவா காலனைச் சங்காரம் பண்ணினாய்? நீ காரியம் செய்யப் பெயர் அவருக்குப் போய்விட்டது. இது மிகவும் அழகாக இருக்கிறது பார்த்தாயா?' என்பதுபோல் ஒருவர் சொல்கிறார்.

**साधारणे स्मरजये निटिलाक्षिसाध्ये**

ஸாதாரணே ஸ்மரஜயே நிடிலாக்ஷிஸாத்யே

ஸ்மரன் என்றால் மன்மதனுக்குப் பெயர். நிடிலம் என்று நெற்றிக்குப் பெயர். நிடிலாக்ஷி-நெற்றிக் கண்.

**साधारणे स्मरजये निटिलाक्षिसाध्ये भागी हरः**

ஸாதாரணே ஸ்மரஜயே நிடிலாக்ஷிஸாத்யே பாகீ ஹர:

பாகீ என்றால் பாகத்துக்கு உரியவன். வலது கண்ணாக இருந்தால் அவனுக்கே முழுக்கச் சேர்ந்துவிடும். நெற்றிக் கண் ஆனதால்.

भागी हरः

பாகீ ஹர:

அதிலே சிவனுக்குப் பாகம் மாத்திரந்தான் உண்டு. இருந்தாலும்,

हरतु नाम यशः समग्रम्

ஹரது நாம யஶஸ்ஸமக்ரம்

முழுப் பெயரை வாங்கிக்கொண்டு விட்டார். போகட்டும்.

वामाङ्घ्रिमात्रकलिते

வாமாங்க்ரிமாத்ரகலிதே

அங்க்ரி என்றால் கால். வாமம் என்றால் இடப்பாகம். காலனைச் சம்ஹாரம் பண்ணின இடது கால் இருக்கிறதே, அது உன்னுடைய தல்லவா?

जननि त्वदीये का वा प्रसक्तिरिह कालजयेपुरारेः ॥

ஜநநி த்வதீயே கா வா ப்ரஸக்திரிஹ காலஜயே புராரே:

'உதைத்தது இடது கால்: சந்தேகமில்லாமல் உனது பாகம். ஆனால் அந்தப் பெருமையை முழுக்க அவர் வாங்கிக்கொண்டு போய்விட்டார். அவர் கால சங்கார மூர்த்தியாம்! நன்றாய் இருக்கிறதா?' என்று கலகம் விளைவிக்கப் பார்த்தார்கள்.

ஆனாலும் இது சமத்காரமாகச் சொன்னது. அம்பாள் வேறு, சிவன் வேறல்ல. சக்தி இல்லாவிட்டால் சிவன் இல்லை. சிவனோடு ஒன்றி இருக்கும் சக்தியின் அநுக்கிரகத்தினால்தான் ஜனன நிவிருத்தி ஏற்படுகிறது. மாதா பிதாவாகிய இரண்டு பேர்களுடைய கடாக்ஷத்தினால்தான் காமஜயம் பண்ணலாம். அம்பாளுடைய அநுக்கிரகத்தினால் காலஜயம் பண்ணலாம். அம்பாளுடைய சரணாவிந்தந்தான் காலநிவிருத்தி பண்ணுகிறது. ஜன்மத்தின் பலன் ஜனன நிவிருத்திதான்.

நாம் ஜன்மம் எடுத்தது எதற்காக?

मानवजन्मनः किं फलम् ?

மாநவஜந்மந: கிம் பலம்?

சம்பாதிக்க வேண்டியது. சாப்பிட வேண்டியது, ஒவ்வொரு நாளும் ஏதோ ஒரு துக்கத்தை அநுபவித்துவிட்டுக் கடைசியில் சாகவேண்டியதுதானா? சம்பாதித்துச் சாப்பிட்டுத் துக்கங்களை அநுபவித்துவிட்டுச் சாவதைவிட இப்போதே செத்துப் போகலாமே!

ஜன்மம் எடுத்தது ஜன்மத்தைப் போக்கிக்கொள்ளத்தான்.

மனிதனைத் தவிர மிருகங்கள் எல்லாம் குறுக்கே வளர்ந்திருக்கின்றன. மனிதன் ஒருவன்தான் நெடுக வளர்ந்திருக்கிறான். குறுக்கே வளர்வதைவிட்டு மேலே பார்க்கவேண்டும் என்று ஸ்வாமி மனிதனை வைத்திருக்கிறார்.

கை, வாய், கண், மூக்கு, நாக்கு என்பன எல்லா மிருகங்களுக்கும் இருப்பது போலவே மனிதனுக்கும் இருக்கின்றன. கண் பார்க்கிறது. மூக்கு துர்க்கந்தம், சுகந்தம் - நாற்றம் வாசனை-இவற்றைத் தெரிந்துகொள்கிறது. காது; சப்தத்தைக் கேட்கிறது. இப்படி இவை ஒவ்வொரு காரியத்தைச் செய்கின்றன. ஆனால் நாக்கு இரண்டு காரியம் செய்கிறது. ரசத்தைச் சுவைக்கிறது; பேசுகிறது. பாக்கி உடம்பெல்லாம் ஸ்பரிச உணர்ச்சியைத்தான் பெறுகிறது. மனிதனுடைய கை ஸ்பரிசத்தைத் தெரிந்துகொள்வதோடு காரியமும் செய்கிறது. பகவந்நாமத்தைச் சொல்லவும் தர்மங்கள் செய்யவும் நாக்கினாலும் கையினாலும் முடிகிறது.

உயர்ந்து மேல்நோக்கி வளர்கிற மனிதன் மற்றப் பிராணிகளைக் காட்டிலும் அதிகமான சுகத்தை அநுபவிக்கலாம். ஆனால் துக்கத்தைத்தான் நாம் அதிகம் அநுபவிக்கிறோம். மிருகங்களுக்கு நம்மைப்போல இத்தனை காமம், இத்தனை கவலை, இத்தனை துக்கம், இத்தனை அவமானம் இல்லை. பாவங்களைச் செய்து துக்கங்களைத்தான் நாம் அநுபவிக்கிறோம்.

ஒருவழியில் பார்த்தால் மிருகங்களுக்குக் கொடுத்திருக்கும் சௌகரியங்களைச் சுவாமி நமக்குக் கொடுக்கவில்லை என்று தோன்றும். நம்மை யாராவது அடித்தால் திருப்பி அடிக்க ஓர் ஆயுதமும் நமக்கு இல்லை. மாட்டை அடித்தால் அதற்குக் கொம்பு கொடுத்திருக்கிறார்; அதனால் திரும்பி முட்டவருகிறது. புலிக்கு நகம் கொடுத்திருக்கிறார். நமக்குக் கொம்பு இல்லை: நகம் இல்லை. குளிரிலிருந்து காப்பாற்றிக்கொள்ள ஆட்டுக்கு உடம்பில் போர்வை வைத்திருக்கிறார். வேறு மிருகங்களுக்கும் போர்வை வைத்திருக்கிறார். இவன் ஒருவனைத்தான் வழித்துவிட்டிருக்கிறார். யாராவது அடிக்க வந்தால் எதிர்க்க முடியவில்லை. ஓடலாம் என்றால் வேகமாக ஓட முடியாது. குதிரைக்கு ஓடுவதற்கு வேகம் கொடுத்திருக்கிறார். இவனுக்கு ஓடுகிற சக்தி கூட இல்லை. இப்படி இருந்தாலும் ஸ்வாமி இவனுக்குத்தான் புத்தியை அதிகமாக வைத்திருக்கிறார்.

குளிரிலிருந்து காப்பாற்றிக்கொள்ள வேண்டுமானால் மற்றப் பிராணிகளின் போர்வையை இவன் புறித்துக்கொண்டு விடுகிறான். வேகமாகப் போகவேண்டுமா? வண்டியிலே குதிரையைக் கட்டி அதன் வேகத்தை இவன் உபயோகப் படுத்திக்கொண்டு

விடுகிறான். எல்லாவற்றையும் உபயோகப்படுத்திக்கொள்கிற சக்தியை இவனிடத்தில் வைத்திருக்கிறார்.

புத்தியை வைத்துவிட்டு மிருகங்களுக்குக் கொடுத்தது போல இவனுக்கு ஏன் கொம்பு முதலியவற்றைக் கொடுக்க வில்லை? மிருகம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிராந்தியத்தில்தான் இருக்கும். குளிர்ப் பிரதேசத்துக் கரடி நம் ஊரில் இருக்காது. இங்குள்ள யானை அங்கே வாழாது. ஆனால் மனிதன் உலகம் முழுவதும் வாழ்கிறான். அங்கங்கே அவன் தன் புத்தியை உபயோகப்படுத்தித் தனக்குச் சாதகமாகச் செய்துகொள்வான் என்று இப்படிச் செய்திருக்கிறார்.

இந்த உயர்ந்த புத்தியை வைத்துக்கொண்டு மனிதன் கஷ்டப்படுகிறான்; துக்கப்படுகிறான். பிறந்துவிட்டதனாலே இவ்வளவு கஷ்டம். இனிப் பிறக்காமல் இருக்கவேண்டுமானால் என்ன பண்ணுவது? பிறப்புக்குக் காரணம் என்ன? நாம் ஏதோ தப்புப் பண்ணியிருக்கிறோம். இத்தனை கசை அடி அடிக்க வேண்டும் என்று விதித்திருந்தால் இந்த உடம்பை எடுத்து அவற்றை வாங்குகிறோம். பத்து அடி ஆன பிறகு இந்த உடம்பு போய்விட்டால் இன்னோர் உடம்பு வருகிறது. பாக்கியை அந்த உடம்பு வாங்குகிறது. காமத்தினாலே பாவத்தைச் செய்ததனாலே ஜனனம் வந்தது. காரியம் எதுவும் பண்ணாமல் இருந்து விட்டால் ஜனனம் இல்லை.

कर्मण: किं मूलम् ?

கர்மண: கிம் மூலம்?

கர்மாக்களைச் செய்வதற்குக் காரணம் என்ன?

राग:

ராக:

கோபத்தினாலே பல பாவங்களைச் செய்கிறோம். கோபத்திற்குக் காரணம் ஆசை, காமம். காரியத்தை ஒழிக்க வேண்டுமென்றால் முதலில் காமத்தை, ஆசையை ஒழிக்க வேண்டும். பற்றை நிறைய வளர்த்துக்கொண்டு காரியம் செய்யாமல் இருப்பது என்றால் முடியாது. பற்றை ஒழித்துவிட்டால் பாவம் செய்யாமல் இருக்கலாம்.

ஆசைக்குக் காரணம் என்ன? நம்மைத் தவிர இன்னொன்று இருப்பதனாலே ஆசை வருகிறது.

ராகத்திற்கு மூலம்-த்விதீய விஷயம்.

நம்மிடம் நமக்கு ஆசை வராது. இரண்டாவது ஒன்று இருப்பதாக நினைக்கும்போதுதான் ஆசை வருகிறது. இரண்டு

இருக்கிறது என்ற புத்தி இருப்பதற்குக் காரணம் மித்யா ஞானம். இந்தப் புத்தி போய்விட்டால் எல்லாம் ஒன்று என்ற தத்துவம் புரியும், வேதம் என்ன சொல்கிறது?

சாந்தமாகிய சிவமே இரண்டற்ற வஸ்துவாக-எல்லாமாக இருக்கிறது. சிவ ஸ்வரூபந்தான் பரப்பிரம்மம்: (மாண்டூக்ய உபநிஷத்.)

ஒரு மாடு, கண்ணாடியில் தன்னைப் பார்த்துவிட்டு இன்னொரு மாடு இருப்பதாக நினைத்து அதைப் போய் முட்டப்போகிறது. ஒரு மனிதன், தன் பிரதிபிம்பத்தைப் பார்க்கிறான். இன்னொரு மனிதன் இருக்கிறான் என்று அவன் நினைக்கிறானா? எல்லாம் ஒரே பொருள் என்பது அவனுக்குத் தெரிந்து சாந்தமாக இருக்கிறான். இப்படித்தான் எல்லாமாய் அல்லதுமாய் எங்கும் நிறைந்திருக்கிற பொருள் ஒன்று. அதுவே பரமாத்ம ஸ்வரூபம் என்று அத்வைதிகள் கண்டார்கள். இரண்டாவது இருந்தால் ஆசை வரும். ஆசை வருவதனால் கோபம் வருகிறது. கோபம் வருவதனால் பாவங்களைச் செய்கிறோம், அதனால் ஜன்மம் உண்டாகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்துவிட்டால் வேறு பொருள் இல்லாததனாலே ஆசை இல்லை; கோபம் இல்லை அதனால் பாவங்கள் - காரியங்கள் இல்லை. ஜனனம் இல்லை.

ஜன்மத்தின் பலனே ஜன்ம நிவிருத்திதான். ஜன்ம நிவிருத்திக்காகவே மனித ஜன்மம் வந்திருக்கிறது. ஜன்ம நிவிருத்தி ஏற்பட வேண்டுமென்றால் காரியங்கள் - பாவங்கள் செய்யக் கூடாது. பாவங்கள் செய்யாதிருக்கக் கோபம் கூடாது. கோபம் போகவேண்டுமானால் வேறாகத் தெரிகிற வஸ்து இரண்டாவதாக இல்லை; ஒன்றுதான் என்ற உண்மைஞானம் வந்தாக வேண்டும்.

இந்த அத்வைத சித்தாந்தத்தைத்தான் ஸ்ரீ சங்கராசாரியர் சொல்கிறார். நம்மைப் பெற்ற அம்மா, உடம்புக்குப் பால் கொடுப்பாள். அறிவுக்கு ஞானப்பால் கொடுப்பவள் அம்பாள் தான். உண்மையான அறிவின் ஸ்வரூபமே அவள்தான். அவளுடைய சரணாவிந்தத்தைப் பற்றிக்கொண்டு அவளுடைய ஸ்வரூபத்தோடு நம்மை நாம் கரைக்க வேண்டும். 'அம்மா, நான் உன் தாசன்' என்று சொல்லிக்கொண்டு ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பிக்கிறார்.

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणा-
मिति स्तोतुं वाञ्छन् कथयति भवानि त्वमिति यः ।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्यपदवीं
मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमुकुटनीराजितपदाम् ॥

பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணா-
மிதி ஸ்தோதும் வாஞ்சந் கதயதி பவாநி த்வமிதி ய: ।
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜஸாயுஜ்யபதவீம்
முகுந்தப்ரஹ்மேந்த்ர ஸ்புடமுகுட நீராஜிதபதாம் ॥

பவானி என்பது அம்பாளுடைய நாமம். 'பவானி, நான் உன்னுடைய தாசன்; என்னிடத்தில் கருணை பண்ணவேணும். அந்தக் கருணை என்னிடம் உண்டாவதால் நான் என்ன ஆகிறேன்?' என்று சொல்ல ஆரம்பிக்கிறார்.

பவானி என்றால் ஆகிவிடுகிறேன் என்றும் அர்த்தம். எப்படி ஆகிவிடுகிறார்?

भवानि त्वं
பவாநி த்வம்

நீயாகவே நான் ஆகிவிடுகிறேன், நான், என்னுடையது என்பதை உன்னிடத்தில் கரைத்துவிடுகிறேன். நான் என்ற உணர்ச்சி போய், எனது என்ற உணர்ச்சி போய், உன்னிடத்தில் கலந்துவிடுகிறபோது ஒரே பொருள்தான் இருக்கிறது. அது நீயே.'

இப்படி ஸ்தோத்திரம் பண்ணுகிறார். இந்த மாதிரி இரண்டாவது பொருள் இல்லாமல் எல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தோடு ஒன்றுபட்டால் இங்கே ராகம் இல்லை, கர்மம் இல்லை. ஜன்மம் போய்விடுகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் வந்துவிட்டவர்களுக்கு, அம்பிகையின் கடாக்ஷத்தைப் பெற்றுவிட்டவர்களுக்கு, எல்லாம் சமமான திருஷ்டியாகப் போய்விடும்.

शिव शिव पश्यन्ति समं श्रीकामाक्षीकटाक्षिताः पुरुषाः ।
विपिनं भवनममित्रं मित्रं लोष्टं च युवतिबिम्बोष्ठम् ॥

சிவ சிவ பச்யந்தி ஸமம் ஸ்ரீகாமாக்ஷீகடாக்ஷிதா: புருஷா:
விபிநம் பவநமமித்ரம் மித்ரம் லோஷ்டம் ச யுவதி பிம்போஷ்டம்:

என்பதுபோல அவர்கள் எல்லாவற்றையும் ஒன்றாகப் பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட அநுபவம் உண்டாவதற்கு அம்பாளுடைய கடாட்சம் இருக்கவேண்டும். அவளுடைய சரணாரவிந்தத் தியானம் எப்போதும் இருக்கவேண்டும்.

5

# ஆலய வணக்கம்

ஒவ்வொருவரும் தம்மாலான வகையில் பிறருக்கு உதவ ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். ஏழைகளாக இருப்பவர்கள் சரீர உபகாரம் செய்ய லாம். பணக்காரர்கள் பொருளுதவி செய்யலாம். செல்வாக்கு உள்ளவர்கள் மற்றவர்களின் நிலை மேம்படத் தமது செல் வாக்கை உபயோகிக்கலாம். இவ்வாறாக ஒவ்வொருவருக்கும் சமூக சேவை செய்ய வாய்ப்பு இருக்கிறது.

இந்தியா ஏழை நாடு. ஆனால் முன்காலத்தில் ஏழைகள் சேர்ந்துதான் இப்போது நாம் தென்னாடெங்கும் ஒவ்வொரு நகரிலும் கிராமத்திலும் காண்கிற பெரிய ஆலயங்களையும் கோபுரங்களையும் கட்டினார்கள். அந்தக் கால்ச் செல்வநிலை வேறு. ஜனங்களின் தேவை கொஞ்சந்தான். ஆத்மிகத் துறை யிலும் மற்ற வகைகளிலும் பொதுஜனங்களுக்குப் பயன்படக் கூடிய பிரம்மாண்டமான கட்டடங்களை எழுப்பித் தந்த தொழிலாளருக்கு உபரி விளைபொருள்களைக் கொடுத்து உதவி வந்தார்கள்.

இந்தக் காலத்திலோ சமூக சேவை என்பது வேறு மாதிரி யாக இருக்கிறது. வறுமை, நோய், அறியாமை ஆகியவைகளை ஒழிக்கக் கூட்டுறவு அடிப்படையில் பள்ளிக்கூடங்கள் கட்டு கிறார்கள். ஆஸ்பத்திரிகள் கட்டுகிறார்கள்; பாங்குகள் (Banks) ஏற்படுத்துகிறார்கள். இந்த மாதிரி சமூக சேவையினால் முழுப் பலனும் கிடைத்துவிடுவதில்லை. பொய் பேசுவதையும் லஞ்ச ஊழல்களையும் கல்வியால் ஒழிக்க முடியவில்லை. இதற்கு மாறாக, நவீனக் கல்வி பெறாத மலைஜாதிப் பாமர மக்களிடம் அதிக நேர்மையும் நாணயமும் இருக்கின்றன. ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சிகிச்சை செய்துகொண்டு விடலாம் என்ற நம்பிக்கை மக்களைத் தாறுமாறாக நடக்கச் செய்துவிடுகிறது. பாங்குகள் மூடப்படும் சமயத்தில் ஒரே மூச்சாக வறுமையை அதிகமாக்கி விடுகின்றன.

தேவைகளைப் பெருக்கிக்கொள்வதால் சதா அதிருப்தியில் உழல நேரிடுகிறது. எளிய வாழ்க்கையில்தான் உண்மையான சந்தோஷத்தைக் காண முடியும். நம் நாட்டில் சமுதாயக் கோயில்கள் பல இருக்கின்றன. ஆவுடையார் கோயிலை

எடுத்துக்கொள்வோம். அங்கே ஏராளமான அரிசிச் சாதம் பொங்கி ஸ்வாமிக்கு நைவேத்தியம் செய்த பின், அந்தச் சாதத்தை எல்லாருக்கும் குறைந்த விலைக்கு விற்கிறார்கள். பல கோயில்களில் சமுதாய வாழ்க்கை உணர்வு ஏற்படுத்துவதற்கென்றே விசேஷ விழாக்களும் தினங்களும் வைத்திருக்கிறார்கள். அந்தச் சமயங்களில் தேவையானவர்களுக்கெல்லாம் நிவேதனம் செய்த உணவு வழங்கப்படுகிறது.

உதவி பெற்றதற்கு நன்றி செலுத்துவது ஒரு சிறந்த குணம். அரசாங்கத்துக்கும் கார்ப்பரேஷனுக்கும் கொடுக்கப்படும் வரிகள் இது போன்றனவே. அவை செய்த சேவைகளுக்கு நன்றியளிப்பதற்காகத் தரப்படுவதே வரி. இதே மாதிரி மக்களுக்கு நன்மைகளைக் கொடுக்க, புலப்படாத சில அதிகார ஸ்தானங்கள் (Agencies) இருக்கின்றன. வேதத்தில் விதித்தபடி அந்த அதிகார ஸ்தானங்களுக்கு மக்கள் தமது நன்றியைத் தெரிவிக்கவேண்டும். இப்படிச் செய்வதுதான் யக்ஞம் என்பது. இன்றைய சமுதாய அமைப்பில் பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள், பாங்குகள் போன்ற சமூக சேவை ஸ்தாபனங்கள் அவசியமாக இருந்தாலும் அவற்றின் நோக்கங்கள் பூர்த்தியாக ஈடேறுவதில்லை. ஆண்டவன் அருளில் அசையாத நம்பிக்கை வைத்துச் சகிப்புச் சக்தி பெறுவதே மாந்தர் துயர் தீர்க்கும் அருள் மருந்தாகும். பக்தி ஒன்றுதான் அந்தக் கஷ்டங்களையெல்லாம் சகித்துக்கொள்ளக்கூடிய சக்தியைத் தரும். அந்தப் பக்தியை வளர்க்கும் ஏஜன்ஸிகளே ஆலயங்கள். இதற்காகத்தான் எல்லா இடங்களிலும் ஆலயங்களை நிர்மாணிக்க வேண்டும்.

ஆலயங்களில் உள்ள மூர்த்திகளுக்கு நிவேதனமும் காணிக்கை செலுத்துவதும் எல்லாவற்றையும் படைத்த பரம்பொருளுக்கு நன்றி செலுத்துவதற்கு அறிகுறியாகச் செய்யப்படுபவைகளே. மனிதனால் ஒரு சிறு புல்லைக்கூடச் சிருஷ்டிக்க முடியாது. எனவே நாம் உட்கொள்ளுவதை முதலில் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யாமலிருப்பது நன்றியற்ற செய்கையாகும். சிறந்தனவற்றைத்தான் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யவேண்டும். எல்லாருமே வீட்டில் பூஜை செய்து ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்ய இயலாது. அதனால் ஆலயங்கள் ஏற்பட்டன.

தேவாலயங்களுக்கு நாம் தினமும் போக வேண்டுமா வேண்டாமா என்று பலருக்குச் சந்தேகம். போகவேண்டியது மிகவும் அவசியம். அந்தக் காலத்தில் கோயில் உச்சிக்கால மணியோ அர்த்த ஜாம மணியோ கேட்ட பிறகுதான் மத்தியான்னச் சாப்பாடோ இரவுச் சாப்பாடோ சாப்பிடுவார்கள்.

ஈசுவரனுக்கு நைவேத்தியம் சரியாக நடக்கவேண்டும், நாம் எல்லாரும் கோவிலுக்குப் போகவில்லையென்றால் அங்கே ஒன்றும் சரியாக நடக்காது. சரிவரப் பூஜை, நைவேத்தியம் எல்லாம் நடந்துவருகின்றன என்று தெரிந்தால் கோயிலுக்குப் போக வேண்டிய அவசியம் இல்லை. நான் கோயிலுக்குப் போகிறேன் என்றால் எனக்காகவாவது கோயிலைச் சுத்தமாக வைக்கிறார்கள். விளக்கு, நைவேத்தியம் முதலியவற்றைச் சுத்தமாகச் செய்கிறார்கள். இதற்காகவாவது கோயிலுக்குப் போகவேண்டியிருக்கிறது.

நம் ஊரில் இருக்கிற கோயிலில் பூஜை சரிவரச் செய்கிறார்களா என்று கவனிக்கவேண்டியது நம் கடமை. கோபுர தரிசனம் தினப்படி செய்தாலே போதும். ஆனால் கோயிலில் பணிகள் சரியாக நடக்கின்றனவா என்று பார்ப்பது நம் எல்லாருடைய முதல் கடமை. மிகவும் சூக்ஷ்மமான தர்மங்களையெல்லாம் நாம் மறந்துவிட்டோம். ஈசுவரனுக்கு அழுக்குத் துணி கட்டக்கூடாது, சுத்தமான துணியாக இருக்கிறதா என்று நாம் கவனித்துப் பார்த்தால் போதும். நமது மனசுகூட அழுக்கு இல்லாமல் போய்விடும், இப்போது ஒவ்வோர் ஊரிலும் மிகுந்த அழுக்குத் துணி கட்டுக்கொண்டிருக்கிறவர் யார் என்று பார்த்தால் ஸ்வாமிதான். இந்த ஒரு தர்மத்தையாவது செய்தால், நல்ல தூய ஆடையை ஈசுவரனுக்குச் சாத்தும்படியாகச் செய்தால், மிகவும் விசேஷம். இந்தத் தர்மம் சூக்ஷ்மம். சூக்ஷ்மத்தை விட்டு ஸ்தூலத்திற்கு நிறையக் காரியங்கள் செய்கிறோம்.

அநேக தர்மங்கள் இருக்கின்றன. கஞ்சி வார்ப்பது, பண உதவி செய்வது, அன்னதானம செய்வது எல்லாம் தர்மந்தான். மூலமான தர்மம் ஆலய பூஜை குறையாமல் இருக்கிறதா என்று கவனிப்பதுதான். சுத்தமாக இருக்கவேண்டும், விளக்கு இருக்க வேண்டும். இப்படியெல்லாம் ஆலயம் இருக்கிறதா என்று கவனிக்கவேண்டும். இப்படி இருந்தாலே போதும், ஏராளமான ஆஸ்பத்திரிகள் ஏற்படுத்துவதனால் நமக்கு என்ன சௌகரியம் உண்டாகிறதோ அது உண்டாகும். 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று, என்றுதான் ஔவை சொன்னாள். கோயிலைத் தொழுவது நல்லது என்று சொன்னாள்.

'ஆலயம் தொழு', அரனை மறவேல், 'திருமாலுக்கு அடிமை செய்'-ஒவ்வொன்றும் நாம் செய்யவேண்டிய கடமையைத்தான் நினைவுறுத்துகிறது; இவற்றை நாம் மறக்கக்கூடாது. ஆலயத்தைத் தொழுதாக வேண்டும். வாரத்தில் ஒரு நாளாவது ஆலயத்தைத் தொழுவது, தினமும் நாம் பாராயணம் செய்வது என்று வைத்துக்கொண்டால் சாசுவதமான நன்மைகள் எல்லாம் உண்டாகும்.

# 6
# காமேசுவரி

அம்பாளுடைய ஸ்தோத்திரங்களில் மூகபஞ்சசதி என்பது மிகவும் உயர்ந்தது. அது உண்டானது காஞ்சீபுரத்தில். அதில் ஐந்நூறு சுலோகங்கள் அடங்கியுள்ளன. அதில் ஒவ்வொன்றிலும் அநேகமாக காஞ்சீ என்ற பதமோ காமகோடி என்ற பதமோ காமாட்சி என்ற பதமோ ஏகாம்ர என்ற பதமோ தொண்டைமண்டலத்தைக் குறிக்கும் துண்டீரம் என்ற பதமோ இல்லாமல் இராது.

அந்த ஐந்நூறு சுலோகங்களும் சம்ஸ்கிருதத்தில் இருக்கின்றன; ஒன்றைக் காட்டிலும் ஒன்று அமிருதக் கடலாக அமைந்திருக்கிறது. நன்ருக அதைப் படித்து ஆராயப் பாக்கியம் கிடைத்தவர்களுக்கு இது தெரியும்.

சில சமயங்களில் நித்தியம் ஒன்றைப் பார்த்தாலும் பார்க்கப் பார்க்க அதைப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. பார்க்கப் பார்க்க அலுக்காத வஸ்துக்கள் சில இருக்கின்றன. குழந்தைகளுக்கு யானையின் கிட்டே போகப் பயம். ஆனுல் தூர நின்றுகொண்டே காலையில் பார்க்கும்; மத்தியான்னம் பார்க்கும்; மாலையிலும் பார்க்கும். எத்தனை தடவை பார்த்தாலும் சலிப்பில்லாமல், 'யானை எங்கே? யானை எங்கே?' என்று குழந்தைகள் அதைத்தான் பார்க்கும். இப்படித்தான் சமுத்திரமும்; பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் என்று தோன்றும். பார்த்துவிட்டோமே என்ற அலுப்பே தட்டுவதில்லை. இவை பார்த்து அலுக்காத வஸ்துக்கள். அது மாதிரியே சந்திரன். எத்தனை தரம் பார்த்தாலும் தினமும் சந்திரோதயத்தைப் பார்க்கவேண்டும் என்றே தோன்றுகிறது. இப்போது எங்கே பார்த்தாலும் விளக்குகள் வந்துவிட்டன. நிலா இருந்தாலும் இல்லாவிட்டாலும் எங்கே பார்த்தாலும் ஒரே நிலாப்போல இருக்கிறது. இதனுல் சந்திரனின் உண்மை நிலாவைப் பார்க்கிற சந்தர்ப்பம் பலருக்கு இல்லாமல் போய்விட்டது. ஆனுல் சந்திரனைப் பார்க்கப் பார்க்க அலுப்புத்தட்டாது, அவ்வளவு குளுமை, அவ்வளவு அழகு!

இப்படியே படிக்கப் படிக்க அலுப்புத் தட்டாத அமிருத சமுத்திரமாக மூகபஞ்சசதி இருக்கிறது. ஒவ்வொரு சமயத்தில்

ஒவ்வொரு விதமான ஆனந்தம் உண்டாகிறது. அதன் ரசத்தை அநுபவிக்கக் கூடிய பாக்கியம் உள்ளவர்களுக்கு இது தெரியும். அந்தச் சுலோகங்கள் அம்பாளுடைய கடாட்சத்தினுலே வந்தமையால் இவ்வளவு ஆனந்தத்தைத் தருவனவாக இருக்கின்றன.

அதில் நூறுநூறு சுலோகங்களாக ஐந்து பகுதிகள் இருக்கின்றன. நூறு என்பதற்குச் சதகம் என்று பெயர், தமிழில்கூட, திருவேங்கட சதகம், சோழமண்டல சதகம் என்று இருக்கின்றன.

அந்த மாதிரி முதல் நூறு சுலோகத்திற்கு ஆர்யா சதகம் என்று பெயர். இரண்டாவது பாதாரவிந்த சதகம்; மூன்ருவது ஸ்துதி சாதகம்; நான்காவது கடாக்ஷ சதகம்; ஐந்தாவது மந்தஸ்மித சதகம். 500 சுலோகங்கள் கொண்டது பஞ்சசதி; 5 சதகம்; 500 சுலோாகம்.

அதில் ஸ்துதி சதகத்தில் அம்பாளைப்பற்றிச் சொல்கிற போது,

तापिञ्छस्तबकत्विषे

தாபிஞ்சஸ்தபகத்விஷே

என்று சொல்கிருர் மூக கவி.

தாபிஞ்சம் என்பது காயாம்பூ; நல்ல நீல வர்ணமாக இருக்கும். அந்தப் புஷ்பக் கொத்துப்போல் அம்பாளுடைய தேக காந்தி நல்ல நீல வர்ணமாக இருக்கிறது என்கிருர் கவி.

परिफुल्लनीलनलिनश्यामाक्षि

பரிபுல்லநீலநலிநஶ்யாமாக்ஷி

என்றும் சொல்கிருர்.

காயாம்பூ மாதிரியே நீலோத்பல புஷ்பத்தின் வர்ணமும் இருக்கும். காயாம்பூ, நீலோத்பலம் இவை இரண்டும் எந்த வர்ணமாக இருக்கின்றனவோ அந்த வர்ணமாக அம்பாளுடைய சரீர காந்தி இருக்கிறது என்று ஸ்துதி சதகம் முழுவதும் சொல்கிருர்.

ஆர்யா சதகத்தில்,

चिद्वपुषा काञ्चिपुरे केलिजुषा बन्धुजीवकान्तिमुषा ।

சித்வபுஷா காஞ்சிபுரே கேலிஜுஷா பந்துஜீவகாந்திமுஷா ।

என்கிருர். 'பந்துஜீவம்' என்ருல் செம்பருத்திப்பூ. செம்பருத்திப் பூவின் காந்தி எப்படி இருக்கிறதோ அப்படிச் சிவப்பாக அம்பாளுடைய தேக காந்தி இருக்கிறது என்று சொல்கிருர். ஆர்யா சதகத்தில் முதல் சுலோகத்தில்,

काश्मीरस्तबककोमलाङ्गलता

காஶ்மீரஸ்தபககோமலாங்கலதா

என்கிறார். காச்மீரத்தில் குங்குமப்பூ உண்டாகிறது. அங்கே உண்டாகும்படியான குங்குமப் பூவைப்போல அம்பாளுடைய வர்ணம் இருக்கிறது என்கிறார். குங்குமப்பூ நல்ல சிவப்பாக இருக்கும். அம்பாளுடைய காந்தி, காச்மீரத்துக் குங்குமப்பூப் போல் நல்ல சிவப்பாக இருக்கிறது என்று வர்ணிக்கிறார்.

ஸ்துதி சதகத்தில் சொல்கிறபோது அம்பாளுடைய தேக காந்தி காயாம்பூப் போலவும் கருநீலோத்பலம் போலவும் இருக்கிறதென்று சொல்கிறார். மற்றொன்றில் குங்குமப் பூவைப் போல் இருக்கிறது என்கிறார்.

இது என்ன?

ஆசாரிய ஸ்வாமிகள் பண்ணியிருக்கும் ஸௌந்தர்ய லஹரியில்,

अराला केशेषु

அராலா கேஶேஷு

என்னும் சுலோகத்தில் அம்பாளுடைய தேக காந்தியை வர்ணிக்கும்போது,

जयति करुणा काचिदरुणा

ஜயதி கருணா காசிதருணா

'அருணோதயப் பிரகாசம் எப்படி இருக்குமோ அப்படித் தேக காந்தி இருக்கிறது' என்று சொல்லியிருக்கிறார்.

அருணோதயப பிரகாசம் நல்ல சிவப்பு. ஆர்யா சதகத்தில் காச்மீரத்துக் குங்குமப்பூ, செம்பருத்திப்பூ ஆகியவற்றைப் போன்ற வர்ணம் அம்பாளுடைய தேக காந்தி என்று சொல்வதற்கு ஏற்றபடி இருக்கிறது, இந்த வர்ணனை.

ஸௌந்தர்ய லஹரியில் ஓரிடத்தில் அம்பாள் பரமசிவத்தினுடைய வாம பாகத்தில் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறாள் என்று சொல்லியிருக்கிறது.

பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்பவர்கள் திரிமூர்த்திகள். அவர்களுக்குமேல் மகேசுவரன், ஸதாசிவன். அவர்களுக்கும் மேலே காமேசுவரன், காமேசுவரி. காமேசுவரனுடைய அங்கத்தோடு காமேசுவரி இருக்கிறாள் என்று லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் சொல்லியிருக்கிறது.

सृष्टिकर्त्री ब्रह्मरूपा गोप्त्री गोविन्दरूपिणी ।
संहारिणी रुद्ररूपा तिरोधानकरीश्वरी ।
सदाशिवानुग्रहदा पञ्चकृत्यपरायणा ॥

ஸ்ருஷ்டிகர்த்ரீ - ப்ரஹ்மரூபா
கோப்த்ரீ - கோவிந்தரூபிணீ |
ஸம்ஹாரிணீ - ருத்ரரூபா
திரோதானகரீ - ஈஶ்வரீ |
ஸதாஶிவா - அநுக்ரஹதா
பஞ்சக்ருத்ய பராயணா ||

என்று வருகிறது.

அம்பாள் இருக்கும்படியான மஞ்சம் இருக்கிறதே, அதை வர்ணிக்கிறார். அதற்கு நான்கு கால்கள். ஒரு கால் பிரம்ம ஸ்வரூபவம். ஒரு கால் விஷ்ணு ஸ்வரூபம். இன்னொரு கால் ருத்ர ஸ்வரூம். நான்காவது கால் ஈசுவர ஸ்வரூபம். அந்த நான்கு கால்களுக்குமேல் போட்டிருக்கும்படியான பலகை ஸதாசிவ ஸ்வரூபம். அதன்மேல் காமேசுவர காமேசுவரியாக இருப்பவள் அம்பாள்.

நீருக்குள் ஒன்றைப் போட்டால் அது கரையாமல் இருந்தால் நீரையும் பார்க்கலாம்; போட்ட பொருளையும் பார்க்கலாம். கரைந்து போய்விட்டால் போட்ட பொருள் தெரியாது. அப்படி, சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரம் பண்ணின பிறகு ஸ்வரூபம் இல்லாமல் கரைந்து நிற்கிற பொருள் அது. எல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தோடு கலந்து போய்விடும். தோன்றியதும் அதிலிருந்துதான்; கரைந்துபோய் ஸ்வரூபம் தெரியாமல் போய்விடுவதும் அதில்தான். பரமசிவனிடமிருந்து முதலில் தோன்றியது சக்தி தத்துவம். அதற்குப் பிறகுதான் திரிமூர்த்திகள்-மூன்று சக்திகள் தோன்றுகின்றன. பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன் ஆகிய ஸ்வரூபத்திலே நான்கு கால்கள். அதற்குமேல் ஸதா சிவ மஞ்சம். அதன் மேல் அம்பாள் இருப்பதாக ஸௌந்தர்ய லஹரியிலும் சொல்லியிருக்கிறது. அது போலவே அம்பாளுடைய ஸஹஸ்ர நாமத்திலும் சொல்லியிருக்கிறது.

சிவப்புக்குள்ளே நல்ல சிவப்பு அம்பாளுடைய தேககாந்தி. அருணோதய காலத்திலே வானத்தைப் பார்த்தால் ஒரே சிவப்பாகக் காட்சி அளிக்கும். 'த்ரிலோகமும் அருணப் பிரபையில் மூழ்கி இருக்கும்படியான ஸமஸ்த லோகமும் சிவந்து போகும் படியான ஸ்வரூபமாகத் தன்னுடைய சிவப்பான காந்தியின்

பிரவாகத்தினால் பிரம்மாண்டங்களினுடைய மண்டலங்களை முழுகச் செய்கிறவளாக அம்பாளைத் தியானம் பண்ணவேண்டும்' என்று சொல்லியிருக்கிறது. அத்தகைய அருண ஸ்வரூபம் காமேசுவரியினுடையது. பஞ்ச கிருத்தியங்களுக்கு ஆதிமூலமாக இருக்கும் மகாசக்தி அவள். காரியத்திற்கு வேண்டிய குணங்கள் இன்றி ஸ்வச்சமாக இருக்கும்படியான ஸ்வரூபம் அது; காரியத்தை மற்றவர்களுக்குக் கொடுத்துவிட்டு ஆனந்தமாக இருக்கும்படியான ஸ்வரூபம். அங்கே காரியம் இல்லை. காரியத்திற்கு மேற்பட்ட ஸ்வரூபம் அது; இவையெல்லாம் பஞ்ச கிருத்தியங்களைச் செய்துகொண்டிருக்கின்றன. காரியம் இல்லாமல் இருக்கும்படியான ஸ்வரூபம் ஆனந்த ஸ்வரூபம்.

அந்த ஸ்வரூபம் எப்படி இருக்கிறது? சாமனிய வெளியில் பிரகாசிக்கும் வெளிச்சம் சிவப்பா கறுப்பா வெளுப்பா? ஒன்றும் சொல்ல முடியாது; அதற்கென்று ஒரு வர்ணம் சொல்வதற்கில்லை. ஜலமும் வர்ணம் இல்லாததுதான். சுத்த ஜலமாக இருந்தால் அதற்கு ஒரு நிறம் இல்லை. சுத்த ஸ்படிகத்தைச் சோதித்துப் பார்ப்பதற்கு என்ன பரீட்சை என்றால் அதை ஜலத்தில் போட்டால் ஜலத்திற்கும் அதற்கும் ஒருவித வித்தியாசமும் தெரியாது; ஸ்படிகம் ஜலத்தில் இருப்பதே தெரியாது.

காமேசுவரனுடைய ஸ்வரூபம் சுத்த ஸ்படிகஸங்காச ஸ்வரூபம். அதுதான் பரப்பிரஹ்ம ஸ்வரூபம்; உருவம் இல்லாத வஸ்து அது. உருவம் இருந்தும் உருவம் இல்லாத வஸ்து; உருவமாய் அருவமாய்ப் பூஜை பண்ணுகிறார்கள்; உருவம் இல்லை; ஆனால் உருவம் இருக்கிறது.

ஸௌந்தர்ய லஹரியில் ஆசாரியர், 'வர்ணமே இன்றி ஒரே ஸ்படிக நிறமாக இருக்கிற சிவன்கூட ஒரே சிவப்பாகப் போய் விடுகிறார். சுத்த ஸ்படிகம் நல்ல சிவப்பாகப் போய்விடுகிறது' என்று சொல்கிறார்!

गतास्ते मञ्चत्वं द्रुहिणहरिरुद्रेश्वरभृतः
शिवः स्वच्छच्छायाघटितकपटप्रच्छदपटः ।
त्वदीयानां भासां प्रतिफलनरागारुणतया
शरीरी शृङ्गारो रस इव दृशां दोग्धि कुतुकम् ॥

கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிணஹரிருத்ரேச்வரப்ருதः
சிவः ஸ்வச்சச்சாயாகடிதகபடப்ரச்சதபடः ।
த்வதீயாநாம் பாஸாம் ப்ரதிபலநராகாருணதயா
சரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருசாம் தோக்தி குதுகம் ॥

தேவி நல்ல சிவப்பாக இருப்பதனால் சுத்த ஸ்படிக நிற முள்ள சிவனும் சிவப்பாகிவிடுகிறாராம். காமேசுவரியின் சரீரம் நல்ல சிவப்பாக இருக்கிறது.

மூகபஞ்சசதியிலும் ஆர்யா சதகத்திலும் அம்பாளுடைய வர்ணம் நல்ல சிவப்பாக இருக்கிறது என்று சொல்லியிருக் கிறது. ஸ்துதி சதகத்தில் நீலவர்ணமாகச் சொல்லியிருக்கிறது. இப்படிச் சொல்லக் காரணம் என்ன என்பதைச் சொல்ல வந்தேன்.

ஸௌந்தர்ய லஹரியில் இன்னோர் இடத்தில்,

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविदो
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिस्सीममहिमा
महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषि ॥

கிராமாஹுர்தேவீம் த்ருஹிணக்ருஹிணீமாகமவிதோ
ஹரே: பத்நீம் பத்மாம் ஹரஸஹசரீ மத்ரிதநயாம் |
துரீயா காபி த்வம் துரதிகமநிஸ்ஸீமமஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரஹ்மமஹிஷி ||

என்ற வாக்குகள் குறிப்பிடப்படுகின்றன. நல்ல சாஸ்திரங்களை யெல்லாம் அறிந்தவர்கள் என்ன சொல்கிறார்கள், தெரியுமா?

गिरां देवीं द्रुहिणगृहिणीं आहुः

கிராம் தேவீம் த்ருஹிணக்ருஹிணீம் ஆஹு:

கிராம் தேவீம் என்றால் வாக்தேவியை, சரஸ்வதியை; த்ருஹிணக்ருஹிணீம்-பிரம்மாவினுடைய வீட்டுக்காரி, மனைவி என்று சொல்லுகிறார்கள்.

हरेः पत्नीं पद्माम्

ஹரே: பத்நீம் பத்மாம்

பத்மாம் என்றால் லக்ஷ்மியை. பத்மா, பத்மாவதி என் றெல்லாம் அவளைத்தான் சொல்லுகிறோம். விஷ்ணுவினுடைய பத்தினி லக்ஷ்மி ஆகிறாள்.

हरसहचरीं अद्रितनयाम्

ஹரஸஹசரீம் அத்ரிதநயாம்

அத்ரி என்றால் மலை; அத்ரிதநயாம்-ஹிமாசலன் மகள், பார்வதி. ஹர-சிவனுடைய, ஸஹசரீம்-ஸஹதர்மிணி, பார்வதி ஆகிறாள் என்று சொல்லிவிட்டார்கள்.

உன்னை நான் சொல்லிக்கொண்டிருக்கிறேனே? இந்த மூன்றைக் காட்டிலும் நான்காவதாக இருக்கிற நீ யார்?

तुरीया कापि त्वं

துரீயா காபி த்வம்

இந்த மூன்றுக்கும் மேலாக இருக்கிற உன்னுடைய மகிமையினால் உன்னுடைய மகாமாயையினால் அல்லவா திரிமூர்த்திகள்-சக்திகள் எல்லாம் செயல்படுகின்றன? உன்னுடைய மகிமையை மனசினால் யோசனை பண்ணுவதற்குக்கூட முடியாது. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார க்ருத்யத்திற்காகத் திரிமூர்த்திகளை உண்டு பண்ணிவிட்டு இந்தக் காரியத்திற்கும் மேலாக, அதிதேவதையாக இருப்பது உன்னுடைய ஸ்வரூபம். மூன்றுக்கும் மேலாக நான்காவதாக இருக்கிறவள் நீதான்.

परब्रह्ममहिषि

பரப்ரஹ்மமஹிஷி

என்று அம்பாளைப்பற்றி ஆசாரியர் சொல்கிறார்.

இந்தத் திரிமூர்த்திகள் மூன்று பேர்களுக்கும் மூன்று சக்திகள் இருக்கிறார்கள். அம்பாள் நான்காவது சக்தி. பிரம்மா என்ன நிறமாக இருக்கிறார்? ஸ்வர்ண வர்ணமாக இருக்கிறார்; உருக்கிவிட்ட தங்கம்போல இருக்கிறார். விஷ்ணு நீலமேக ச்யாமள வர்ணமாக இருக்கிறார்; நல்ல நீலமேகமாக இருக்கிறார். சிவன் எப்படி இருக்கிறார்? பனிபோல. கைலாச பர்வதத்தில் உள்ள பனிக்கட்டியைப் போல், சுத்த வெள்ளையாக இருக்கிறார்; இதற்கு நேர்மாறாகப் பார்வதி கறுப்பாக இருக்கிறாள்.

விஷ்ணு நீலமேகமாக இருக்கிறார். லக்ஷ்மி மின்னல்கொடி போல் இருக்கிறாள். தமிழிலும் சம்ஸ்க்ருதத்திலும் அவளை மின்னல் கொடியாக வர்ணித்திருக்கிறார்கள். சரஸ்வதி ஒரே வெளுப்பாக இருக்கிறாள். ஆக, திரிமூர்த்திகள் ப்ரம்மா, விஷ்ணு, சிவன் மூன்று பேரும் மஞ்சள், கறுப்பு, வெளுப்பு, இந்த மூவருடைய சக்திகளும் முறையே வெளுப்பு, மஞ்சள், கறுப்பு. இவர்களுக்கு மேலே பராசக்தி; துரீயத்திலே, நான்காவதாக இருப்பவள். அவள் எப்படி இருக்கிறாள்! அருணப்ரபையாக நல்ல செக்கச்செவேலென்று இருக்கிறாள். இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? திரிமூர்த்திகள், திரிமூர்த்திகளுடைய சக்திகள் இவர்களுக்குள் என்ன தாம்பத்தியம், என்ன சம்பந்தம்? இதிலே மூன்று சக்திகளுக்கும் மேற்பட்டு நான்காவது சக்தி அம்பாள். அது என்ன?

போட்டோ இருக்கிறது. பிலிம் எடுக்கிறார்கள். 'வாஷ்' பண்ணுவதற்குச் சிவப்பைத் தவிர எந்தவர்ணத்தினுடைய ஒரு கிரணம், 'ரே'-பட்டாலும் உடனேயே போய்விடும். நல்ல இருட்டிலே கழுவ வேண்டும். கொஞ்சம் கண் தெரிவதற்குச் சிவப்பு விளக்கு வேண்டும்.

வெறும் பகல் ஒளிக்கு நிறம் இல்லை, வர்ணம் இல்லை போலத் தோன்றுகிறது. ஆனால் அதையே சில கண்ணாடிகளை வைத்துக்கொண்டு பார்த்தால் ஸ்பஷ்டமாகப் பச்சை, சிவப்பு, ஊதா என்று பல வர்ணங்கள் தெரிகின்றன. பளபளவென்று பல வர்ணங்கள் உதிர்கின்றன. வைரக்கல் எவ்வளவு வர்ணங்களை உதிர்க்கிறது! இவ்வளவு வர்ணங்களும் சேர்ந்தது சூரிய வெளிச்சம். எல்லா வர்ணங்களும் சேர்ந்தால் வர்ணமே இல்லாமல் போகிறது. ஒன்று குறைந்தாலும் எல்லாம், 'நான் போகிறேன், நான் போகிறேன்!' என்று பிரிந்து போகின்றன. எல்லாம் சேர்ந்திருந்தபோது வர்ணம் இல்லை; ஒன்று குறைந்தவுடன் எல்லாம் தனித்தனி ஆகின்றன.

பகல் ஒளிமாதிரி சுத்த ஸ்படிக நிறமாக உள்ள பரப்பிரும்ம ஸ்வரூபத்திடமிருந்து முதலில் தோன்றியது சக்தி: சிவப்பு வர்ணம். அந்தச் சக்தி வெளிப்பட்ட வுடனே மஞ்சள், நீலம், ஸ்வர்ணம் போன்ற பல வர்ணங்கள், ரூபங்கள் உண்டாகின்றன. உருவம் இல்லாத ஒரு பரமாத்ம ஸ்வரூபத்தினிடமிருந்து தோன்றியது பராசக்தி. நல்ல சிவப்பு வர்ணம் எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது. பிறவற்றைப் பாதிக்காத நல்ல சிவப்பாக இருக்கிறது. மூன்று மூர்த்திகள், மூன்று சக்திகள் ஆவிர்ப்பவித்தன. பராசக்தி பரப்ரம்மத்தை, தனக்கு வர்ணம் இல்லாத சுத்த ஸ்படிக சங்காசமாகக் காமேசுவரன் என்னும் பெயருடன் நாதனாக அமைத்துக்கொண்டாள். ஒரு புருஷன் ஒரு ஸ்திரீயாக ஆறுபடைப்புகள் இரண்டு இரண்டாக.

சிவன்-பார்வதி, பிரம்மா-சரஸ்வதி, விஷ்ணு-லக்ஷ்மி என இரண்டு இரண்டாகச் சேர்ந்து சிவப்பாக இருக்கும்படியான பராசக்திகுப் பின் தோன்றினார்கள் என்று நான் சொல்லப் போவதாக நீங்கள் நினைப்பீர்கள். அப்படிச் சொல்லப்போவதில்லை.

சிவனும் சரஸ்வதியும் சேர்ந்து ஆவிர்ப்பவித்தார்கள். பிரம்மாவும் லக்ஷ்மியும் சேர்ந்து ஆவிர்ப்பவித்தார்கள். விஷ்ணுவும் பார்வதியும் சேர்ந்து ஆவிர்ப்பவித்தார்கள். ஒரு பெண்ணும் ஓர் ஆணுமாக ஒரே சமயத்தில் இரட்டையாக ஆவிர்ப்பவித்தனர். ஆகையால் இவர்கள் இரண்டு பேர்களும் ஒருவருக்கொருவர் சகோதர சகோதரிகள், அண்ணன் தங்கை என்று அர்த்தம்.

'மூன்று ஜோடிகள் பிறப்பானேன்' இரண்டு பிறந்தால் போதாதா?' என்ற சந்தேகம் உண்டாகும். இந்த மூன்று ஜோடிகளில் ஒவ்வொரு பெண் ஒவ்வோர் ஆணுக்குப் பத்தினியாக இருக்கவேண்டும். இவன் சகோதரியை அவனுக்குக் கொடுத்தால் அவன் சகோதரியை இவன் கல்யாணம் பண்ணிக்

கொள்ளக்கூடாது: பெண் கொடுத்துப் பெண் வாங்கக்கூடாது. ஆகையால் திரிமூர்த்திகள்; மூன்று சக்திகள், பராசக்தியிடமிருந்து தோன்றின.

சிவனோடு பிறந்த சகோதரியைப் பிரம்மா தம்முடைய சக்தி யாக்கிக்கொண்டார். விஷ்ணுவோடு பிறந்த சகோதரியைச் சிவன் தம் சக்தி யாக்கிக்கொண்டார். பிரம்மாவோடு பிறந்த சகோதரியை விஷ்ணு தம் சக்தி யாக்கிக்கொண்டார். இதற்கு என்ன அடையாளம்? சிவன், ஸ்வச்சமாகப் பார்வதியோடு கலப்பில்லாமல் இருக்கக்கூடிய ஸ்வரூபம் தக்ஷிணமூர்த்தி: அவருடைய வர்ணம் என்ன? ஒரே வெளுப்பு, ஒரு கையில் புஸ்தகம். ஒரு கையில் ஜபமாலை-இரண்டும் உண்டு. இந்த இரண்டும் எந்தப் பெண் தெய்வத்தினிடம் இருக்கின்றன? சரஸ்வதியிடம் இருக்கின்றன. அவள் நிறம் நல்ல வெளுப்பு. அவள் கையிலும் புஸ்தகமும் ஜபமாலையும் இருக்கின்றன. அவள் ஞானம் கொடுப்பவள். சிவனும் ஞானத்தைத்தான் கொடுக்கிறார். இரட்டையாகப் பிறக்கிறவர்களுக்கு வர்ணம், குணம் மாறுவதில்லை. சிவனும் சரஸ்வதியும் இரட்டைப் பிறப்பு.

அடுத்தாற்போல வருபவர்கள் பிரம்மாவும் லக்ஷ்மியும்; பிரம்மா உருக்கி விட்ட தங்க நிறம்; லக்ஷ்மியும் அதே நிறந்தான். இரண்டு பேருக்கும் ஆசனம் தாமரை; தாமரைப் புஷ்பத்தில் அமர்ந்திருக்கிறார்கள்; பிரம்மா, சதா சிருஷ்டி பண்ணிக்கொண் டிருக்கிறார். லக்ஷ்மியும் ஐசுவரியத்தைப் பெருக்கிக்கொண் டிருக்கிறாள்.

மற்ற இரண்டு பேர் இருக்கிறார்கள்: விஷ்ணுவும் பார்வதியும் இரட்டை. விஷ்ணு நல்ல நீலமேக சியாமள நிறம். பார்வதியும் அப்படித்தான். அம்பாள் தனியாக இருக்கக்கூடிய ஸ்வருபத்தைக் கோயிலில் போய்ப் பார்த்தால் தெரியும். துர்க்கையாக வடக்குப் பிராகாரத்தில் கையில் சங்கு சக்கரத்தோடு அவள் இருக்கிறாள். துர்க்கையின் கையில் சங்கு சக்கரம் இல்லாமல் இருப்பதில்லை. மகாவிஷ்ணுவுக்கும் சங்கு சக்கரம் இருக்கும். இவரும் பச்சை, அவளும் பச்சை. நாராயணி, நாராயண சகோதரி என்று அதனால்தான் இவளுக்குப் பெயர். லலிதாவாக அவளைப் பாடும்போது கிருஷ்ணசகோதரி என்று பாடுவது உண்டு.

இப்படி மூன்று மூர்த்தி, மூன்று சக்தி, மூன்று குணம், மூன்று அவஸ்தை-நிலை; எல்லாம் மூன்றாக இருக்கின்றன. நாம் ஒன்று தூங்கிக்கொண் டிருப்போம்; அல்லது விழித்துக்கொண் டிருப்போம்! இல்லாவிட்டால் கனாக் காண்போம். சத்துவம், ரஜஸ், தமஸ் என்று மூன்று குணங்கள் உண்டு. இந்த மூன்று குணங்களே அந்த மூன்று அவஸ்தைகள்; நான்காவது துரீயம்.

மூன்று மூர்த்திகள், மூன்று குணங்கள், மூன்று அவஸ்தைகள்-நிலைகள். விழித்துக்கொண் டிருப்பது, கனுக் காண்பது, தூங்குவது. இப்படி மூன்று காரியங்கள், இந்த மூன்றுக்குள் நாம் சுற்றிக்கொண்டே இருக்கவேண்டியதுதான், நான்காவது என்று ஒன்று இல்லாவிட்டால், குதிரை யானை, சிங்கம்; குதிரை யானை சிங்கம் என்று திருவிழா ராட்டினத்தில் சுற்றிக்கொண் டிருப்பதுபோலப் பிறப்பது, வாழ்வது, சாவது, விழிப்பது, கனுக் காண்பது, தூங்குவது என்று சுற்றிக்கொண்டே இருக்க வேண்டியதுதான். இந்தச் சுற்றை விட்டு நான்காவதை அடைகிறபோது ஆனந்த நிலை உண்டாகிறது; திரும்பவும் சுற்றுக்குள் அகப்படாத நிலை உண்டாகிறது. கிட்டத்தட்ட நாமம், ரூபம் எல்லாம் மூன்றுவதற்கும் நான்காவதற்கும் ஒன்றுகவே சொல்கிறேம். மூன்றுவது சக்தியைப் பார்வதி என்கிறேம். நான்காவதும் பார்வதிதான், அவளையும் உமா என்கிறேம். இவளையும் உமா என்கிறேம். பார்வதி, உமாதேதி, ஹைமவதி என்றெல்லாம் சொல்லுகிறேம். ஸ்துதி சதகத்திலும் ஆர்யா சதகத்திலும் ஒரே பெயர்களையே சொல்லியிருக்கிறர்.

எதற்கு மூன்று பெயர், மூன்று வர்ணம் என்று கேட்டால் மூன்று காரியங்கள் நடக்கின்றன? சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்ற மூன்று க்ருத்யங்கள் நடைபெறுகின்றன. நித்தியம் அவை நடைபெறுகின்றன. நமக்குப் பிரளய காலம் தூக்கம். சிருஷ்டி என்பதுதான் ஸ்வப்னம். கனவில் ஒரு க்ஷண காலத்தில் எத்தனை சிருஷ்டி செய்துவிடுகிறேம்! விழித்துக்கொண் டிருப்பதுதான் ஸ்திதி. பிரளயத்தில் எல்லாம் ஒடுங்குகின்றன. தூக்கத்தில் ஒடுங்குகின்றன. சிருஷ்டி கர்த்தா பிரம்மா, அவர் சக்தி சரஸ்வதி, ஸ்திதி அதாவது பரிபாலனம் செய்பவர் மகாவிஷ்ணு, அவர் சக்தி லக்ஷ்மி; சம்ஹாரமூர்த்தி ருத்திரர்; அவர் சக்தி பார்வதி. இந்த மூன்று மூர்த்திகளில் ஒன்று மஞ்சள், ஒன்று கறுப்பு, ஒன்று வெளுப்பு; இவர்களோடு சம்பந்தப்பட்ட மூன்று குணங்களில் சத்துவம், வெளுப்பு; ரஜஸ் மஞ்சள்: தமஸ் கறுப்பு, இப்படி மூன்று மூர்த்திகள், மூன்று சக்திகள், மூன்று வர்ணங்கள். மூன்று காரியங்கள். இதிலே மூன்றுவதற்கும் நான்காவதற்கும் ஏன் அதிகமான சம்பந்தம்? ஏன் முதலாவதையும் நான்காவதையும் சேர்க்கக்கூடாது? அல்லது இரண்டாவதையும் நான்காவதையும் சேர்க்கக்கூடாது? அப்படிச் சேர்க்காததற்குக் காரணம் என்ன;

கனவில் என்ன இருக்கிறது? சந்தோஷம் முழுக்க இருக்கிறதா? ஒவ்வொரு சமயம் சிறிது சந்தோஷம் உண்டானாலும் துக்கம் அதிகமாக வருகிறது. பயமும் துச்கமும் கஷ்டமுந்தான் கனவில் சுகத்தைக் காட்டிலும் அதிகம். விழித்துக்கொண் டிருக்

-கும்போது அநேகமாகத் துக்கந்தான். எப்போதாவது சிறிது சந்தோஷப்படுகிறோம். உடனே அதற்கும் சேர்த்துத் துக்கப் பட்டுவிடுகிறோம். விழித்துக்கொண் டிருப்பதைவிட ஸ்வப்னத் தில் சந்தோஷம் கொஞ்சம் அதிகம்.

மூன்றாவது நிலை தூக்கம்; விழித்துக்கொண் டிருக்கும் போதும் கனாக் காணும்போதும் ஆனந்தம் கொஞ்சமாகவும் துக்கம் கொஞ்சம் தூக்கலாகவும் இருக்கின்றன. தூக்கத்தில் துக்கக் கலப்பேயில்லாத ஆனந்தம் மாத்திரம் அடக்கமாக இருக்கிறது; அப்போது நான்காவது நிலை எப்படி இருக்க வேண்டும்? எல்லையற்ற ஆனந்தமாக இருக்கவேண்டும். இது மூன்றாவதோடு சம்பந்தம் உடையது. முதல் இரண்டு நிலை களுக்கும் இதற்கும் சம்பந்தம் உண்டோ? இல்லை. அவற்றில் துக்கம் ஜாஸ்தியாக இருக்கிறது; இங்கே ஆனந்தம் ஒன்றே இருக்கிறது. ஆனந்தம் மூன்றாவது நிலையாகிய தூக்கத்தில் அடக்கமாக இருக்கிறது. நான்காவது நிலை, கலப்பில்லாத பிரகாசமான ஆனந்தம். ஓர் உப்புக் கட்டியை வாயில் போட் டால் கரிக்குமே தவிர வேறு ஏதாவது சுவை இருக்குமா? இருக்காது. அப்படி நான்காம் நிலை ஆனந்தக் கட்டி; ஆனந்தத் தைத் தவிர வேறு ஒன்றும் இல்லை.

## समुघनर

### ரஸகநம்

அப்படிப்பட்ட நான்காவது நிலையாக, காமேசுவர மஹிஷியாக இருக்கிறாள் பராசக்தி. அந்த நிலையிலிருந்து மூன்று ரூபங்கள் தோன்றக் காரணமாக இருந்துகொண் டிருக்கின்றன. மூன்றாவதற்கும் நான்காவதற்கும் சம்பந்தம் அதிகம்.

துரீய நிலையில் ஆனந்த நிலையில், ஜீவன்முக்தர்களாக இருக்கிறவர்கள் சதா ஆனந்த வெள்ளத்திலே ஆனந்தமயமாக இருந்துகொண் டிருக்கிறார்கள்.

அந்தக் காமேசுவரனுடைய சக்தியாகிய காமேசுவரிக்கும் தூக்கத்திற்கு அதிஷ்டானமான பார்வதிக்கும் பொருத்தம் அதிகம். மூன்றாக இருப்பது மூன்று க்ருத்யங்கள் நடைபெறுவ தற்காக. மூன்றாக இருப்பதும் அந்த ஒன்றுதான்.

பிரளயம் தூக்கந்தான். பரமேசுவரன் சம்ஹாரம் பண்ணு கிறான்; தூங்கச் செய்கிறான். தூங்கும்போது என்ன ஆகிறது? சிலருக்குத் தூங்கும்போது கண் மூடிக்கொண்டு விடுகிறது. சிலருக்குத் திறந்துகூட இருக்கும். எப்படி இருந்தாலும் கண், பார்வையாகிய தன் காரியத்தைச் செய்வதில்லை. கண்களைப் போலக் காதுக்கு அடைப்பான் இல்லை. காது மூடுவதே இல்லை. அது திறந்திருந்தும் கேட்பதில்லை. தூக்கத்தில் இந்திரியங்கள்

ஒரு வேலையும் செய்யாமல் அப்படியே ஆனந்த ஸ்வரூபத்தோடு ஒடுங்கிக் கிடக்கின்றன. தூங்கும்போது அவ்வளவும் போய் அமுங்கிவிடுகின்றன. விழித்துக்கொண்டே இருப்பதனால் காரியங்கள் செய்து அலுத்துப் போகின்றது. ஒவ்வொரு நாளும் அதற்கு ஆறுதல் தூக்கந்தான். தூக்கம் என்பதை ஆண்டவன் வைத்ததனால்தான் கொஞ்சமாவது சுகத்தை ஒவ்வொரு நாளும் அநுபவிக்கிறோம்.

பிரம்மா என்ன பண்ணுகிறார்? எல்லாவற்றையும் உலகத்தில் சிருஷ்டி பண்ணிக்கொண்டே இருக்கிறார். நல்லதைக் கொடுக்கிறார். கெட்டதைக் கொடுக்கிறார். எல்லாவற்றையும் உண்டுபண்ணிக்கொண்டே இருக்கிறார். அவர் படைத்தவற்றை விஷ்ணு, பரிபாலனம் செய்துகொண்டே இருக்கிறார், ருத்திரர் அழிக்கிறார். சாகிறது. மறுபடியும் பிறக்கிறது. பிறப்பது சாகிறது. இப்படி ஒரே சுற்றாகச் சுற்றிக்கொண்டே இருக்கிறது.

'பண்ணின கர்மாக்களுக்கு எத்தனை துன்பத்தை அநுபவிக்க வேண்டியிருந்தாலும் அப்புறம் அநுபவி; கொஞ்சம் தூங்கு' என்பது போல ஈசுவரன் கடைசியில் எல்லாவற்றையும் தன்னுடைய ஆனந்த ஸ்வரூபத்தோடு கலக்க வைத்துவிடுறான், பிரளயத்தில் எல்லாம் தூங்குகின்றன. மறுபடியும் சிருஷ்டி. அவரவர்களுக்கு ஏற்றபடி ஜன்மம் கொடுக்கிறான், இவ்வளவு க்ருத்யங்களுக்கும் மூலமான சக்திகள், பரப்பிரம்ம ஸ்வரூபத்திலிருந்து முதலில் அருணோதயம்போலச் செக்கச்செவேலென்று செம்பருத்திப் பூப் போன்ற வர்ணத்தோடு தோன்றிய பராசக்தியினால் உண்டாக்கப்பட்டவை. அந்தப் பராசக்தியே ஆனந்தத்திற்குக் காரணமான துரீய நிலையில் ஆனந்தமயமாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறாள். அவளுடைய தேக காந்தியைத்தான்.

## दाडिमीकुसुमप्रभा

## தாடிமீகுஸுமப்ரபா

என்று சொல்வார்கள். தாடிமீகுஸுமம் என்பது மாதுளம்பூ. மாதுளம்பூவின் வர்ணந்தான் அம்பாளுடைய வர்ணம்; அருணப் பிரபைபோலச் செக்கச்செவேலென்று இருக்கும். காச்மீரத்துக் குங்குமப் பூவின் வர்ணம்; செம்பருத்திப் பூவின் வர்ணம்; எல்லாம் சிவப்பு. பராசக்தியின் வர்ணமும் ஒரே சிவப்பு. வர்ணம் இன்னது என்று சொல்ல முடியாமல் ஒரே வெளுப்பாக இருக்கிற பரப்பிரம்ம ஸ்வரூபத்லிருந்து பராசக்தியான சிவப்பு வர்ணம் பிரிந்தவுடனே மஞ்சள், பச்சை, கறுப்பு ஆகியவை ஒவ்வொன்றாக வெளிப்படுகின்றன.

ஸௌந்தர்ய லஹரியில் ஆசாரியர் சொல்கிறார்:

जगत् सूते धाता हरिरवति रुद्रः क्षपयते
तिरस्कुर्वन्नेतत् स्वमपि वपुरीशस्तिरयति ।
सदापूर्वः सर्वं तदिदमनुगृह्णाति च शिव-
स्तवाज्ञामालम्ब्य क्षणचलितयोर्भ्रूलतिकयोः ॥

ஜகத் ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதே
திரஸ்குர்வந்நேதத் ஸ்வமபி வபுரீஶஸ்திரயதி |
ஸதாபூர்வ: ஸர்வம் ததிதமநுக்ருஹ்ணாதி ச ஶிவ:
தவாக்ஞாமாலம்ப்ய க்ஷணசலிதயோர்ப்ரூலதிகயோ: ||

ஒரு க்ஷணம் பராசக்தி புருவத்தை நெரிக்கிறாள்.

क्षणचलितयोर्भ्रूलतिकयोः

க்ஷணசலிதயோர்ப்ரூலதிகயோ:

அருண ஸ்வரூபமாக இருக்கிற பராசக்தியினுடைய புருவம் க்ஷண காலம் நெரிய ஆரம்பித்தவுடன் என்ன ஆகிறது?

जगत् सूते धाता

ஜகத் ஸூதே தாதா

தாதா என்றால் பிரம்மா. பிரம்மா சிருஷ்டி பண்ண ஆரம்பித்துவிட்டார்.

हरिरवति

ஹரிரவதி

ஹரி-விஷ்ணு, பரிபாலனம் செய்ய ஆரம்பித்துவிட்டார்:

रुद्रः क्षपयते

ருத்ர: க்ஷபயதே

ருத்திரன் சம்ஹாரம் பண்ண ஆரம்பித்துவிட்டார்.

இப்படி மாறி மாறி நடக்கிறது. இப்படிச் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார க்ருத்யங்களைத் தன் ஆணையினால் நடத்திக்கொண்டிருப்பவள் அருண ஸ்வரூபமாக விளங்குகிற பராசக்தி என்று இந்தச் சுலோகம் சொல்கிறது.

எந்த மாதிரியாக நாம் தியானம் பண்ணுகிறோமோ அந்த மாதிரி அநுக்கிரகம் அடையலாம்; தியான ஸ்வருபத்திற்குத் தகுந்தாற்போல ஒரு வர்ணம், ஒரு ரூபம். இப்படி எல்லாம் இருந்துகொண்டு அநுக்கிரகம் பண்ணுகிறவள் அம்பாள்தான். ஸ்ருதி, மந்திர சாஸ்திரம், வேத சாஸ்திரம், புராணங்கள் எல்லாம் இவற்றைத்தான் சொல்கின்றன. சிருஷ்டி தத்துவம்,

ஸம்ஹார தத்துவம், அநுக்கிரக தத்துவம் எல்லாம் ஒரே தத்துவம். பிரம்மாவாகப் பார்த்தால் மஞ்சள், விஷ்ணுவாகப் பார்த்தால் பச்சை, கருநீலோத்பல நிறம், ருத்திரனுகப் பார்த்தால் பனிபோன்ற வெண்மை. சரஸ்வதியாகப் பார்த்தால் வெண்மை, பனிபோன்ற வெண்மை. பார்வதியாகப் பார்த்தால் பச்சை, கருநீலோத்பல நிறம். லட்சுமியாகப் பார்த்தால் மஞ்சள். இவை எல்லாம் ஒரே சிவப்பாக இருக்கிற பராசக்தியினிடத்தில் உண்டானவை. அந்தப் பராசக்தியும் கடைசியில் பரப்பிரம்மத்தோடு கலக்கிறபோது நிறமே அற்றவளாகப் போய்விடுகிருள்.

ராவணன் பெரிய ஈசுவர பக்தன். உலகுக்குக் காமியாக-மகாலட்சுமியைச் சிறைப்படுத்தியவனுகத் - தோன்றினுலும் அதன் தத்துவம் வேறு, 'அவன் பெரிய அபசாரத்தைப் பண்ணினவன்; அவனுவது, ஈசுவர பக்தனுக இருப்பதாவது!' என்று நமக்குச் சந்தேகம் வரும். அதற்கு ஒரு சமாதானம் உண்டு.

ராமாயணங்கள் அநேகம் இருக்கின்றன. துளசி ராமாயணம், வால்மீகி ராமாயணம், ஆனந்த ராமாயணம், துர்வாஸ ராமாயணம் இப்படிப் பல ராமாயணங்கள், இவைகளில் ஏதோ ஒன்றில் கீழ்க்கண்டவாறு சொல்லியிருக்கிறதாம். ராமனுடைய வர்ணம் பச்சை வர்ணம். அம்பாளுடைய நிறமும் பச்சை வர்ணந்தான். 'ஈசுவரி ராமனுக வேஷம் போட்டுக்கொண்டு வந்தாள். ஈசுவரன் சீதையாக வேஷம் போட்டுக்கொண்டு வந்தான்' என்று சொல்லியிருக்கிறது. அந்தக் காலத்தில் மிகவும் சின்ன வயசில் குழந்தைகளுக்குக் கல்யாணம் பண்ணு வார்கள். பெண்ணுக்குப் பிள்ளை வேஷம் போட்டும் பிள்ளைக்குப் பெண் வேஷம் போட்டும் கல்யாணம் பண்ணி ஊர்வலம் விடுவார்கள்.

அது போல ஈசுவரனும் அம்பாளும் சீதையும் ராமனுமாக வந்தார்களாம். பராசக்திதான் விஷ்ணு. ஈசுவரனை அசோக வனத்தில் வைத்துப் பூஜிக்கவேண்டும் என்பது ராவணனுடைய எண்ணம். முன்பே அடிக்கடி கைலாசத்திற்குப் போய்க்கொண்டிருக்கலாகாது என்று அதைப் பெயர்த்துக் கொண்டுவரப் பார்த்தான். மலை ஆடினபோது அம்பாள் பயந்துகொண்டு பரமேசுவனைக் கட்டிக்கொண்டாள். இவன் முயற்சி வெற்றி பெறவில்லை. இதற்கு என்ன பண்ணுவது: மோட்சம் வேண்டுமென்றுல் ஈசுவரனுடைய அநுக்கிரகம், பராசக்தியின் அநுக்கிரகம் வேண்டுமே. இதற்கு ஓர் அபசாரம் பண்ணினுலும் பரவாயில்லை; என்ன பண்ணலாம்? என்று யோசித்துக்கொண்டிருந்தான். ஈசுவர பக்தி-பிரேமை - அவனுக்கு அதிகமாகி விட்டது. ஈசுவரன் சீதையாகவும் பராசக்தி ராமனுகவும்

அவதாரம் பண்ணியிருக்கிருர்கள். வேஷம் போட்டு வந்திருக்கிருர்கள் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது.

வால்மீகி ராமாயணத்திலேகூட ஓர் இடம் வருகிறது. ராமன், 'நான் தனியாகக் காட்டுக்குப் போகப் போகிறேன்' என்று சொன்னபோது, சீதை, 'நானும் வருகிறேன்' என்று சொல்கிருள். 'நீ வரக்கூடாது. ஆபத்துச் சம்பவிக்கும்' என்று சொல்கிருன் ராமன். சீதை அதற்கு விடையாக ஒன்று சொல்கிருள்.

स्त्रियं पुरुषविग्रहम्

ஸத்ரியம் புருஷ விக்ரஹம்

'நீ யார்? பெண்பிள்ளையா? பெண்பிள்ளையா இப்படி வேஷம் போட்டு வந்திருக்கிருய்?' என்று சூக்ஷ்மமாக வெளிப்படுத்தினளாம். ஆஞ்சநேயர் யார்? நந்திதான்.

किमेष भगवान् नन्दी ?

கிமேஷ பகவாந் நந்தீ?

என்று ஓர் இடத்தில் இருக்கிறது. ராமனும் சீதையும் ஆஞ்சநேயருமாக வேஷம் போட்டு வந்தாலும் இவர்கள் பார்வதியும் பரமேசுவரனும் நந்திபகவானுமே. ஈசுவரனை இலங்கைக்குக் கொண்டுபோக முதலில் பண்ணின முயற்சி தோற்றுவிட்டது. இப்போது - உலகுக்குக் காமியாகப் - பெரிய அபசாரத்தைப் பண்ணினவன் போலத் தூக்கிப் போய்விட்டான். ஸாக்ஷாத் பராசக்திதான் ஸ்ரீராமன்.

இப்படித் தேவாரத்தில்கூடச் சொல்லியிருக்கிருர்கள். நாவுக்கரசர்-அப்பர் சுவாமிகள்-சொல்கிற காலத்தில்,

அரியலால் தேவி யில்லை ஐயன்ஐ யாற ஞர்க்கே

என்கிருர். ஐயாறு என்ருல் ஐந்து ஆறு. பஞ்சநத க்ஷேத்திரம்; திருவையாறு. திருவையாற்றில் இருக்கும் ஈசுவரனுடைய தேவி விஷ்ணுதான் என்கிருர். ஒன்று சக்தி (Energy); ஒன்று சிவம் (ஸத்); இரண்டும் சேர்ந்து பல க்ருதயங்களைப் புரிகின்றன. க்ருத்யங்களுக்கு ஏற்றபடி மூன்று குணம், மூன்று வர்ணம், மூன்று அவஸ்தை எல்லாம் மூன்ருக இருக்கின்றன. இந்த மூன்று என்ற வட்டத்தைத் தாண்டும்போது நான்காவதாகிய துரீய நிலையில் எல்லாம் லயப்பட்டு விடுகின்றன.

இப்போது இருக்கும்படியான லோக வழியில் இதைப்பற்றி யோசிக்கச் சாவகாசம் இல்லை: மந்திரத் தியானமோ ரூபத் தியானமோ பண்ணுவதற்கான அவகாசம் இல்லை. ஏதாவது ஒரு மந்திரத்தை ஜபிப்பது, ஓர் உருவத்தைத் தியானிப்பது

என்ற பழக்கம் மனசுக்கு வருவது கொஞ்சம் சிரமம். தேவியி னுடைய சரணகமலத்தை எப்போதும் உபாசித்தால் அவளு டைய கடாக்ஷத்தால் ஜனன நிவிருத்தி ஏற்படும். அதற்கு முதல் படி பாராயணம்; அதற்கப்புறம் ஜபம்; பின்பு தியானம் பண்ணுவது. அப்படித் தியானம் பண்ணும்போது, 'பராசக்தி! இந்த உடம்பிலிருந்து உயிர்போகும் தருணத்தில் நான் உன் னையே தியானம் பண்ணிக்கொண் டிருக்கும்படியாக அநுக்கிரகம் செய்யவேணும்' என்று பிரார்த்திக்கொள்ள வேண்டும்; இப்படி ஒவ்வொரு நாளும் அவளுடைய சரணாரவிந்தத்தைப் பிரார்த் தித்து வேண்டிக்கொண்டால் உயிர்போகும் தருணத்திலும் அவளுடைய கடாக்ஷத்தால் அவளுடைய தியானம் வரும்.

தேவியும் குருவும் ஒன்றே. குரு பாதுகையும் தேவி பாது கையும் ஒன்றே. குரு பாதுகையைச் சந்திரமண்டலத்தில் தியானம் செய்யவேண்டும்.

சூரியன் சுயமான பிரகாசத்தை உடையவனாக இருக்க லாம். நமக்கு அவன் ஒளி கொடுக்கிறான் என்றாலும் அவனால் தாபம் உண்டாகிறது; வேர்க்கிறது, தாகம் எடுக்கிறது. அம்பா ளுடைய பிரகாசம் நமக்கு ஒளியும் கொடுக்கிறது; தாபத்தையும் நீக்குகிறது; அது சந்திரிகையின் ஒளிபோல இருக்கிறது. தாப சாந்தி பண்ணுவது அமிருதம். சந்திரகிரணம்போல அமிருத மாக நமக்குத் தாபத்தை நீக்கிச் சாந்தியைக் கொடுத்துக் கொண்டு பிரகாசிக்கிறது அம்பிகையின் கடாக்ஷம்.

சந்திர கிரணம் மிகவும் குளிர்ந்திருக்கிறது. நமது தேசத் தில் இருக்கிறவர்களுக்குக் குளிர்ச்சியில் ஒரு பிரீதி. 'அவன் குளுமையாக இருக்கிறான். குளுமையாகப் பேசினான். இப்போது தான் என் வயிறு குளிர்ந்தது' என்று சந்தோஷ விஷயங் களுக்குச் செல்வோம்.

மேல்நாட்டார்களுக்கு இது நேர்மாறாக இருக்கலாம். அவர் களுடைய பிரதேசம் ஒரே குளிரானதால் அவர்களுக்கு உஷ்ணந் தான் (warmth) இன்பம் அளிக்கும். கோல்டு (cold) என்றால் நம் முடைய எண்ணத்திற்கு நேர்விபரீதமான அர்த்தம்.

நமக்குச் சந்திரகிரணம் மாதிரி, தாபத்தை நீக்கிக் குளுமை யைக் கொடுத்து ஆனந்தத்தை அளிப்பவள் அம்பிகை. அம்பிகை சந்திரமண்டலத்தில் வாசம் செய்வதாகப் பல இடங்களில் சொல்லியிருக்கிறது. சந்திரனின் அமிருதகிரணமாக, சந்திரமய மாக இருக்கிறதுதான் அம்பாள் ஸ்வரூபம். நமக்கு இன்பம் கொடுக்கிற பெருநிதி அவள்தான். இப்படித்தான் அனேக கிரந் தங்கள் சொல்லுகின்றன. அந்தச் சாக்ஷாத் பரதேவதையின் சரணத்தைத் தியானம் பண்ணிச் சுத்தமாக க்ஷேமத்தை ஆனந் தத்தை நாம் அடைவோமாக.

7

# வித்தையும் விநயமும்

அநேக கிராமங்களில், பஞ்சாயத்துப்போர்டு உள்ள இடங்களில் ஊருக்குள் நுழையும் இடத்தில் போர்டு ஒன்று கட்டி வைத்திருக்கிறார்கள். அந்தப் போர்டிலே. இந்தக் கிராமத்திலே இவ்வளவு ஜனத்தொகை, படித்தவர்கள் இவ்வளவு, படிக்காதவர்கள் இவ்வளவு என்பவை போன்ற அநேக விவரங்களைத் தெரிவித்திருக்கிறார்கள். அதற்குப் பக்கத்தில் சில இடங்களில் தனியாகச் சில போர்டுகள் போடப்பட்டிருக்கின்றன. அந்தப் போர்டுகளில், இங்கிலாந்தில் நூற்றுக்கு எத்தனை பேர் படித்தவர்கள், அமெரிக்காவில் நூற்றுக்கு எத்தனை பேர் படித்தவர்கள், ஜப்பானில், எத்தனை பேர் படித்தவர்கள் என்று ஒவ்வொரு நாடாக எழுதிக்கொண்டு வந்து இந்தியாவிலே நூற்றுக்குப் படித்தவர்கள் இவ்வளவு, படிக்காதவர்கள் இவ்வளவு என்று எழுதிக் காட்டியிருக்கிறார்கள், நம் நாட்டில்தான் படித்தவர்கள் மிகவும் குறைவாக இருக்கிறார்கள்; மற்ற நாடுகளில் படித்தவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். இதைப் போர்டிலே எழுதிக் காட்டியிருப்பதற்குக் காரணம், அதைப் பார்த்தாவது நம் ஜனங்களுக்கும் படிக்க வேண்டும் என்ற ஆசை உண்டாகட்டும் என்பதுதான். ராஜாங்கத்தை நிர்வாகம் பண்ணுகிறவர்களுக்கு, 'எல்லாரும் படித்திருக்க வேண்டும். நூற்றுக்கு நூறு பேர் படித்திருக்கவேண்டும். படிக்காதவர்கள் இருக்கக்கூடாது' என்று அபிப்பிராயம், ஆகையால்தான் அந்தமாதிரி போர்டுகள் போட்டிருக்கிறார்கள்.

படிப்பின் பிரயோஜனம் என்ன? எதற்காகப் படிக்க வேண்டும்? கல்வியின் பயனாக நல்ல குணங்கள் அமையவேண்டும்; கெட்ட குணங்கள் விலக வேண்டும். அதற்காகத்தான் கல்வி இருக்கிறது.

கல்வியினால் உண்மையை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனால் இப்படிச் சொல்லிக்கொண்டு போனால், 'உண்மை எது?' என்ற கேள்வி வரும். 'உண்மை என்பது பரம்பொருள்தான். ஆண்டவன்தான் இந்த உலகத்திற்கெல்லாம் மேலான காரணம், அவன் ஒருவனே உண்மைப்

பொருள். இருக்கிற மற்றப் பொருள் எதுவும் உண்மை அல்ல; மற்ற எல்லாம் வெறும் தோற்றப் பொருள்' என்னும் உண்மை தெரியவேண்டும்.

மகான்கள் எல்லாரும் ஆண்டவனையே நினைத்து, அவனையே பாடுவது, அவனுக்காகவே வாழ்வது, மற்ற எல்லாவற்றையும் துறந்துவிடுவது என்று இருந்தார்கள். வேறு குடும்பக் காரியம் அவர்களுக்கு இல்லை. எப்பொழுதும் ஆண்டவனையே நினைப்பதும் நினைத்து உருகுவதுமாக இருப்பார்கள்.

அவனுக்காகத்தான் நாம் வாழ்கிறோம். பாக்கி எல்லா வற்றுக்கும் வாழ்ந்து என்ன பிரயோஜனம்? கஷ்டத்தையும் துக்கத்தையும்தான் அநுவிக்கிறோம். வாழ்வில் ஆனந்தம் வேண்டுமென்றால் உண்மையான அந்தப் பொருளுக்காகத்தான் வாழவேண்டும்.

'ஜகம் பொய்' என்று தாயுமானவர் பாடுகிறார். உலகம் எல்லாம் பொய்; ஆண்டவன் ஒருவன்தான் உண்மை என்று அவரைப்போல் நாமும் தெரிந்துகொள்ள வேண்டும். கல்வியினால் ஒன்றைத் தெரிந்துகொள்வதாக இருந்தால் ஆண்டவனைத் தெரிந்துகொள்ள வேண்டும். அவன்தான் உண்மையான பொருள்.

வேதத்தில் ஆனந்தவல்லியின் ஆரம்பத்தில், 'सत्यम्' ஸத்யம்' என்று கூறியிருக்கிறது. வேதப்பொருள் என்று ஸ்வாமிக்குப் பெயர். அதுதான் உண்மை என்று சொல்லிவிட்டால் பாக்கி எல்லாம் உண்மை அல்ல என்பது தெளிவாகும்.

இந்தப் பொய்யான உடம்புக்கு மெய் என்று பெயர். பெயராவது மெய் என்று இருக்கட்டும் இந்த உடம்புக்கு. ஆனால் பெயரைக் கண்டு இதை மெய்யென்று எண்ணி ஏமாந்து போகக்கூடாது. இப்படித்தான் பல வைஷ்ணவ பக்தர்களும் சைவ பக்தர்களும் சொல்கிறார்கள்.

உலகம் பொய், உலகம் பொய் என்று எதற்காகச் சொல்ல வேண்டும்? ஆண்டவன் ஒருத்தன்தான் மெய் என்று உணர்ந்து கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான் சொல்கிறோம். கல்வியினால் அந்த மெய்யான பொருளை அறிந்துகொள்ள வேண்டும். கல்வி என்பது அந்த மெய்யான பொருளை அறிவிப்பதுதான்.

மெய்யான பொருளை அறிந்துகொள்வதற்காக இருப்பது கல்வி. கல்வியினால் நல்ல குணங்கள் ஏற்பட வேண்டும். கெட்ட குணங்கள் எத்தனைக்கு எத்தனை அதிகமாகின்றனவோ அத்தனைக்கு அத்தனை உண்மையான அறிவை விட்டு விலகி ஓட வேண்டியிருக்கிறது. கெட்ட குணங்கள் விலக விலகச் சத்திய மான ஆண்டவனை நெருங்கிப் போகிறோம். நல்ல குணங்கள்

எல்லாம் உண்மையை அறிவதற்குச் சாதனம். படிப்பின் முதல் பயன், நல்ல குணம்; முடிவு: உண்மையை அறிந்துகொள்வது.

கல்வியில் பலவகை இருக்கலாம், பூகோள சாஸ்திரம் இருக்கிறது; அதைப் படிக்கிறோம். இவ்வளவு நாடுகள் இருக்கின்றன; இவ்வளவு மலை, இவ்வளவு சமுத்திரம் என்பவை எல்லாம் தெரிகின்றன. பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி முதலியவைகளைப் படிக்கிறோம். அவற்றிலிருந்து பல இயற்கைச் சக்திகள், அவற்றின் தன்மை முதலியவற்றைத் தெரிந்துகொள்கிறோம், ஒவ்வொன்றினால் ஒவ்வொன்று தெரிகிறது. ஒரே, 'எனர்ஜி' பல பொருள் ஆகிறது; முடிவில் ஒன்றாகிறது என்பதைப் புரிந்து கொள்கிறோம்; அந்தப் பொருள்தான் சத்தியம்; அதுதான் ஆண்டவன்; அதுதான் பரப்பிரம்மம்; அதுதான் பரமாத்மா; அதைத்தான், 'என் அறிவான தெய்வமே' என்றார் தாயுமானவர். பார்க்கும்படியான பொருளைப்பற்றித் தெரிந்து கொள்வதன் முடிவு, பார்க்கப்படாத ஒன்றைப்பற்றி உணர்ந்து கொள்வதுதான். முடிவு, பார்க்கப்படாத ஒன்றைப்பற்றி உணர்ந்துகொள்வதுதான். இதற்காகவே அநேக சாஸ்திரங்கள் இருக்கின்றன. சாஸ்திரங்கள் பல: அவற்றால் உணர்ந்து கொள்ளும் ஒன்று: பார்க்கப்படாத மெய்யான பொருள். இது தான் அறிவான பொருள்; மெய்யான பொருள்; அந்த ஒரு பொருள்தான் எல்லாமாய் அல்லதுமாய் இருக்கிறது. இப்படி அநுபூதிமான்கள் தம்மை மறந்த மெய்யான ஆனந்தத்திலே சொல்கிறார்கள்.

ராஜ்யம் என்று இருக்கும்போது அதற்கு ராஜாங்கம் ஒன்று ஏற்படுகிறது. அப்படி உலகம் என்ற ஒன்று தோன்றுகிற போது அதற்கு ஆண்டவன் என்று அந்த மெய்யான பொருள் பெயர் பெறுகிறது. இந்த உலகம் அவனிடத்தில் கரைந்து, ஒரே பொருள்தான் இருக்கிறது என்று தெரிந்த பிறகு அதற்கு ஆண்டவன் என்று பெயர் இல்லை.

'அறிவான தெய்வமே' என்று தாயுமானவரைப் போலத் தான் அநுபூதிமான்கள் சொல்கிறார்கள். ஆரம்பத்தில் தங்கள் தங்கள் உபாசனா மூர்த்தியைப் பற்றிச் சொன்னாலும் முடிவில், 'எல்லாமாய் அல்லதுமாய்' என்று அநுபவத்தின் முடிந்த முடிவைச் சொல்ல வரும்போது ஒன்றுபட்டு விடுகிறார்கள்.

கல்வியினால் உண்மையை அறிகிறோம். நாட்டில் அநேக உண்மைகள் உண்டு, சரித்திரம் ஓர் உண்மை. பூகோள சாஸ்திரம் ஓர் உண்மை. கணக்கு ஓர் உண்மை. மற்றவைகளைக் காட்டிலும் கணக்குக்கு உண்மை ஸ்வபாவம் அதிகம். மற்ற எல்லாவற்றிலும் கொஞ்சம் கற்பனை இருக்கும். பூகோள

சாஸ்திரத்தில் ஆசியா, ஆப்பிரிக்கா. சென்னை, கல்கத்தா என்றெல்லாம் பெயர் வருகின்றன. அவை எல்லாம் நாம் வைத்தவையே. நம் கற்பனை. மேட்டுக்கு ஒரு பெயர், பள்ளத்திற்கு ஒரு பெயர், இப்படிக் கற்பனை.

இந்தக் கற்பனை, பொய். எல்லாவற்றையும் விலக்கிக் கொண்டே வந்து கடைசி உண்மை எதுவோ அதைத் தெரிந்து கொண்டால், அந்த முடிவான உண்மை ஆண்டவன் ஒருவன் தான் என்று அறியலாம். அவனை நினைந்து உருகுவதுதான் கல்வியின் பயன்.

கல்வியின் முதல் பிரயோஜனம், முதல் குணமான விநயம் ஏற்படவேண்டும். விநயம் என்றால் அடக்கம். அடக்கம் இல்லாத படிப்புப் படிப்பு ஆகாது. தன்னைத்தானே அடக்கிக்கொள்ளும் படியான நல்ல குணம் முதலில் வரவேண்டும். ஆனால், 'இப்பொழுது எந்த நாட்டில் அதிகம் பேர் படித்திருக்கிறார்கள்? அந்த நாட்டு மக்களிடையே நல்ல குணங்கள் அதிகமாக இருக்கின்றனவா? படித்தவர் எந்த நாட்டில் குறைவு? படிக்காதவர்கள் அதிகம் உள்ள நாட்டில் நல்ல குணம் குறைவாகவும் கெட்ட குணங்கள் அதிகமாகவும் இருக்கின்றனவா?' என்று கவனித்துப் பார்த்தால் படிப்பு இல்லாத இடங்களில், மலைச்சாதி மக்களிடையே, நாகரிகம் இல்லாத ஜனங்களிடத்தில், கெட்ட குணங்கள் அதிகம் இருப்பதாகக் காணவில்லை, அங்கே மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டு, ஹைகோர்ட்டு முதலியவை இல்லை; குற்றங்கள் இல்லை, நிறைய ஹைஸ்கூல், காலேஜ், யுனிவர்ஸிடி முதலியன எல்லாம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு போகிற இடங்களில்தான் அதிகக் கோர்ட்டு வழக்குகள், கிரிமினல் குற்றங்கள், ஏமாற்று வித்தை, ஜேப்படித் திருட்டு முதலியவை அதிகமாகிக் கொண்டிருக்கின்றன. ஜனங்களிடத்தில் கெட்ட குணங்கள் அதிகமாகிக்கொண்டிருக்கின்றன.

இது என்ன? வேடிக்கையாக இருக்கிறதல்லவா? படித்ததன் பிரயோஜனம் நல்ல குணம்; அடக்கம். ஆனால் இப்போது நாட்டில் முன்னைவிட நிறையப் படிப்பு இருக்கிறது; ஹைஸ்கூல்களில் இடம் இல்லாமல், 'ஷிப்டு' வைத்து மூன்று மணிக்கு ஒரு வகுப்பு நடத்துகிறார்கள். இவ்வளவு இருந்தும் படிப்பின் பிரயோஜனமான விநயம் ஏற்படவில்லை. அதற்கு நேர்விரோதமான குணம் அல்லவா வளர்கிறது? படிக்கிற பையன்கள் இருக்கிற இடத்திற்குத்தான் போலீஸ், மிலிடரி எல்லாம் அடிக்கடி வரவேண்டியிருக்கிறது. 'இப்படி அடக்கம் என்பது இல்லாமல் அதற்கு நேர்மாறான குணம் வளரக் காரணம் என்ன?' என்று நமக்குத் தோன்றுகிறது.

நம் நாட்டுப் பெண்களின் இயற்கையான குணம் அடக்கம். படிக்கிற பெண்களுக்கு ஸ்வபாவமான அடக்க குணத்தோடு, கல்வியின் பிரயோஜனமாகப் பின்னும் அதிக அடக்கம் வளர வேண்டும்; ஆனால் யுனிவர்ஸிடியில் படிக்கும் பெண்கள் பிரின்ஸி பாலை அவமானப்படுத்தக் கொடும்பாவி கட்டி இழுத்தார் களாமே? ஸ்வபாவமாக நல்லவர்களான பெண்களின் குணத்தை யும் அல்லவா இந்தக் கல்வி போக்கிவிட்டது.

'அப்படியானால் இந்தப் படிப்பு வேண்டுமா வேண்டாமா? குணத்தைக் கொடுக்கும்படியான படிப்பு, குணத்தைக் கெடுக்கும் படியாக இருக்கிறதே! ஏன் அப்படி இருக்கிறது? பழைய காலத் துக் கல்வி வேறு, இந்தக் காலத்துக் கல்வி வேறா? இல்லை யென்றால் கல்வியின் ஸ்வபாவ குணமே அடக்கம் இல்லாத தன்மையைத்தான் கொடுக்குமா? அப்படியானால் கல்வியே வேண்டாமே?' என்று தோன்றும்.

'இளமையில் கல்' என்று ஒளவை சொல்கிறாள். ஒளவை வாசகத்தில் பொய்யே இருக்காது. ஏதாவது ஒரு விஷயம், 'பொய் இல்லை, உண்மைதான்' என்பதற்கு, 'இது வேதவாக்கு' என்பார்கள். வேதவாக்கு என்றால் சத்திய வாக்கு என்பது பொருள். அதற்கு அடுத்தபடி, 'ஒளவை வாக்கு' என்று சொல்வது வழக்கம்; ஒளவை வாக்கு என்றால் சத்தியம். அவள் இளமையில் கல் என்கிறாள், 'பால்ய வயசில் கல், கற்றுக்கொள்; படி' என்கிறாள்,

கலாசாலை, கல்விச்சாலை எல்லாவற்றுக்கும் மூலச் சொல் 'கல்'.

பாணினி என்பவர்தாம் முதல் முதலில் இலக்கணம் வகுத்தார்.

இலக்கணம் என்பதற்குச் சம்ஸ்கிருதத்தில் வ்யாகரணம் என்று பெயர். அதில், 'கல்' என்ற வினைச்சொற் பகுதியைப் பற்றிச் சொல்லும்போது, 'கல்வி,காமதேனு' என்று சொல்லப் படுகிறது. ஆகையால் கல்வி நமக்கு மிகவும் அவசியம் என்று தெரிகிறது.

ஒளவை வேறோர் இடத்தில்,

'கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான்; குறிப்பறிய
மாட்டா தவன்நன் மரம்,

என்று சொல்லுகிறாள்.

## विद्याविहीनः पशुः

வித்யாவிஹீநः பஶு,

வித்தை இல்லாதவன் பசுவுக்குச் சமானம்; என்று வைதிருக்கிறார், பர்த்ருஹரி.

ஒரு பக்கம் 'படிக்கவேணும், படிக்கவேணும்' என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்; ஆனால் இந்தக் காலத்தில் படிப்பவர்களிடம் நல்ல குணங்கள் இல்லை; உண்மையும் இல்லை. படிக்காதவர்களைவிடப் படித்தவன்தான் கஷ்டப்படுகிறான்; அநாவசியமான விவகாரங்களில் தலையிட்டுக்கொண்டு தானும் கஷ்டப்படுகிறான்; பிறருக்கும் கஷ்டத்தை உண்டுபண்ணுக்கிறான்.

கல்வியின் பயன் மெய்யான பொருளாகிய ஆண்டவனைத் தெரிந்துகொள்வதுதான். ஆனால் இந்தக் காலத்தில் படிக்கிறவர்களுக்குத் தெய்வ பக்தியே இருப்பதில்லையே. ஆகவே, 'இந்தப் படிப்பு என்னவோ தெரியவில்லை; வேண்டவே வேண்டாம்' என்று சொல்லலாமா?

'வித்தியா விநயஸம்பந்நா' என்று ஒருவர் சொல்லியிருக்கிறார். வித்தை என்பது விநயத்தைச் சம்பாதிப்பதாக இருக்கவேண்டும். விநயம் என்பதற்குக் கபடம் என்று அர்த்தம் இல்லை; வணக்கம் என்றுதான் அர்த்தம்:

முன் காலத்தைவிட இந்தக் காலத்தில் ஸ்திரீ, புருஷர்கள் அதிகமாகப் படிக்கிறார்கள். ஆனால் கல்வியின் பயன் என்று சொல்லப்படுகிற குணங்களுக்கு நேர்விரோதமான குணங்களே அவர்களுக்கு வருகின்றன. இதற்குக் காரணம் என்ன என்பதை நாம் ஒவ்வொருவரும் கொஞ்சம் ஆலோசித்துப் பார்த்தால் அதுவே வாழ்நாளில் முழுக்கச் சகாயமாக இருக்கும்.

'படிப்பு என்றால் எப்படி இருக்க வேண்டும்? எப்படிப் படிக்க வேண்டும்? சிஷ்யர்கள் எப்படி இருக்கவேண்டும்? ஆசாரியர்கள் எப்படி இருக்கவேண்டும்? சாப்பிடுவது முதற்கொண்டு படுப்பது வரையில் நாம் ஒவ்வொரு காரியத்தையும் எப்படிச் செய்யவேண்டும்? எப்படிச் செய்தால் நம் ஆத்மா க்ஷேமத்தை அடையும்?' என்பவற்றை எல்லாம் விளக்கிச் சொல்வதற்கு ஒரு சாஸ்திரம் இருக்கிறது. அந்தத் தர்ம சாஸ்திரத்தில் எப்படிப் படிப்பது என்று சொல்லியிருக்கிறது.

முதலில் சொல்கிறபோது, 'இளமையிற் கல்' என்று ஔவை சொன்னாளே; அந்த இளமை என்பது பிரம்மசரிய ஆசிரமம்! விவாகம் ஆவதற்கு முந்தி, அவனுக்கு வினைத் தெரிந்த பிறகு இருக்கக்கூடிய காலம். அதற்குள் படிக்கவேண்டும்.

எங்கே போய்ப் படிக்கவேண்டும்? ஒரு குருவினிடத்தில் போய்ப் படிக்கவேண்டும். குருவுக்குத் தர்மம் சொல்கிறபோது,

'நீ சம்பளம் வாங்கிக்கொண்டு சொல்லக்கூடாது' என்று சாஸ்திரம் விதிக்கிறது. சிஷ்யனுக்கு, 'நீ குருவினிடத்தில் போய்ப் படிக்கவேண்டும்' என்று விதி, சம்பளம் வாங்காது போனால் அந்த வாத்தியார் எப்படிச் சாப்பிடுவார்?

குரு என்று சொல்வதற்கு ஏற்றவர் இப்போது எங்கே இருக்கிறார்? 'பள்ளிக்கூடத்திற்குப் போனால்தான் வாத்தியார் இருக்கிறார்' என்ற நிலைமையில் அந்தத் சாஸ்திரம் எல்லாம் இப்போது எப்படிச் சாத்தியமாகும் என்ற சந்தேகம் வரும்.

இப்போது சமீப காலம் வரைக்கும் பலர் சங்கீத சிட்சை கற்றுக்கொண்டிருக்கிறார்கள். பள்ளிக்கூடத்தில் போய் அவர்கள் படித்ததில்லை; ஒரு குருவினிடத்தில் போய் அவருக்குச் சுச்ரூஷை செய்து சங்கீதம் கற்றுக்கொண்டிருக்கிறார்கள். அது ஒரு பெரிய கலை. சங்கீதக் கலை என்பது கொஞ்சங்கூடக் கஷ்டம் இல்லாமல் மோட்சத்தையே வாங்கிக் கொடுக்கக் கூடியது.

वीणावादनतत्वज्ञः श्रुतिजातिविशारदः ।
तालज्ञश्चाप्रयत्नेन मोक्षमार्गं स गच्छति ॥

வீணாவாதநதத்வக்ஞ: ஶ்ருதிஜாதிவிஶாரத: |
தாலக்ஞஶ்சாப்ரயத்நேந மோக்ஷமார்க்கம் ஸ கச்சதி ||

வீணை வாத்தியம் ஒன்றை வைத்துக்கொண்டு ஸ்வரசுத்தியோடு கலந்து வாசித்து ஆனந்தமயமாக இருக்கக் கற்றுக்கொண்டுவிட்டால் யோகம் பண்ண வேண்டாம். தபஸ் பண்ண வேண்டாம். சுலபமாக மோட்சத்தையே அடைந்துவிடலாம். கொஞ்சங்கூடச் சிரமம் இல்லாத வழி அது.

அப்ரயத்நேந - முயற்சியே இல்லாது. தபஸ் பண்ணுவதாக இருந்தால் இந்திரிய நிக்ரஹம் பண்ணவேண்டும். அப்படிப்பட்ட கஷ்டம் இதில் இல்லை. ஸ்வரசுத்தியோடு சுத்தமான சங்கீதத்தைக் கற்றுக்கொண்டு அதையே ஈசுவரார்ப்பணம் பண்ணிவிட்டால் மோட்சத்தை அடைந்துவிடலாம்.

இப்படித் தர்ம சாஸ்திரம் சொல்கிறது. 28 தர்ம சாஸ்திரங்கள் இருப்பதாகத் தெரிகிறது. அவைகளில் பிரதானமானது, 'மனு ஸ்ம்ருதி' என்பது. யாக்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதி இருக்கிறது. அந்த ஸ்ம்ருதியில் இந்தச் சுலோகம் வந்திருக்கிறது.

மோட்சம் வரைக்கும் கொண்டுபோய் விடுகிறது சங்கீத வித்தை. பள்ளிக்கூடத்திற்குப் போய் இதுவரையில் யாரும் வீணை கற்றுக்கொண்டதில்லை; இப்போது அதற்கும் பள்ளிக்கூடம் வந்துவிட்டது.

முன்பு வேத சாஸ்திரம் படிப்பதற்குப் பாடசாலைகள் இல்லை. குருவினிடத்தில் சென்றுதான் கற்றுக்கொண்டார்கள். நகரத்தார்கள் ஈசுவரனிடத்தில் உள்ள பக்தி காரணமாக ஆலயங்களைக் கட்டி, ஆலயங்களில் பூஜை ஒழுங்காக நடை பெறவேண்டும் என்பதற்காகப் பாடசாலைகளைக் கட்டித் திரவியங்களை எழுதி வைத்தார்கள். வேதத்திற்கும் பாடசாலை வந்துவிட்டது. இந்தக் காலத்தில் இங்லீஷ்ப் படிக்கிறவர் களிடத்தில்தான் அடக்கம் இல்லை, விநயம் இல்லை என்று சொல்ல முடியாது. வேத பாடசாலை என்றால் அங்கேயும் மணியகாரர், வாத்தியார்கள் இருக்கிறார்கள். சில பையன்கள் மணியகாரர் கட்சி; சிலர் வாத்தியார் கட்சி. அங்கும் சண்டை. அடக்கம், சிஷ்யர்களிடம் குறைந்துதான் போய்விட்டது.

காரணம் என்ன?

நம் சாஸ்திரப் பிரகாரம் கணக்கு வழக்கு இல்லாமல் வித்தைகள் இருக்கின்றன. தஞ்சாவூரில் சித்திரக் கலையும் சங்கீதக் கலையும் நடனக் கலையும் வளர்ந்து வந்தன. இவற்றை யெல்லாம் இன்று வரைக்கும், 'பாடசாலை' எதுவும் இன்றி ரட்சித்து வந்திருக்கிறோம். வைத்திய சாஸ்திரம், யோக சாஸ்திரம், ரஸ சாஸ்திரம் இன்னும் எத்தனையோ சாஸ்திரங் களை ரட்சித்து வந்திருக்கிறோம். இன்றுவரையில் பள்ளிக்கூடம் இல்லை; குருக்கள் இருந்திருக்கிறார்கள்; சிஷ்யர்கள் இருந் திருக்கிறார்கள். கல்வியின் பயனை அவர்கள் எல்லாரும் அடைந்திருக்கிறார்கள். இப்போது நிலைமை என்ன?

இப்போது எல்லாவற்றுக்கும் பள்ளிக்கூடம் என்று ஏற்பட்டுவிட்டது. பள்ளிக்கூடம் ஏற்பட்டாலும், 'படிக்கிற மாணவர்களுக்குச் சம்பளம் இல்லை. எந்த மாணவனிடமாவது அடக்கமின்மை, துர்க்குணம் இருந்தால் அவனை விலக்கி விடலாம்' என்று இருக்கிறதா? அநேகமாக அதுவும் இல்லை.

மாணவன் சம்பளம் கட்டுகிறான். வாத்தியார்கள் சம்பளம் வாங்கவேண்டி யிருக்கிறது. பையன் கொடுக்கிறான்; வாத்தியார் வாங்குகிறார். பையன் உட்கார்ந்து படிக்கிறான். வாத்தியார் நின்றுகொண்டு பாடம் சொல்லவேண்டி வந்து விட்டது. இதனாலே அடிப்படையில் முன்பு நம் மாணவர் களுக்கு இருந்த குரு பக்தி என்பதே அடியோடு போய் விட்டது. பையன் வாத்தியாரைப் பார்த்து, 'நான் பணம் கொடுக்கிறேன், சொல்லிக்கொடு. பணம் கொடுக்கிறேன். கேள்வித்தானேயே கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் அடிக்கிறேன்' என்று சொல்லக்கூடிய நிலைமை வந்துவிட்டது.

முன்பு இருந்த கல்விதான் இப்போதும் இருக்கிறது. கல்வியில் மாறுதல் இல்லை. ஆனால் முறை மாறிவிட்டது. மருந்து ஒன்றாகவே இருக்கலாம்; பத்தியம் மாறிவிட்டால் மருந்தே விஷமாகிவிடும் என்பதுபோல இருப்பது இது. கல்வி ஒன்றுதான்; முறை மாறிவிட்டது; அதனால் ஸ்வபாவ குணங் களுக்கு நேர் விபரீதமான குணங்களை உண்டாக்குகிறது. வித்தைக்குப் பதில் அவித்தை உண்டாகிறது.

பழைய காலத்தில் குருவினிடத்தில் சென்று வித்தை கற்றுக்கொள்கிற சிஷ்யனுக்கு விநேயன் என்று பெயர். அதற்கு விநயத்தை உண்டுபண்ணப்பட்டவன் என்று அர்த்தம், ஸ்டூடென்ட், மாணவன், பையன் என்பது எல்லாம் இந்தக் காலத்தில் பெயர். பழைய காலத்தில் அவனுக்கு விநேயன் என்று பெயர். விநயம்தான் அவன் குருவினிடத்தில் சென்று கல்வி கற்றுக்கொண்டதன் அடையாளம்; படித்ததன் பயன்.

நம் ஆதி ஆசாரியர் அவர்களின் முதல் சிஷ்யருக்குப் பத்மபாதாசாரியர் என்று பெயர். பத்மபாதாசாரியருக்கு இருந்த குருபக்திக்கு ஈடே இல்லை. ஒரு சமயம் கங்கை யின் அக்கரையில் ஆசாரியர் இருந்தார். இவர் இந்தக் கரையில் இருந்தார். ஆசாரியரவர்கள் ஸ்நானம் பண்ணி விட்டு, 'வஸ்திரம் கொண்டுவா' என்று சொன்னவுடன், குரு பக்தியினால் அவர் ஜலத்தில் இறங்கிப் பூமியில் நடந்துபோகிற மாதிரி நடக்க ஆரம்பித்தார். அவருடைய குரு பக்தியின் மகிமையால் அவர் கால் வைத்த ஒவ்வோர் அடியின் கீழும் தாமரைப் புஷ்பம் தோன்றி ஜலத்திற்குள் அவர் மூழ்கிப் போகாமல் அக்கரையில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டதாம்! அதனால்தான் இவருக்குப் பத்மபாதர் என்ற பெயர்கூட வந்தது. அத்தகைய குருபக்தி உடைய பத்மபாதர், ஆசாரியரவர் களுடைய பாஷ்யத்திற்கு உரை எழுதியிருக்கிறார்; பஞ்சபாதிகை என்று அதற்குப் பெயர். அதில் ஆசாரியரைப்பற்றியே அவர் மங்களச் சுலோகம் எழுதியிருக்கிறார். அந்தச் சுலோகத்தில், 'ஆசாரியரவர்களுடைய பாஷ்யம், ஒரு தாமரைப் பூவைப்போல் இருக்கிறது. அந்தத் தாமரைப்பூவிலே அநேக வண்டுகள் வந்து மொய்த்துக்கொண்டு அதன் அமிருத ரசத்தைப் பருகிக் கொண்டிருக்கின்றன; வண்டுகள் நாலு திக்கிலிருந்தும் வரு கின்றன' என்ற கருத்து அமைந்திருக்கிறது.

यद्वक्त्रमानससरः प्रतिलब्धजन्म-
भाष्यारविन्दमकरन्दरसं पिबन्ति ।
प्रत्याशमुन्मुखविनीतविनेयभृङ्गाः
तान् भाष्यवित्तकगुरून् प्रणमामि मूर्ध्ना ॥

யத்வக்த்ரமாநஸஸர: ப்ரதிலப்தஜந்ம
பாஷ்யாரவிந்தமகரந்தரஸம் பிபந்தி ।
ப்ரத்யாஶமுந்முகமுநீதவிநேயப்ருங்கா:
தாந் பாஷ்யவித்தககுரூந் ப்ரணமாமி மூர்த்நா ॥

ஆசாரியவர்களுடைய பாஷ்யம் இல்லாத தேசம் இல்லை. ஆகையால் எங்கெல்லாம் தர்ம சாஸ்திரம் சென்றிருக்கிறதோ அங்கெல்லாம் அவருடைய பாஷ்யம் சென்றிருக்கிறது. அத்தகைய அமிருதமயமான அரவிந்தத்திலே வண்டுகள் எங்கிருந்து வருகின்றன? ஐம்பத்தாறு தேசங்களிலிருந்தும் நாலு திக்கிலிருந்தும் வந்து மொய்த்துக்கொண்டு அமிருதத்தைக் குடிக்கின்றன.

அந்தத் தாமரைப்பூ எந்த இடத்தில் மலர்கிறது? பொதுவாக உத்தமமான தாமரை, உயர்ந்த மலைமேல் உள்ள ஒரு குளத்தில், அதாவது ஹிமய பர்வதத்தின்மேல் உள்ள மானஸ ஸரஸ் என்ற தடாகத்தில் புஷ்பிக்கிறது என்று சொல்வது சம்பிரதாயம். ஆசாரியருடைய பாஷ்யம் எங்கிருந்து வந்தது? அவருடைய முகத்திலிருந்து வந்தது. அந்தப் பாஷ்யம் தாமரை என்றால், அவர் முகம், மானஸ ஸரஸ்.

அந்தச் சுத்தமான உயர்ந்த இடத்திலுள்ள மானஸ ஸரஸில் உள்ள தாமரைப் புஷ்பத்தின் மதுவைப் பருக நாலு திக்குகளிலிருந்தும் வண்டுகள் வந்து மொய்த்துக்கொண் டிருக்கின்றன.

அப்படியே ரஸத்தைப் பருகுகின்றன.

## विनेयभृङ्गाः

### விநேயப்ருங்கா:

இந்த விநேய என்ற சொல்லுக்குச் சிஷ்யன் என்பது அர்த்தம்; அந்தச் சுலோகத்தில் விநேயன் என்று சொல்லியிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டத்தான் இதைச் சொன்னேன். சிஷ்யன் என்றால் விநயத்தை உண்டுபண்ணுகிறவன்.

நல்ல குணங்கள் நம் குழந்தைக்கு வரவேண்டுமென்றால் படிக்கும் காலத்தில் அவன் சம்பளம் கொடுத்துப் படிக்கக் கூடாது. வாத்தியார் சம்பளம் வாங்கக்கூடாது. பையன் கொடுப்பவனாகவும் வாத்தியார் வாங்குபவராகவும் இருக்கக் கூடாது. இப்படி இப்போது இல்லாததனால்தான் உயர்ந்த கல்வியின் பயன் நேர்மாறாகப் போய்விடுகிறது.

புத்த மதம் நம் தேசத்தில்தான் முதலில் உண்டாயிற்று என்றாலும் இப்போது சைனா, ஜப்பான், பர்மா, இலங்கை, இந்தோனேஷியா முதலிய நாடுகளில் அதிகம் இருக்கிறது

அங்கங்கே ஜைன மதமும் இருக்கிறது. ராஜா முதற்கொண்டு, சாதாரண ஏழை வரையில் அந்த மதத்தில் ஒரு காலம் சந்நியாசி ஆகிவிட வேண்டும். அப்போது பிச்சை எடுத்துத் தான் சாப்பிட வேண்டும். மறுபடியும் கிருகஸ்தாசிரமத் திற்குப் போகலாம். கொஞ்ச நாளாவது சந்நியாசியாகத்தான் இருக்க வேண்டும் என்று இருக்கிறது. நமக்கு, அந்தமாதிரி யாகச் சந்நியாசியாகப் போக வேண்டும் என்பதில்லை. ஆனால் பிரம்மசாரி, பிச்சை வாங்க வேண்டும். பிரம்மசாரியாக இருந்து கொண்டு குருவினிடத்தில் வித்தை கற்றுவரும் காலம் முழுவதும் அவன் பிச்சை வாங்கி யாகவேண்டும். வீடுவீடாகப் போய் அவன் பிச்சை வாங்கிக்கொண்டு படிப்பதனாலேயே அவனிடத் தில் உள்ள அகம்பாவம் முதலில் போய்விடுகிறது. தானே விநயம் ஏற்பட்டுவிடுகிறது. இந்த மாதிரியாகப் பிச்சை வாங்கும்போது, 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று கேட்கவேண்டும். படிக்கும்போது, குருவினிடத்தில் அடங்கி அவர் இருக்கும் இடம் தேடிப் போய்ப் படிக்கவேண்டும். ஒவ்வொரு நாளும் பிட்சை வாங்கிக்கொண்டு ஆசாரியனிடத்தில் கொடுத்துவிட்டு அவர் கொடுப்பதை வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டு படிக்க வேண்டும் என்ற முறை இருந்திருக்கிறது.

கெட்ட குணங்களோ கெட்ட நடத்தையோ எந்த ஒரு சிஷ்யனிடத்தில் இருந்தாலும், 'நீ வேண்டாம்' என்று அந்தச் சிஷ்யனைக் குரு தள்ளிவிடுவார். அல்லது, 'இன்றைக்கு ஒரு வேளை பட்டினி இரு; ஒரு வேளை தபஸ் பண்ணு' என்று ஏதாவது சிட்சை விதிப்பார்.

பையனிடத்திலிருந்து வாத்தியார் சம்பளம் வாங்குவது என்று ஆகிவிட்டால் இப்படிச் சொல்ல முடியுமா? எவ்வளவு துர்க்குணம் பையனிடத்தில் இருந்தாலும் அவ்வளவு துர்க்குணத் தையும் பொறுத்துக்கொண்டு அவன் சம்பளம் கொடுக்கிறானே என்பதற்காகவாவது ஏதோ வித்தை என்று சொல்லிக்கொடுக்க வேண்டி வந்துவிட்டது.

படிப்பு என்பதே ஜீவனத்திற்காக என்று இந்தக் காலத்தில் ஆகிவிட்டது. 'ஒரு வழியும் இல்லை என்றால் பாடசாலையில் கொண்டுபோய் விடு' என்ற வழக்கம் முன்பு இருந்தது. இப்போது அதுவும் இல்லை. படிப்பு வரவில்லை என்றால் சினிமாக் கொட்டகை, ஹோட்டல் இப்படிப் பல வழிகள் இந்தக் காலத்தில் அதிகமாகி விட்டன.

உண்மை வித்தை வேண்டுமென்றால் குருவை நாடிச் சிஷ்யன் போகவேண்டும்; குரு, பணம் வாங்கிக்கொண்டு சொல்லக்கூடாது. குருவினிடத்தில் சகல வித்தைகளும் கற்றுக்

கொண்ட பிறகு வெளியில் யாசகம் வாங்கியாவது குருவுக்கு நிறையக் குருதக்ஷிணை கொடுக்கலாம். ஒவ்வொரு நாளும் பிக்ஷை வாங்கும்போது குருவினுடைய குடும்பத்திற்குப் போதும் படியான அவ்வளவு அன்னம் வாங்கிக்கொண்டு வரலாம். இந்த முறையில் குருவினுடைய குடும்பத்தின் காலக்ஷேபத்திற்கும் குறைவில்லை. சிஷ்யனுக்கு அடக்கம் முதலிய நற்குணங்கள் ஏற்படுவதற்கும் இடமுண்டு. இப்படிக் கல்வி கற்றால் நல்ல குணங்கள் உண்டாகும். கல்வியின் பிரயோஜனமாகச் சத்திய மான பொருளை அவன் உணர்ந்துகொள்வான். கல்வியே வேண்டுமா வேண்டாமா என்னும் சந்தேகம் உண்டாகவே உண்டாகாது. நம் குழந்தைகள் எல்லாம் மெல்ல இந்த முறையையே கைக்கொள்ள வேண்டும். பள்ளிக்கூட முறையைத் தவிர்த்து உண்மையான குருகுல முறையைக் கடைப்பிடித்து, குருவின் அநுக்கிரகத்துடன் வித்தை கற்றுக்கொண்டால் எல்லாக் குறைகளும் நீங்கும். வாழ்க்கையும் எளிய முறையி லேயோ உயர்ந்த முறையிலேயோ சுதந்திரமாக நடக்கும். கல்வி, உண்மையான கல்வியாகும். லௌகிய வித்தைகளையுங் கூட ஒய்வு பெற்ற (Retired) வாத்தியார்கள், ப்ரொபசர்கள் முதலியவர்களிடம் குருபக்தியுடன் தெரிந்துகொண்டு ப்ரை வேட்டாகப் போகக்கூடிய பரீக்ஷைகளுக்கெல்லாம் ஆஜராகி வாழ்க்கையைச் சுதந்தரமாக நடத்தலாம்.

## 8

# உண்மைச் சின்னம்

நாம் பண்ணுகிற தப்பு நமக்குத் தெரியும், எவ்வளவு என்று. கெட்ட குணம் உள்ளவன் என்று நம்மைப் பல பேர் வைதுகொண்டே இருப்பார்கள். அப்போது யார் வைகிறார்களோ அவர்களிடம் நமக்குக் கோபம் வரும். ஆனால் உள்ளுக்குள் எவ்வளவு அக்கிரமம் பண்ணுகிறோம் என்பது ஒருவருக்காவது தெரியாது! தெரிந்தால் இன்னும் ஜாஸ்தியாக வைய வேண்டி வரும்.

உண்மையாகப் பார்த்தால் நாம் பண்ணாத தப்பைத்தான் நாம் பண்ணியிருப்பதாக எண்ணிக்கொண்டு வைதுகொண்டிருக்கிறார்கள்; நாம் பண்ணுகிற தப்பு அவர்களுக்குத் தெரியாதென்பது நமக்குத் தெரியும். ஆகையால் நாமேதான் நம்மை வைதுகொண்டிருக்கவேண்டும். கொஞ்சம் கொஞ்சம் இருக்கும் நம்முடைய குணத்தை நினைத்துப் பார்ப்பதில் பிரயோஜனம் இல்லை. நம்முடைய தப்பை நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். உண்மையிலேயே நம்முடைய கெட்ட குணம் எவ்வளவு, நல்ல குணம் எவ்வளவு என்று பிரித்துப் பார்த்தால் குணத்தைவிடக் கெட்டதுதான் மலையாக இருக்கும். எந்தப் பேச்சிலும் நம்முடைய நல்ல குணத்தை மாத்திரம் எப்படியாவது சொல்லாததுபோலப் பிறருக்குத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறோம். ஆனால் நம்மிடம் இருக்கும் துர்க்குணம் பிறருக்குத் தெரியாமல் இருக்கும்படியாக மூடிக்கொள்ள முயற்சி பண்ணுகிறோம்.

பிறருக்குத் தெரியாவிட்டாலும்கூட, நம்மிடம் உள்ள கெட்ட குணங்கள் என்ன என்பது நம் ஒவ்வொருவருக்கும் தெரியும்; சில சமயங்களில் நல்ல எண்ணம் உண்டாகும்போது, 'நாம் இப்படிக் கெட்ட காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறோம்' என்ற நினைவு வரும்போது, மிகவும் துக்கம் வருகிறது. 'இவ்வளவு கெட்ட காரியங்களைச் செய்யும்படியான ஜன்மம் நமக்கு எதற்கு?' என்று கஷ்டப்படுவோம். தப்பை நினைத்துக்கொண்டு அழுவதில் பிரயோஜனம் இல்லை. 'இவ்வளவு தப்புகள் பண்ணியிருக்கிறேன்; இனிமேல் இந்த மாதிரியான தப்பான காரியத்தைச் செய்யாமல் இருக்கும்படியான உறுதியை,

சித்த சுத்தியை எனக்குக் கொடுக்கமாட்டாயா?' என்று ஸ்வாமியைப் பிரார்த்தித்துக்கொள்ள வேண்டியதுதான் நம் கடமை. ஒவ்வொரு நாளும் ஒரு வேளையாவது, படுத்துக் கொள்ளப் போகும்போது நம் காரியங்களை எல்லாம் அலசிப் பார்ப்பது - டைரி எழுதுவது, என்ன என்ன தப்புப் பண்ணியிருக்கிறோம் என்று அதில் குறித்துக்கொள்வது-'அந்தத் தப்பை நாளை முதற்கொண்டு பண்ணாமல் இருக்கவேண்டும்; பண்ணாமல் இருக்கும் தைரியத்தையும் புத்தியையும் நமக்கு ஸ்வாமி தரவேண்டும்' என்று பிரார்த்தனை செய்துகொள்வது; இதுவே ஒரு புண்ணியம். ஊருக்கு எல்லாம் இதைச் சொல்ல வேண்டாம். நம் தப்புக்களை நாமே நினைத்துப் பார்க்கும்படியான ஸ்வபாவத்தை ஒரு சக்தி, கொடுத்திருக்கிறதே, அந்தப் பராசக்தியிடத்தில், 'அம்மா, நான் இனிமேல் இந்தத் தப்புக் களைப் பண்ணாமல் இருக்கத் தைரிய புத்தியைக் கொடு' என்று பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும். சறுக்கிச் சறுக்கி விழு வோம். இது சுபாவம். 'இப்படிச் சறுக்கி விழாமல் இருக்க அநுக்கிரகம் பண்ணவேணும்' என்று ஒவ்வொரு நாளும் அம்பாளிடத்தில் பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும்.

மிகவும் கெட்ட நடத்தையுள்ள ஸ்திரீயாக இருந்தால் பழைய நாளில் சறுக்கி என்று சொல்வார்கள். சம்ஸ்கிருதத்தில் பதிதன் என்பது சொல்வார்கள். பதிதன் என்றால் சறுக்கி விழுந்தவன் என்று பொருள்.

வழுக்குமரம் ஏறுகிறார்களே அதைச் சறுக்கு மரம் என்று சொல்வது உண்டு. சறுக்குவது அதற்கு ஸ்வாபாவம்; சறுக்கிச் சறுக்கி விழுவதைச் சமாளித்துக்கொண்டு பிரயத்தனம் பண்ணி மேலே ஏறினால் வெற்றி உண்டாகும். அப்படியே வாழ்வில் சறுக்குவது ஸ்வபாவம். ஆனால் மேலே ஏறுவதற்கு ஒவ்வொரு வரும் பிரயத்தனம் பண்ணவேண்டும். நூறு பேர் பிரயத்தனம் பண்ணி ஒருவன் ஏறிவிட்டாலும் அது அந்த நூறு பேருக்கும் கௌரவம்; ஊருக்கே ஒரு கௌரவம்; நாட்டுக்கே கௌரவம்.

நாம் பண்ணின பாவத்திற்கு அழுதுகொண்டிருக்க வேண்டாம். அந்த மாதிரி புத்தியை இனிக் கொடுக்கவேண்டாம் என்று பிரார்த்தனை பண்ணவேண்டும். அது நம் கடமை. நாம் பண்ணுகிற தப்புக்கு அம்பாள் சாட்சி, வேறு ஒருத்தருக் குத் தெரியவேண்டும் என்பதுகூட இல்லை.

இப்படி ஸ்வாமியைப் பூஜிப்பது, தியானம், பண்ணு வது என்று இருக்கிறவர்கள்கூடச் சில சமயங்களில், 'ஐயோ, ஸ்வாமியைப் பிரார்த்தனை பண்ணுவதன் பயன் எனக் குக் கஷ்டந்தானா? அவர் என்னைக் கவனிக்கவில்லையே' என்று துக்கப்பட்டு, 'ஸ்வாமிக்குக் கண் இல்லையே' என்று சொல்

கிறார்கள்; இவர்கள் தாங்கள் செய்த நல்ல காரியங்களை, தங்களிடம் உள்ள நல்ல குணங்களை நினைத்துப் பார்ப்பதனால் இப்படி ஸ்வாமியினிடமே கோபம் அடைந்துவிடுகிறார்கள்.

இப்படிக் கோபம் வரக்கூடாதென்றால் என்ன பண்ண வேண்டும்? நாம் எப்படிப் பார்த்தோமோ அந்த முறையை மாற்றிப் பார்க்க வேண்டும். நாம் என்ன கெட்ட காரியங்கள் பண்ணுகிறோம் என்று நமக்குத் தெரியும். இவ்வளவு கெட்ட காரியங்கள், பாவங்கள் பண்ணியிருக்கிற நமக்கு ஒரு வேளைச் சாப்பாடு கிடைக்க நியாயம் உண்டா? ஒரு க்ஷணம் சௌகரிய மாக இருப்பது நியாயமா? நமக்கு உண்ண உணவு கொடுத்து, உடை கொடுத்து, நிழல் கொடுத்துச் சௌகரியமாக இருக்கும்படி ஸ்வாமி பண்ணியிருக்கிறாரே, அவர் கருணை அல்லவா பெரிது! 'ஏன் இதைச் செய்யவில்லை. அதைச் செய்யவில்லை?' என்று நாம் ஈசுவரனிடத்தில் கோபித்துக்கொள்கிறோமே: இது நியாயமா? எத்தனை பாவங்களைப் பண்ணினாலும் அவன் நம்மை ரட்சிக்கிறானே, அது அல்லவா பெரிது?' என்று நினைத்துச் சந்தோஷப்பட வேண்டும்.

குழந்தை மண்ணைத் தின்கிறது. அம்மா அதன் கைகளைச் சேர்த்துத் துணியைப் போட்டுக் கட்டுகிறாள். அது மண்ணைத் தின்னாமல் இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் கட்டிப்போடு கிறாள். குழந்தைக்கோ கோபம் வருகிறத; ஓடுகிறது; குதிக் கிறது; கத்துகிறது. தாய் இத்தனையையும் பார்த்துச் சிரிக்கிறாளே! 'இவளுக்குக் கொஞ்சங்கூட இரக்கம் என்பதே இல்லையா? இந்தத் தாய்தான் நமக்குப் பரமதுவேஷி!' என்று அது கத்தலாம். ஆனால் காரணம் இல்லாமலா அம்மா கட்டிப் போட்டிருக்கிறாள்? 'குழந்தைக்கு நன்மை வரக்கூடாது. துன்பந்தான் வரவேண்டும்' என்று கட்டிப் போட்டிருக்கிறாள்?

அம்பாளுடைய கருணை நமக்குத் தெரியாது. நமக்கு நல்லது வந்தாலும் கெட்டது வந்தாலும் இரண்டுக்கும் மூலம் அவளுடைய அருள்தான். நல்லது: காரணம் இல்லாத அருள். கஷ்டம்: ஒரு காரணத்துக்காக ஏற்படுகிற அருள். நல்லது வந்தாலும் கெட்டது வந்தாலும் அவளுடைய அருள் என்று கொள்ள வேண்டும்; நமக்குத் தெரியாது, எதற்காக அதைக் கொடுக்கிறாள் என்று.

பழைய நாளில் சாமானியமாக ஓர் உதாரணம் சொல்வது உண்டு. கழுதைமேல் உப்புப்பொதி போட்டுக்கொண்டு ஒருவன் சந்தைக்குப் போனான், உப்பு மூட்டையை மாட்டு மேலே கழுதை மேலே போட்டுக்கொண்டு போவது அந்தக் காலப் பழக்கம். அப்படிக் கழுதை மேலே உப்பு மூட்டையைப்

போட்டுக்கொண்டு ஒருவன் போகிறான். கிளம்புகிறபோது வானம் நன்றாக இருந்தது. மப்பு மந்தாரம் ஒன்றும் இல்லை. ஆனால் திடீரென்று நடுவழியில் ஒரே இருட்டாக இருட்டிக் கொண்டு மழை கொட்ட ஆரம்பித்துவிட்டது, உப்பு மூட்டை கரைந்து போயிற்று. 'இந்தத் தெய்வம் இப்படிப் பண்ணுமா? அதை நினைக்கிறதே தப்பு' என்று ஸ்வாமியை வைதுகொண்டு சந்தைக்குப் போகாமல் திரும்பிவிட்டான். திரும்பிக் காட்டு வழியாக வீட்டுக்கு வரும்போது, 'இவன் சந்தையிலிருந்து நிறையப் பணம் கொண்டு வருவான். அடித்து எடுத்துக் கொண்டு போகலாம்' என்று திருடர்கள் தங்கள் துப்பாக்கியை வைத்துக்கொண் டிருந்தார்கள். அந்தக் காலத்திலே தோட்டாத் துப்பாக்கி இல்லை; மருந்துத் துப்பாக்கிதான். மருந்து கெட்டித்துத் துப்பாக்கி வெடித்து எல்லாரையும் பயப்படச் செய்து திக்குக்கு ஒருத்தராக ஓடும்போது அடித்துப் பிடித்துக் கொண்டு பணத்தை எடுத்துப் போய்விடுவார்கள். அன்றைக் கும் அந்தத் திருடர்கள் துப்பாக்கியால் சுட்டார்கள். எல்லாம் புஸ் புஸ் என்று போய்விட்டது. மருந்து மழையிலே நனைந்து போனதால் வெடிக்கவில்லை. உடனே துப்பாக்கியைப் போட்டு விட்டு ஓட ஆரம்பித்தார்கள். அப்போதுதான் அந்த வியாபாரி, 'ஸ்வாமி, இன்றைக்கு மழை வந்ததனால் நான் பிழைத்தேன்! அதனால்தான் என் பிராணன் தப்பியது, உன் கருணையை நான் என்னவென்று சொல்வது!' என்று ஈசுவரனைப் பிரார்த்தித்துக் கொண்டானாம்.

ஈசுவரன் நமக்கு நல்லது கொடுப்பது அவனுடைய ஸ்வபாவமான கருணை. துன்பத்தைக் கொடுப்பது அதைவிடக் கருணை. ஒரு காரணத்திற்காக நமக்குக் கொடுக்கிற அருள் அது, நாம் கொஞ்சந்தான் பார்க்கிறோம். அதற்கு முந்தித் தெரியாது; பிந்தித் தெரியாது. முந்தியும் பிந்தியும் அப்போதைக்கு நடக்கிற விஷயங்களையும் தெரிந்துகொண்டு திரிகாலங்களையும் பார்த்தால் நமக்குக் கெடுதலே ஆண்டவன் செய்வதில்லை என்பது தெரியும். எல்லாக் காலத்திலும் நமக்குப் பந்துவாக சகாயமாக இருப் பவன் அம்மையப்பன் ஒருவன்தான். அவனைக் காட்டிலும் உலகில் நமக்கு வேறு பந்து இல்லை.

'உற்றார் யாருளரோ உயிர்கொண்டு போம்பொழுது
குற்றாலத் துறைகூத்த னல்லால் நமக்கு
உற்றார் யார்உளரோ?'

என்று அப்பர் பாடுகிறார். அவனைக் காட்டிலும் நமக்கு உற்றார், உறவினர் வேறு யார் இருக்கிறார்கள்? மற்றப் பேர்களெல்லாம் நமக்கு ஒரு சமயம் சகாயம் செய்வதுபோல இருந்து மற்றச்

சமயங்களில் துன்பத்தைத்தான் கொடுப்பார்கள். அவன் ஒருத்தன்தான் எப்போதும் நமக்குச் சகாயமாக இருக்கிறான். அவன் ஒருவனை நாம் எப்போதும் நினைத்து உருக ஆரம்பித்தால் தான் மனசு, உண்மையான ஆனந்தத்தை அடையும். எல்லை யற்ற ஆனந்தத்தை எப்போதும் அநுபவிக்க விரும்பினால் அந்த ஒரு காரியத்தைத்தான் எப்போதும் செய்யவேண்டும். வேறு காரியங்கள் எல்லாம் வீண் காரியங்கள்; துக்கத்திற்குத்தான் அவை காரணமாக இருக்கும்.

மாணிக்கவாசகர் ஒரு நல்ல சிவபக்தர். எப்போது பார்த் தாலும் அந்த மெய்யான ஒரு பொருளை மாத்திரம் நினைத்து நினைத்து மெய் விதிர்த்துக் கண்களில் தாரை தாரையாக ஜலம் வழியத் திருவாசகத்தைப் பாடிக்கொண் டிருப்பார். அப்பர், சுந்தரர் முதலியவர்கள் எல்லாம் எத்தனையோ சிவாலயங்களைக் கண்டு தரிசித்து வழிபட்டிருக்கிறார்கள். மாணிக்கவாசகரும் திருக்கழுக்குன்றம், திருவண்ணாமலை, சிதம்பரம், ஆவுடையார் கோயில், உத்தரகோச மங்கை போன்ற சிவ க்ஷேத்திரங்களுக்குச் சென்று ஈசுவரனைப் பாடிக்கொண் டிருந்தார். 'உன்னைப் பிடித்துக்கொண்டு விட்டேன். இனி நீ எங்கே திமிறிக்கொண்டு போக முடியும்? நான் விடுவேனா? உருகி நான் உன்னைப் பருகும் படியாகச் செய்தவன் நீ அல்லவா?' 'சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவதினியே?' என்று ஆனந்தமாக ஈசுவரனோடு, பரப்பிரம்ம ஸ்வரூபத்தோடு கலந்து ஒன்றாகிப் பாடிக்கொண் டிருந்தார்.

இலங்கையைச் சிங்களம் என்கிறோம். ஸிம்ஹளம் என்பது சம்ஸ்கிருதத்தில் பெயர். தமிழில் ஈழம் என்று பெயர்; ஈழ நாடு என்று பெயர். சம்ஸ்கிருதத்தில் உள்ள ஸ, ஜ, ஹ போன்ற எழுத்துக்கள் தமிழ் இலக்கணப்படி தமிழில் பேசாது

பூர்வாஷாடா நக்ஷத்திரம் (ஆஷாட மாசம் என்று சொல் கிறோமே)அது ஷா போய் பூராடம் என்று வந்துவிடும். சிரா வாணி என்பது ச்ரவண நக்ஷத்திரத்தின்மேல் ஏற்பட்டது. அது ச, ர குன்றி, ஆவணி என்று வந்துவிட்டது,

அப்படி ஸிம்ஹளம் என்பதில் ஸி, ஹ இரண்டும் போய், கடைசியில் ளம் அல்லது ஈழம் என்று வந்துவிட்டது, சிங்களம் என்னும் மற்றோர் உருவமும் உண்டு. அந்த நாட்டிலிருந்து வந்தவர்களுக்கு ஈழவர் என்று பெயர். அந்த நாட்டில் உள்ள வர்களுக்குச் சிங்களவர் என்று பெயர்.

அசோகன் காலத்தில் ராஜவம்சத்துக் குழந்தைகளையே அந்த நாட்டுக்கு அனுப்பி, பௌத்த மதத்தைப் பிரசாரம் செய்தான். அசோகன் காலத்துச் சக்கரந்தான் இப்போது கூட

நம் தேசக் கொடியில் இருக்கும்படியாக நேரு போன்றவர்கள் பண்ணியிருக்கிறார்கள். அசோகன் காலம் முதற்கொண்டு பௌத்த மதம் ஈழ நாட்டிலே இருந்துவருகிறது. அந்த நாள் முதற்கொண்டு சிங்களத்தின் வடபக்கம் சிவமதம்; தெற்குப் பக்கத்தில் புத்த மதம், புத்தமதக் கொள்கைகள் எல்லாம் அங்கே பிரசாரம் செய்யப்பட்டன.

புத்த மதக் கொள்கைப் பிரகாரம் கடைசியில் ஒன்றும் இல்லை; முடிவில் சூனியம். நிர்வாணம் என்று அதற்குப் பெயர். மோட்சத்திற்கு நிர்வாணம் என்று பெயர்; நிர்வாணம் என்றால் என்ன அர்த்தம்? துணிமணிகள் ஒன்றும் இல்லாமல் குழந்தை இருந்தால் நிர்வாணமாக இருக்கிறது என்று சொல்வது வழக்கம். சாமானியமாக ஒன்றும் இல்லை என்று அர்த்தம். அவர்களுடைய அர்த்தத்தில் எரிந்துகொண் டிருக்கிற விளக்கு அணைந்தால் நிர்வாணம் ஆகிவிட்டது என்று சொல்லலாம். எரிந்துகொண் டிருக்கிற உயிர் அணைந்தால் நிர்வாணம் என்று பெயர்: திரும்பவும் ஏற்ற முடியாமல் பூர்த்தி ஆகிவிட்டால் அதற்கு நிர்வாணம் என்று பெயர். பௌத்த மதக் கொள்கைப் பிரகாரம் கடைசியில் எல்லாம் நிர்வாணமாகப் போகின்றன. ஒன்றும் இல்லாமல் போகின்றன; சூனியமாகப் போகின்றன.

அந்த மாதிரி ஒன்றும் இல்லாத தன்மை வருவதற்கு நல்ல குணங்கள் வேண்டும்; நல்ல சீலங்கள் சில வேண்டும். பஞ்ச சீலம் என்று நேரு சொல்லிக்கொண் டிருக்கிறாரே, இந்தச் சீலம் என்ற வார்த்தையை அவர்கள்தாம் அடிக்கடி சொல்வார்கள். சீலங்கள் இருந்தால் ஒன்றும் இல்லாத தன்மை கிடைக்கும். இதுதான் பௌத்த சமயம்; சில சீலங்களை மாத்திரம் சொல்லியிருக்கிறார்கள். அந்தச் சீலங்கள் எல்லாவற்றையுந்தான் நமது யோக சாஸ்திரத்திலே அஷ்டாங்க யோகம் என்று சொல்லியிருக்கிறது. அதை வரிசையாக யம, நியம, ஆசன, ப்ராணாயாம, ப்ரத்யாஹார, த்யான, தாரண, சமாதி என்று எட்டு அங்கங்களாகச் சொல்லியிருக்கிறார்கள், முதலில் இயமம். இயமம் என்றால் அடக்கம்; தன்னையே அடக்கிக்கொள்வது.

அடக்கம் வேண்டும் என்றால் என்ன பண்ணவேணும்? அடக்கத்திற்குச் சில குணங்கள் சொல்லியிருக்கின்றன; அஹிம்சை, சத்தியம். பிரமசரியம் என்று சில குணங்கள் சொல்லியிருக்கின்றன. நம்முடைய யோக சாஸ்திரத்திலே முதல் அங்கமாகச் சொல்லியிருப்பதை மாத்திரம் அவர்கள் முக்கியமாகக் கொண்டார்கள்.

நல்ல சீலம், நல்ல குணங்கள் வரவேண்டும் என்றால் நம் வேதசாஸ்திரங்களில் சொல்லியுள்ள காரியங்களைச் செய்ய வேண்டும். நல்ல ஆசாரங்கள் இருக்கவேண்டும். நல்ல

அநுஷ்டானம் இருக்கவேண்டும். மனசு நன்ருக இருந்தால் தான் சீலம் வரும். எல்லாருக்கும் நல்ல மனசாக இருக்க முடிய வில்லை. கெட்டது என்பதே மனசில் புகாதபடி நல்லது முழுவதும் நிரம்பியிருந்தால்தான் சீலம்,

எல்லாருக்கும் மனசு மிகவும் நன்ருக இருக்க முடியாது. இருக்கவேண்டும் என்று ஆசைப்பட்டாலும் முடியவில்லை. வீட்டிலே இருக்கிற குழந்தை சதா ஏதோ விஷமம் பண்ணிக் கொண்டிருக்கிறது. கத்தரிக்கோலை எடுத்து நல்ல துணிகளை முக்கியமான காகிதங்களை, நறுக்கி விடுகிறது; செடிகளை வெட்டி விடுகிறது. இப்படித் துஷ்டத்தனம் சொல்ல முடியாதபடி பண்ணுகிறது. பள்ளிக்கூடத்திற்கு என்று அனுப்பிவிட்டால், 'இத்தனை மணிக்குப் போகவேண்டும், இன்ன இன்ன பாடங்களை அதற்குள் எழுதிவிட வேண்டும். திரும்ப இத்தனை மணிக்குத் தான் வரமுடியும்; வந்தால் இதைச் செய்யவேண்டும்' என்று அதற்கு ஒரு கட்டுப்பாடு வந்துவிடுகிறது. முன்பு காணப்பட்ட விஷம குணங்கள் எங்கோ போய்விடுகின்றன. பள்ளிக்கூடம் இல்லை என்ருல் மறுபடியும் கெட்ட குணங்கள் தலைகாட்டு கின்றன.

நல்ல சீலங்கள் உண்டாக வேண்டுமென்ருல் துர்க்குணங்கள் நிவிருத்தி யாகவேண்டும், 'துர்க்குணங்கள் நிவிருத்தியாக நல்ல கர்மாநுஷ்டானங்களைச் செய், பூஜை பண்ணு, வைச்வ தேவம் பண்ணு, அதிதிகள் வந்தால் ரட்சி' என்ற பல விஷயங்களைச் செய்யச் சொன்ருல் கெட்ட காரியங்களுக்கு நேரமே இல்லாமல் போய்விடும். 'கர்மாநுஷ்டானங்களைப் பண்ணுகிறபோதும், 'நாம் பண்ணுகிருேம்' என்ற அகம்பாவத் தோடு பண்ணக்கூடாது. ''பண்ணக்கூடிய சக்தியை நமக்கு ஈசுவரன் கொடுத்தான், பண்ணவேண்டும் என்ற புத்தியைக் கொடுத்தான்' என்று நினைத்து ஈசுவரார்ப்பணமாகப் பண்ணு'' என்று நம் வைதிக மதாசாரியர்கள் வழியைக் காட்டிஞர்கள்.

கண்ணுடியில் பார்க்கிருேம். அழுக்காக இருந்தால் பார்க்க முடிகிறதா? சுத்தமாகத் துடைத்துவிட்டுப் பார்த்தால் நன்ருகத் தெரியும். சுத்தமாகத் துடைத்த கண்ணுடிதான் என்ருலும் ஆடிக்கொண்டிருந்தால் உண்மை விளங்காது. அது சுத்தமாக இருக்கவேண்டும்; ஆடாமல் நிலையாகவும் இருக்க வேண்டும். சுத்தமான நிலைத்த கண்ணுடியாக இருந்தால் உண்மை பிரகாசிக்கும். சித்தம் என்பது கண்ணுடி போன்றது; பரம்பொருள் உண்மை.

இந்த உலகத்தை எல்லாம் படைக்கிறவன் யார்? நமக்கெல்லாம் இவ்வளவு அன்னத்தைக் கொடுக்கிறவன் யார்? அருட்கடலாக இருப்பவன் யார்? அவனைத் தெரிந்துகொள்ள

வேண்டும் என்று நாம் விரும்பினுல் நம்முடைய சித்தத்தை அழுக்கு இல்லாமல் ஆடாமல் வைத்துக்கொள்ள வேண்டும். ஏகாக்கிர சித்தம் என்பார்கள். ஒருமுகப்பட்டுச் சித்தம் ஆடாமல் இருக்கவேண்டும். கெட்ட எண்ணம் வந்து அழுக்குப் படிந்திருந்தால் ஒன்றும் தெரியாது. அந்தப் படலந்தான் இருக்கும்.

தாமிரச் செம்பு கிணற்றில் பத்து வருஷம் கிடந்துவிட்டது என்ருல் அதை எத்தனை தேய்த்து ஆகவேண்டும்? எவ்வளவுக்கு எவ்வளவு தேய்க்கிருேமோ அவ்வளவுக்கு அது வெளுக்கிறது; சுத்தமாகிறது. இவ்வளவு வருஷ காலம் எத்தனை கெட்ட காரியங்களைச் செய்து நம்முடைய சித்தத்தில் அழுக்கை ஏற்றிக் கொண்டு விட்டோமோ அந்த அழுக்கைப் போக்க அத்தனை நல்ல காரியங்களைச் செய்து தேய்க்க வேண்டும். நல்ல கர்மா நுஷ்டானங்களைச் செய்யவேண்டும். அதனுல் சித்த சுத்தி வரும். நல்ல சீலங்கள் உண்டாகும்.

'சீலந்தானே வேண்டும்? கர்மாநுஷ்டானம் எதற்காக?' என்கிருர்கள். பால் இருந்தால் போதாதா? பசு எதற்காக? பால்தானே நமக்கு வேண்டும்? இதற்காகப் பசு, அதன் சாணம், வைக்கோல் இவையெல்லாம் எதற்காக என்று கேட்கலாமா? 'பசு இல்லாமல் பால் வராது, அப்பா. பால் வேண்டுமென்ருல் இவை எல்லாம் வேண்டும். சீலம் வேண்டும். கர்மாநுஷ்டானம் வேண்டும். கர்மாநுஷ்டானந்தான் சித்த மலத்தை நீக்கும். சித்த மலம் நீங்கினுல் பரமாத்ம ஸ்வரூபம் தானே உள்ளே பிரகாசிக்கும். அதுதான் எல்லையில்லாத ஆனந்தம்' என்று இப்படி நமது மதத்திலுள்ள அநுபூதிமான்கள் சொன்னுர்கள். மாணிக்கவாசகர் போன்றவர்கள் இதைத்தான் சொன்னுர்கள்.

மற்ற மதத்தவர்கள் நமது மதக் கொள்கைகளில் ஒவ்வொன்றை ஏகதேச மாத்திரம் எடுத்துக்கொண்டு தனி மதமாக ஆரம்பித்தார்கள். இதிலே சீலம் என்று வந்தால் போதும். 'சீலந்தான் பிரதானம்; மற்றது வேண்டாம்' என்றது ஒரு மதம். 'சித்த சுத்தி பண்ணிக்கொண்டு ஏகாக்கிர சித்தத்தோடு உன் உள்ளே ஆண்டவனைப் பார். இந்த உடம்பே நடமாடும் கோயில்தான். கோயிலில் இருக்கும் ஆண்டவன் உன் உள்ளும் இருக்கிருன்' என்று சொன்னுல், உடனே, 'கோயிலுக்குப் போக வேண்டாம். கோயிலே வேண்டாம். விக்கிரக ஆராதனை தப்பு. கடவுள் நம் உள்ளத்திற்குள் இருக்கிருர்' என்று இப்படிச் சொல்வது ஒரு புது மதம். ஆக எல்லா மதங்களும் ஒரு கொள்கை இல்லாவிட்டால் மற்ருெரு கொள்கையை எடுத்துக்கொண்டன. மொத்தமாக எடுத்துக்கொள்ளவில்லை.

அப்படித்தான் புதுப் புது மதங்களையே உண்டாக்கினார்கள்: இவற்றுக்கெல்லாம் காரணம் நமது வேதம்; நமது வைதிக மதம்: ஆகையால்தான், 'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க' என்று சொன்னார்கள்: மற்றவை எல்லாம் அதிலே துறைகள். முருகன் வழிபாடு, திருமால் வழிபாடு, விநாயகர் வழிபாடு, அம்பிகை வழிபாடு, இவை எல்லாம் ஒரோரு துறை. பெரிய கங்கா நதியில் அவரவர்கள் இருக்கும் இடத்திற்குப் பக்கத்தில் உள்ள ஒவ்வொரு கட்டத்தில் இறங்கி ஸ்நானம் செய்வது போலத்தான்.

'யாரை வழிபட்டாலும் முடிவான ஒன்றை மறந்துவிடாதே; நீ செய்வதாக அகங்காரப்படாதே. இறைவனை நினைந்துச் செய். இறைவனை நினைந்து வழிபடு. இறைவனை நினைந்து நல்ல சீலங்களை வளர்த்துக்கொள். இவை எல்லாவற்றையும் ஈசுவரனுக்கே அர்ப்பணம் செய். இப்படி மாணிக்கவாசகர் போன்றவர்கள் சொன்னார்கள். எல்லாவற்றுக்கும் மூலமான ஒன்று இருக்கிறது. உலகம் எல்லாம் அழியும்போதும் மிஞ்சுவது அந்த ஒன்றுதான். அதுதான் சிஸ்வரூபம்; பரமாத்ம ஸ்வரூபம்' என்றெல்லாம் சொல்லிவந்தார்கள்.

சிதம்பரத்திலே மாணிக்கவாசகர் சதா திருவாசகத்தைப் பாடி உருகிக்கொண்டு இருந்தபோது சிங்களத்திலே ஒரு ராஜா இருந்தான். அவன் பௌத்த மதத்தைச் சேர்ந்தவன். அவனுக்கு ஓர் ஊமைப் பெண் பிறந்தது. அந்த ஊமைப் பெண்ணைப் பேசவைக்க அவன் பல சந்நியாசிகளிடம் போனான். எப்போதுமே கஷ்டம் வந்துவிட்டால், 'அங்கே ஒரு சாமியார் இருக்கிறாராமே? அவரிடம் போய்க் காட்டுவதுதானே?' என்பார்கள். அந்தச் சாமியார் எந்த மதம், எந்த நாடு என்று பார்க்காமல் ஓடுவார்கள். கஷ்டம் வந்துவிட்டால் அது நிவிருத்தி யாகவேணும்; எந்த மதத்தைச் சேர்ந்த வைத்தியனாக இருந்தாலும் பரவாயில்லை என்ற எண்ணம் வந்துவிடும்,

சிங்களத்திலிருந்து அந்த ராஜா-புத்த மதத்தைச் சேர்ந்தவன் தான். தன் பெண்ணை இழுத்துக்கொண்டு சிதம்பரத்திற்கு வந்துவிட்டான். மாணிக்கவாசகரைப்பற்றிக் கேள்விப்பட்டு அவரிடம் தன் பெண்ணை அழைத்துவந்தான்.

தம்முடைய வாழ்க்கை முழுவதையும் ஈசுவரனுக்கே அர்ப்பணம் செய்துவிட்டு அருள் நிறைந்த பழமாக மாணிக்கவாசகர் இருக்கிறார். 'இந்த ஒரு குழந்தையின் நிமித்தமாவது உலகம் ஈசுவரனுடைய கருணை வெள்ளத்திற்குப் பாத்திரமாகி க்ஷேமத்தை அடையாதா? அப்பா, இந்தப் பெண்ணுக்கு உலக க்ஷேமத்தின் பொருட்டு அநுக்கிரகம் செய்ய மாட்டாயா?' என்று

அவர் பிரார்த்தித்துக்கொண்டார். நல்ல பக்குவம் அடைந்தவர்கள் ஈசுவரனை நோக்கி எதுவும் கேட்கமாட்டார்கள். தங்களுக்கு என்று பெறவேண்டியது ஒன்றும் அவர்களுக்கு இல்லை; எப்போதாவது பிரார்த்தித்துக்கொண்டால் அது லோக க்ஷேமார்த்தமாகத்தான் இருக்கும். அவர்களுக்கு ஈசுவரன் உடனே கிருபை செய்கிறான். ஈசுவரன் கிருபை பண்ணுகிற காலத்தில் அவர் இரண்டடியில் ஒரு கேள்வி கேட்கிறார்; அந்தப் பெண் பாக்கி இரண்டடியில் பதில் சொல்கிறாள். இந்தக் கேள்வியும் பதிலும் சேர்ந்து திருச்சாழல் என்ற பெயரோடு திருவாசகத்தில் ஒரு பதிகம் இருக்கிறது.

பௌத்த மதத்தைச் சேர்ந்த அந்த ராஜாவுக்கு ஒரே அதிசயமாகப் போய்விட்டது. மாணிக்கவாசகரைப் பார்த்து ஒன்று கேட்கிறான். 'நீங்கள் அத்வைத தத்துவத்தைச் சொல்கிறீர்களே. எல்லாம் அழிந்து போகும்போது எப்படிக் கடைசியில் ஒன்று மாத்திரம் நிலைத்து நிற்கும்? அதற்கு என்ன சமாதானம் சொல்கிறீர்கள்?' என்று கேட்டான்.

கோயில்களில் விபூதிப் பிரசாதம் கொடுப்பதற்குப் பழைய நாளில் விபூதியை உருண்டை உருண்டையாகக் கட்டி கட்டியாகப் பழம் மாதிரி பண்ணி உள்ளே வைத்திருப்பார்கள். வேண்டும்போது அதைப் பொடி பண்ணிக் கொடுப்பது வழக்கம், அந்த மாதிரி உருண்டையாகப் பண்ணி வைத்திருந்த விபூதிப் பழம் ஒன்றை உள்ளே யிருந்து மாணிக்கவாசகர் எடுத்துவரச் சொன்னாராம்.' எல்லாம் அழிந்தாலும் கடைசியில் பரம்பொருள் அழியாமல் நிற்கிறது என்பதற்கு என்ன திருஷ்டாந்தம் என்று கேட்டீர்களே, இதோ பாருங்கள்' என்று அந்தக் கட்டி ஒன்றை அப்படியே பிட்டுக் காட்டினாராம். 'இதைத்தான் பரம்பொருள் என்று சொல்கிறீர்களா?' என்று சந்தேகம் வந்து விட்டது ராஜாவுக்கு.

உலகத்தில் பச்சையாக ஓர் இலை இருக்கிறது. மஞ்சளாக ஒரு துணி இருக்கிறது. இப்படி அநேகம் வஸ்துக்கள் அநேக வர்ணங்களில் இருக்கின்றன. அந்த வஸ்துக்களை எல்லாம் கொண்டுவந்து நெருப்பில் போட்டால் கரியாகிவிடுகின்றன. எந்தப் பொருள் எந்த வர்ணமாக இருந்தாலும் கரியாகப் போய்விடுகிறது; கருகிக் கறுப்பாய்ப் போய்விடுகிறது. காகிதம் நல்ல வெளுப்பு. அக்கினி பட்டால் கறுப்பாகிவிடுகிறது. முதலில் ஏதோ ஒரு சமயம் பூசிக்கொண்டிருக்கிறதே அந்தச் சாயம் எல்லால் நெருப்பில் பட்டவுடன் போய்விடுகிறது. தார் அடித்தாற்போலக் கறுப்பாகிவிடுகிறது. அதற்கு ஸ்வபாவ நிறம் கறுப்போ? நெருப்பு, சிவப்புத் துணிக்குக் கறுப்புச் சாயத்தைக் கொண்டுவந்து போட்டதா? நாம் எல்லாரும் பச்சை,

மஞ்சள், நீலம் என்ற வர்ணங்கள்தான் அதனதன் ஸ்வபாவ நிறங்கள் என்று எண்ணிக்கொண் டிருக்கிறோம். எல்லாப் பொருளும் அக்கினி பட்டவுடன் கறுப்பாய்ப் போவதைப் பார்த்தவுடன் என்ன நினைக்கிறோம்' கறுப்பு ஒன்றுதான் எல்லாப் பொருள்களுக்கும் ஸ்வபாவ நிறம் என்று ஆகிறது; பாக்கி எல்லாம் அவை பூசிக்கொண்ட சாயம் என்று நினைக் கிறோம்.

ஒரு வஸ்துவுக்குச் சாயம் போய்விட்டது; ஸ்வபாவம் என்று எண்ணிக்கொண் டிருந்த வர்ணம் போய்விட்டது, உடனே. 'சாயம் போயிற்று. சாயம் கறுத்துப் போயிற்று" என்று யாராவது சொல்கிறோமா? இல்லை. 'சாயம் வெளுத்துப் போயிற்று' என்று சொல்கிறதுதான் வழக்கம்.

ஏன்? பல பல வர்ணங்களை உடைய பொருள்கள் அக்கினி யில் படும்போது கருகிக் கறுப்பாய் போய்விடுகின்றன. இன்னோர் அக்கினி ஸ்புடம் போட்டால் நீற்றுப் போகிறது. அதைத் தொட்டால் அப்படியே தூள் தூளாகப் போகிறது. இப்படி நீறு ஆகிவிட்டபோது எல்லாம் வெளுப்பு. சாயம் வெளுத்துப் போய்விடுகிறது. கறுப்பும் வெளுத்துப் போகிறது. நானுவித வர்ணங்களைக்கொண்ட பொருள்கள், அக்கினி பட்ட மாத்திரத்திலே இல்லாதுபோய் ஒரு கறுப்பு மிஞ்சுகிறது. அந்தக் கறுப்பையும் திருப்பி ஸ்புடம் போடும்போது என்ன மிஞ்சுகிறது? வெளுப்பு மிஞ்சுகிறது. இந்த உலகமே பலவித மான சாயங்களைப் பூசிக்கொண் டிருக்கிறது. உண்மை என்பது வெண்மை. அந்த வெண்மை என்பது நீறுதான். அந்த நீற்றைத் திருப்பி நெருப்பில் இட்டால் வேறு வர்ணம் ஆகிறதா? வேறு பொருள் ஆகிறதா? அந்த நீறு நீருகத்தான் இருக்கும்; அந்த ஒன்று மட்டும் மாற்றம் இல்லாமல் எப்போதும் இருக்கிறது. இந்த உலகம் எல்லாம் போனவுடன் ஒன்று மிஞ்சி நீருக இருக் கிறது. இந்த உலகம் எல்லாம் போனவுடன் ஒன்று மிஞ்சி நீருக இருக்கிறதே, அதுதான் ஆண்டவன். அங்கே ஒரு தத்துவம் மிஞ்கிறது. அடிப்படையான ஒரு தத்துவம் இல்லாமல் உலகத்தில் இவ்வளவு சாயங்கள், இவ்வளவு அழியும் சாயங்கள் இரா. இந்த உடம்பில் உள்ள பொருள் எல்லாம் சாயம், அதில் உண்மை என்பது இந்த நீறுதான். உண்மைப்பொருளைப் பூசிக்கொண்டால் உண்மைப் பொருளின் நினைவு வரும் என்பதற்காக நீறு பூசச் சொன்னுர்கள். நீறு என்பது உண்மை, இப்படி ஒரு சின்னத் திருஷ்டாந்தம் மூலமாக மாணிக்கவாசகர் ஒரு பெரிய உண்மையை விளக்கிவிட்டார். 'மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு' என்று ஞானசம்பந்தரும் சொல்லி யிருக்கிருர்.

சிலர் முதலில் வேளாளர்களாக இருந்து, பிறகு ஜைனர்களாக இருந்து, மாணிக்கவாசகர் காலத்தில் திரும்பவும் நம் மதததிற்கு வந்துவிட்டார்கள். அப்படி வந்து நீறு திரும்பவும் பூசிக்கொண்டவர்களைத்தான் நீறுபூசி என்றார்கள். நீறுபூசி வேளாளர்கள் என்று இப்பொழுதும் சொல்கிறார்கள்.

உண்மையை மறந்துவிடாமல் இருக்க ஒவ்வொரு கணமும் திருநீறு பூசுகிறோம்; இந்த நீறு நாம் எப்போதும் உண்மையை மறக்காமல் இருக்கச் செய்கிறது. 'நீறில்லா நெற்றி பாழ்.'

சிவன்தான் வெளுப்பு. விஷ்ணு கறுப்பு. எத்தனை நானாவிதமான வர்ணங்களைப் பூசிக்கொண்டாலும் அக்கினி பட்ட மாத்திரத்திலே எல்லாம் கறுப்பாகிவிடுகிறது. எல்லாவற்றுக்கும் ஆதாரம் கறுப்பு. கறுப்பு நிலையில் பொருள்போல இருக்கும்: பொருள் இருக்காது. கரியாக இருக்கும். உலகம் எல்லாம் இருப்பதுபோல் இருக்கும். உலகம் இருக்காது. விஷ்ணு மயமாக இருக்கும். அதனால்தான்.

सर्वं विष्णुमयं जगत्

ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்

என்றார்கள்.

அந்தக் காலத்தில் சிம்னி விளக்கில் பேப்பர் படிப்பார்கள். நெருப்புப் பிடித்துக்கொண்டு விட்டால் தார் பூசினதுபோல் பேப்பர் கறுப்பாகிவிடும். இருந்தாலும் பேப்பரின் உருவம் இருக்கும். எழுத்துக்களைக் கூடப் பார்க்கலாம். துணி அக்கினி பட்டுக் கருகிப் போனாலும் மடிப்பு அப்படியே இருக்கும். துணிபோலவே இருக்கும். ஆனால் கறுப்பாகக் கருகிப்போய் இருக்கும். அந்த நிலைதான், 'ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்பது. வைரமும் நிலக்கரியும் ஒன்று; கறுப்பும் வெளுப்பும் வர்ணங்களில் சேர்ந்தவை அல்ல என்னும் விஞ்ஞான முடிவுகளும் அரியும் சிவனும் ஒன்று என்னும் சமரச சமய முடிவும் இந்தத் தத்துவத்தை விளக்குகின்றன.

सर्वं शिवमयम्

ஸர்வம் ஶிவமயம்

என்கிறார்கள்? நானாவித வர்ணங்கள் போயின. முதலில் கறுப்பு வந்தது. அந்தக் கறுப்பும் போய் எல்லாம் வெளுப்பாக உருத் தெரியாமல் நீறாகப் போய்விடுகின்றன. நடுநிலையில் ஜகம் இருக்கிறது. உரு இருக்கிறது; பின்பு ஜகத்தும் போய்விடுகிறது. 'ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்பதிலுள்ள ஜகத் என்பதும் போயிற்று; ஸர்வம் என்பதும் போயிற்று. சிவமயம் என்று நிற்கிறது.

விஷ்ணுவினுடைய கிருத்தியம் உலகைப் பரிபாலனம் செய்வது; அதனால் ஜகத் என்ற சொல் அங்கே இருக்கிறது. உலகை ஒட்டி விஷ்ணு பக்தி, ஹரிகதை, ஹரிநாம சங்கீர்த்தனம் என்பவை எல்லாம் வியவகாரத்தில் இருக்கின்றன. பாகவதர்கள் என்ற பதம் மாத்திரம் சொன்னால் விஷ்ணு பக்தர்கள் என்பதே மனசில் ஸ்புரிக்கும். சிவனடியார்களின் அநுபவத்தைக் குறிக்குமிடத்து, சிவ யோகம், சிவ ஞானம், சிவ யோகி என்று வந்துவிடுகிறது.

சாதாரண நெருப்பு, வெளிப்பொருள்களைக் கரியாக்கி நீருக்கிவிடுகிறது, ஆனால் ஞானக்கினி என்ன பண்ணுகிறது? வைரத்தை துணியை பொருளை நெருப்புக் கரியாக்கி நீருக்கும். காற்றை, மண்ணை, ஆகாசத்தை இந்த நெருப்பு என்ன செய்யும்? நெருப்பு நெருப்பையே எரிக்குமா? ஞானம் என்ற நெருப்பு ஒன்றுதான் எல்லாவற்றையும் எரித்துவிடும். ஞானம் என்ற நெருப்பினாலே உங்களை எல்லாம் எரித்துவிட்டால் சிவம் மிஞ்சுகிறது.

நவராத்திரியில் கொலு வைக்கிறோம். பண்ணுருட்டிப் பொம்மைகளை வாங்கி வைத்திருக்கிறோம். ஒரு போலீஸ்காரன் இருக்கிறான். வியாபாரம் செய்கிற செட்டியார் இருக்கிறார். ஒரு பலாக்காய், ஒரு பறங்கிக்காய், ஒரு கத்தரிக்காய் எல்லாம் இருக்கின்றன. குழந்தை அவற்றைப் பார்த்து, 'செட்டியார், போலீஸ்காரன், பறங்கிக்காய்' என்று நினைக்கிறது. அந்தக் குழந்தைக்கே பன்னிரண்டு வயது ஆகிவிட்டால் எல்லாம் மண் என்ற ஞானம் உண்டாகிவிடுகிறது.

பலாமரம், மனிதன், ஆடுமாடு, வாழைக்காய், கத்தரிக்காய் இப்படி எத்தனையோ உயிர்ப்பொருள்களையும் ஜடப் பொருள்களையும் ஞானத்தினாலே, 'எல்லாம் மண்' என்று பெரியவர்கள் எரித்துவிட்டார்கள். 'வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம்' என்றார் சுந்தரமூர்த்தி நாயனார்.

எல்லாம் மண்ணாகிவிடுகிறது என்ற உண்மையை விளக்கத் திருமண் தரித்துக்கொண்டார்கள். திருமண் மெய்யான ஓர் உண்மையை எப்போதும் விளக்கிக்கொண்டிருக்கிறது. தங்கத்தினாலே தட்டு, மோதிரம், கடுக்கன், செம்பு, தாம்பாளம் எல்லாம் பண்ணி வைத்திருக்கிறார்கள். இவை எல்லாம் வெவ்வேறாகத் தோன்றுகின்றன; உண்மையில் ஒரே தங்கந்தான். இப்படி, தங்கம், வெள்ளி எல்லாம் மண்தான் என்று எல்லாவற்றையும் தபஸ்விகள் அறிந்தார்கள். உலகத்திலே ஒரு காரணத்தினாலே பத்துக் காரியங்கள் உண்டாகின்றன. ஒரு மண்ணிலே ஆயிரம் மரங்கள் உண்டாகின்றன. கடைசியில் எல்

லாம் மண். காரியங்களுடைய காரணத்தைத் தேடிக்கொண்டு போனால் கடைசியில் ஒரு மெய்யான பொருள் வந்துவிடுகிறது.

நிற்கிற பொருள் நீறு; நெற்றியில் நீறு; நின்று போவதூ நீறு. ஞானம் எல்லாப் பொருளேயும் நீருகப் போகும்படி எரித்துவிடுகிறது.

கீதையில் பகவான் இப்படிச் சொல்கிருர்—

यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥

யதைதரம்ஸி ஸமித்தோக்நிர்பஸ்மஸாத்குருதேர்ஜுந
ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா

'அர்ஜுனு, அக்னியில் எத்தனே விறகைப் போட்டாலும் பஸ்மம் பண்ணுகிறது.' ஏதாம்ஸி என்ருல் விறகு, எத்தனே போட்டாலும் சாம்பலாகிறது. பஸ்மஸாத்-நீறு, சாம்பல். அப்படி.

ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ।
ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி ப்ஸ்மஸாத்குருதே ததா

ஞானக்கினியானது உலகத்திற்கு வேண்டிய சகல காரியங்களேயும் பஸ்மமாகப் பண்ணிவிடுகிறது. மிஞ்சுவது ஒருபொருள்; நீறு, வெண்மை. 'நீறில்லா நெற்றி பாழ்' என்று சொன்னுர்கள். 'ஏண்டா இப்படிப் பாழும் நெற்றியாய் இருக்கிருய்?' என்று சொல்வது வழக்கம். உண்மை விளங்காமற் போனுல் அந்த நெற்றி பாழ். திருமண்ணே திருநீரே தினமும் இட்டுக்கொள்ள வேண்டும்; இவற்றை இட்டுக்கொண்டால் பைத்தியக்காரன் என்று பரிகாசம் பண்ணுகிருர்களே என்று நம் இளேஞர்கள் சொல்லுவார்கள். உலகத்தில் எல்லாரும் பைத்தியக்காரர்களே. பைத்தியம் ஒருத்தன்தான் பைத்தியம் இல்லாதவன். ஆகையால் பைத்தியக்காரப் பட்டத்திற்குப் பயப்பட வேண்டாம்.

சில குடும்பங்களில் கோபி மண்ணே நேரே மேல் நோக்கி இட்டுக்கொண்டு விபூதியை நெற்றியின் குறுக்கே தரித்துக் கொள்வார்கள். 'விஷ்ணுமயம் ஜகத்', 'சிவமயம்' என்ற உண்மையை அநுபவித்து விளங்க வைக்கும் சின்னங்கள் இவை.

உடம்பு ஜீவிக்கச் சாப்பிட வேண்டும்; அதற்காக வேலை செய்கிருேம். வேலை செய்கிற இடத்திற்காகக் கட்டாயமாகச் சில சின்னங்களேத் தரித்துக்கொள்கிருேமே. ஆத்மா க்ஷேமத்தை அடையத் திருமண், திருநீறு அணிந்துகொள்ளக் கூடாதா?

கறுப்பும் வெளுப்பும் ஒன்றுதான். இரண்டையும் வர்ணம் என்று சொல்வதில்லை. விப்கி ஆர் (Vibgyor) என்று ஏழு வர்ணங்களைச் சொல்லுகிறோமே; அந்த வரிசையில் கறுப்பு, வெளுப்பு இரண்டும் இல்லை. அது இரண்டும் கலர் அல்ல என்று விட்டு விட்டார்கள். மற்றச் சாயங்கள் ஏழு. கறுப்பும் வெளுப்பும் ஒன்று. அதனால்தான் கரியும் வைரமும் ஒன்று என்கிறோம். வைரம் நிலக்கரியாக இருந்து சீமைக்கமலமாக ஆகிறது. வைரமும் கரியும் ஒன்று என்று சொல்கிறார்கள். பெயர்தான் வேறு. 'அரன் நாரணன் நாமம்.' நாமத்தை வைத்துக்கொண்டு சச்சரவு செய்ய வேண்டாம். இரண்டும் ஒன்று.

கறுப்பும் வெளுப்பும் ஒன்று. திருமண்ணோ விபூதியோ சிரத்தையுடன் இந்த நினைவுடன் இட்டுக்கொள்ள வேண்டும். உண்மையை விளங்க வைக்கும் சின்னங்கள் அவை; சதா உண்மையை நினைவுறுத்தும். கெட்ட வழியில் போக மாட்டோம். நல்ல கர்மங்களைச் செய்வோம்; சீலம் உண்டாகும்; சித்த சுத்தி ஏற்படும். சித்தத் தெளிவினாலே எல்லாம் ஒன்றாய் இருக்கிற பரம்பொருளை உணர்ந்துகொண்டு துக்கம் இல்லாத ஆனந்தத்தை அநுபவிப்போம். நல்ல குணங்கள் நிரம்பி உலகம் க்ஷேமமாக இருக்க வேண்டும்.

9

# அகம்பாவம் அற்ற ஆசாரியர்

प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनविधिः
सुधासूतेश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।
स्वकीयैरम्भोभिः सलिलनिधिसौहित्यकरणं
त्वदीयाभिर्वाग्भिस्तव जननि वाचां स्तुतिरियम् ॥

ப்ரதீ பஜ்வாலாபிர்திவஸகர நீராஜநவிதி:
ஸுதாஸூதேஸ்சந்த்ரோபலஜலலவைரர்க்யரசநா
ஸ்வகீயைரம்போபி: ஸலில நிதிஸௌஹித்யகரணம்
த்வதீயாபிர்வாக்பிஸ்தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம். ||

ஸௌந்தர்ய லஹரியில் கடைசிச் சுலோகம் இது. நூறு சுலோகங்களையும் ஆசாரியரவர்கள் அம்பாளுடைய சரணாரவிந்தத்தில் அர்ப்பணம் பண்ணிவிட்டு முடிவாகச் சொல்கிற சுலோகம் இது.

சௌந்தர்யம், அழகு என்பது எல்லாவற்றிலும் இருக்கிறது. கண்ணாலே பார்க்கக்கூடிய அழகுடைய சில பொருள்கள் இருக்கின்றன. காதாலே கேட்பதற்கான சௌந்தர்யம் உடையவை சில உண்டு. காதாலே கேட்கும்படியான அழகு வாக்-சப்தம். அந்தச் சௌந்தரியம் நிறைந்திருக்கிறது ஸௌந்தர்ய லஹரியில்.

பூலோகம் ஏற்பட்ட நாளாக இதற்கு முந்தியோ இதற்குப் பிந்தியோ, இவ்வளவு பூர்ணமான சௌந்தரியம் உள்ள வாக்கு ஏற்பட்டதும் இல்லை; ஏற்படப் போவதும் இல்லை என்று சொல்லிவிடலாம், அப்படிச் சௌந்தரியமே நிறைந்திருக்கும் படியான வாக்குக்கு ஸௌந்தர்ய லஹரி என்று பெயர்.

உலகத்தில் அழகு என்பதெல்லாம் தேவியினுடைய கடாக்ஷத்தின் ஒரு லேசந்தான்; ஒரு திவலை தெளித்ததுதான். அதுதான் நமக்குப் பெரிய அழகாகத் தோன்றுகிறது. அழகே அம்பாள்தான். சௌந்தரிய தேவதை அவள். அவளுடைய அநுக்கிரகத்தினாலே சௌந்தரிய வாக்குப் பிறந்தது.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு பண்ணப்பட்ட சிற்பம், இப்போது எங்காவது கிடைத்தால் பார்க்கலாம்.

அதில் ஏதாவது ஓர் அங்கம் குறைந்திருந்தால் அதைச் சரிப் படுத்த எவ்வளவு அங்கம் பண்ணிச் சேர்த்து வைத்தாலும் அவை அதோடு ஒட்டுவதில்லை. அப்படி உள்ளதுதான் வாக்கிலே இருக்கும்படியான சௌந்தரியமும். ஒரு பதத்தை எடுத்துவிட்டு இன்னொரு பதம் போடலாம் என்றால் பூலோகத்தி லுள்ள எல்லாக் கவிகளும் அத்தகைய பிரயத்தனம் பண்ணி னாலும் வாக்கு வராது.

பழைய சிற்பத்தோடு எப்படிப் புது அங்கம் ஒட்டாதோ அப்படியே அந்த வாக்கோடு புதுப்பதம் ஒட்டாது. ஸௌந்தர்ய லஹரியின் அழகுக்கு ஈடு இணை இல்லை. அப்படிப்பட்ட ஸ்தோத்திரத்தை அம்பாளுடைய பாதத்திலே அர்ப்பணம் பண்ணின ஆசாரியர் அவர்களுக்கு, தாம் அதைப் பண்ணி விட்டோம் என்ற நினைவு எள்ளளவும் இல்லை, மனசிலேகூட, 'நான் இப்படி ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறேன். நூறு சுலோகம் பண்ணிவிட்டேன்' என்ற கர்வம் லேசங்கூட வரவில்லை. 'நூறு சுலோகம் பண்ணி உன்னிடத்தில் அர்ப்பணம் பண்ணியிருக்கிறேன். இது எதைப்போல் என்று கேட்டால் சொல்லுவேன்' என்று சொல்கிறார்.

சங்கராந்தி அன்றைக்கு வீட்டில் முற்றத்திலே சூரிய வெளிச்சம் படுகிற இடத்தில், வெயில் விழுகிற இடத்தில், மெழுகிக் கோலம் போட்டுச் செம்மண் இட்டு, சூரியன் மாதிரி பிம்பம் எழுதிக் கரும்பு, தேங்காய், சர்க்கரைப் பொங்கல் எல்லாம் நிவேதனம் பண்ணிவிட்டுக் கடைசியில் சூரிய பகவானைப் பார்த்து, அவருக்கு அர்ப்பணம் பண்ணிவிட்டுக் கர்ப்பூரத்தை ஏற்றிக் காட்டுவது உண்டு. கர்ப்பூரத்தின் தேஜஸ் எங்கே? சூரியனுடைய பிரகாசம் எங்கே? கர்ப்பூரத்துக்கு ஒளி எங்கிருந்து வந்தது? பத்து நாள் வெயில் அடிக்கவில்லை என்றால் கர்ப்பூரங் கூட எரியமாட்டேன் என்கிறது. அவனு டைய அருளால் நூறு சுலோகங்கள் பாடி அவனையே ஸ்தோத் திரம் பண்ணியிருப்பது, சூரியபகவானுக்குக் கர்ப்பூர ஆரத்தி எடுப்பது எப்படியோ அப்படி இருக்கிறதாம்.

प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनविधिः

ப்ரதீபஜ்வாலாபிர்திவஸகர நீராஜநவிதி:

திவஸம் என்றால் நாளுக்குப் பெயர். திவஸகர: - சூரியன். சூரியன் பகலில் வருகிறான். பகலில் வருகிறவன் பகலவன். திவாகரன்; திவஸகரன், பகலவன் எல்லாம் சூரியன்தான். அவனுடைய பிரகாசத்திற்கு முன் கர்ப்பூர ஜ்வாலையைக் கொண்டு போய்க் காட்டுவது எப்படியோ அப்படி,

## नीराजनविधिः
## நீராஜநவிதி:

நீராஜநம் என்றால் ஆரத்தி என்று அர்த்தம். சூரியனுக்கு (ப்ரதீப ஜ்வாலா) உயர்ந்த தீபங்களைக் கொண்டுபோய் முன்னாடி கர்ப்பூர ஆரத்தி எடுப்பது எப்படியோ அப்படி என் ஸ்தோத்திரம் இருக்கிறது என்கிறார்.

பழைய நாளில் ஒன்று சொல்வது உண்டு. கவிகள், கற்களில் சூரிய காந்தக் கல் என்றும், சந்திரகாந்தக் கல் என்றும் இரண்டு இருக்கின்றன என்று சொல்வார்கள். லென்ஸ் எல்லாம் சூரியகாந்தக் கற்களே.

சூரியனுடைய வெயில் அந்தக் கண்ணாடிக் குண்டிலே, ஸ்படிகக் குண்டிலே பட்டுப் பஞ்சின்மேல் விழுந்தால் பஞ்சு எரிந்து போகும், பஞ்சின்மேல் நேராகச் சூரியகாந்தி படும் போதும் பஞ்சு எரிவதில்லை.

பரமாத்மா எங்கும் நிறைந்திருந்தால் நமக்கு அநுக்கிரம் பண்ணமாட்டாரா? ஏன் கோயில்களுக்குப் போகவேண்டும் என்று சந்தேகம் வரும். எங்கும் நிறைந்த பரமாத்மாவைத் தான் அங்கே ஆவாகனம் பண்ணிப் பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார்கள்.

சூரியன்தான் பஞ்சை எரிக்கிறது என்றாலும் சூரியனுக்கும் பஞ்சுக்கும் நடுவில் கண்ணாடிக் குண்டு இருக்கும்போதுதான் பஞ்சு எரிகிறது. 'கோயிலுக்கு ஏன் போகவேண்டும்? பரமாத்மா தான் எங்கும் நிறைந்திருக்கிறாரே?' என்றால், பரமாத்மாவின் அநுக்கிரகம் ஜீவன்களுக்குக் கிடைக்கும்படியாகக் கோயில், ஸ்படிகத்தைப்போல் இருக்கிறது. எங்கும் இருக்கிற பரமாத்மாவுக்கு அநுக்கிரகம் பண்ணுகிற சக்தி, தேவாலயங்களில் நிறைய இருக்கிறது.

எந்தக் காரியம் ஆனாலும் பரமாத்மாவின் அநுக்கிரகம் இல்லாமல் செய்ய முடியாது. சுவாசங்கூட விடமுடியாது. நல்ல காரியம், கெட்ட காரியம் எல்லாவற்றையும் நமக்கு ஒரு சக்தி இருந்தால்தான் செய்ய முடியும். அந்தச் சக்தி இல்லையானால் ஒரு காரியமும் செய்யமுடியாது. இந்தச் சக்திக்குத் தான் பராசக்தி, அம்பாள் என்று பெயர்.

ஏதோ ஒரு சக்தியினால்தான் இவ்வளவு காரியங்களும் செய்துகொண் டிருக்கிறோம். எல்லாவற்றுக்கும் காரணமான ஆதாரமான அந்தச் சக்தி எங்கும் வியாபித்திருக்கிறது என்றாலும் மகா தபஸ்விகள், ரிஷிகள் முதலியவர்களாலே பிரதிஷ்டை செய்யப்பட் டிருக்கும் ஆலயங்களில், பழனி போன்ற க்ஷேத்திரங்களில் அங்கே உள்ள தீர்த்தங்களில் அநுக்கிரகசக்தி

வெளிப்பட்டுக்கொண்டிருக்கிறது. இது சூரியனுடைய வெயில் எல்லா இடத்திலும் நிறைந்திருந்தாலும் வெயிலைத் தன்னிடம் வாங்கிக்கொண்டு பஞ்சை எரிக்கும்படியான சக்தியைச் சூரியகாந்தக்கல் வெளிப்படுத்துவதுபோல் இருக்கிறது.

இப்படியே சந்திரகாந்தக் கல் என்று ஒன்று உண்டு. பூர்ணிமா சந்திரன் உதிக்கிற காலத்தில் அதற்கு நேரே இருந்தால் அது அமிருதமான ஸ்ரவங்களை ஜில்லென்று தெறிக்கும் என்று சொல்வார்கள். சந்திரனுடைய குளிர்ச்சியைத் தன்னிடத்து வாங்கிக்கொண்டு, அது ஜலமாக வடிக்கும். சூரியகாந்தக் கல், சந்திர காந்தக் கல் என்பவை வாஸ்தவத்தில் உண்டா என்பதை விஞ்ஞானிகளே சொல்ல வேண்டும். இல்லையானல் ஒரு சம்பிரதாயமாகச் (Tradition) சொல்லி வருகிறார்கள் என்று கொள்ள வேண்டும்.

மின்மினிப் பூச்சி போன்ற பிராணிகள் இருக்கின்றன. அவைகளின் பின்புறம் லாந்தர் வைத்திருக்கிறது. ராத்திரி காலங்களில் ஒரு பிரகாசம் அதனிடம் இருக்கிறது. இப்படியே ஜோதிர்லதை என்று சில கொடிகள் இருக்கின்றன. பகல் வேளையில் அவை இருக்கிற இடம் தெரியாது. இரவு நேரங்களில் ஒரே பிரகாசமாக இருக்கும். 'ஜோதிர்லதை அங்கே இருக்கிறது. இங்கே இருக்கிறது. மத்திய பாரதத்தில் இருக்கிறது" என்று அடிக்கடி பத்திரிகைகளில் அதிசயமாக வருகிறது. அதிசயம் ஒன்றும் இல்லை. 'ஜ்யோதிர்லதா' என்ற ஒன்று உண்டு என்று பழைய நாட்களிலே சொல்லியிருக்கிறார்கள். அப்படி இல்லையா என்று விஞ்ஞானிகள்தாம் சொல்லவேண்டும்.

சந்திரகாந்தக் கல் சந்திரனுடைய அமிருத கிரணங்களை அப்படியே ஜலமாக வடிக்குமாம். சந்திரன் இல்லை என்றால் என்ன செய்யும்?

'அப்படி, சௌந்தர்ய தேவதையாக, அமிருதமயமான வாக்கு உடையவளாக நீ இருக்கிறாய், உன்னிடம் இருப்பதிலே ஒரு திவலைதான் உன் அநுக்கிரகத்தினால் என் வாக்கிலே தெறித்திருக்கிறது. நீ இல்லாமல் போனால், உன் அநுக்கிரகம் இல்லாமல் போனால், வாக்கு எனக்கு எப்படி வரப்போகிறது?" என்கிறார் பகவத்பாதர்:

सुधासूतेश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।

ஸுதாஸூதேஶ்சந்த்ரோபல ஜலலவைரர்க்யரசநா

ஸுதாஸூதி; என்று சந்திரனுக்குப் பெயர்; அமிருதம் போன்ற தாரைகளைப் பெருக்கக் கூடியவன் சந்திரன். அதனால் 'ஸுதாஸூதி; என்று அவனுக்குப் பெயர் ஏற்பட்டது: அமிருதம் போன்று இருக்கும்படியான சந்திரதாரை.

பிரகாசம் இருக்கும்படியான இடத்தில் உஷ்ணம் இருக்கும். பிரகாசம் ஏற ஏற உஷ்ணம் அதிகமாகப் போகிறது. சூரியனிடத்தில் நல்ல பிரகாசம் இருக்கிறது; உஷ்ணம் அதிகம். கீழே, ஒரு வகையான புழு-மின்மினிப் புழு-நெளிகிறது. அதன் பின்னே இருக்கும் விளக்கு அதற்குச் சுடாது. சந்திரனிடத்தில் ப்ரகாசம் நிறைய இருக்கும்; தாபம் இருக்காது. சந்திர கிரணங்கள் அமிருதம்போலத் தாபத்தைப் போக்கிப் பிரகாசம் செய்யும்.

'நான் நூறு சுலோகம் பண்ணினது சூரியனுக்குத் தீபாராதனை பண்ணுவது எப்படியோ சந்திரகாந்தக்கல் சந்திரனுக்கு அர்க்கியம் விடுவது எப்படியோ அப்படித்தான் இருக்கிறது' என்று ஆசாரியரவர்கள் அமிருதமான சௌந்தரியமான நூறு சுலோகங்களைப் பாடிவிட்டுக் கடைசிச் சுலோகத்தில் சொல்கிறார்.

சமுத்திரத்திற்குப் போகிறோம். சமுத்திர ராஜாவுக்குப் பூஜை பண்ணுவது உண்டு. அவருக்குப் பூஜை பண்ணுகிறபோது, 'ஆபோஹிஷ்டா' என்று சமுத்திர ஜலத்தை எடுத்தே ஸ்நானம் பண்ணிவைக்கிறோம். 'சமுத்திர தீர்த்தத்தையே எடுத்துச் சமுத்திர ராஜனுக்கு அர்க்கியம், ஆசமனீயம், ஸ்நானம் எல்லாம் பண்ணுவது எவ்வளவு அழகாக இருக்கிறதோ அப்படி இருக்கிறது நான் உன்னை ஸ்தோத்திரம் பண்ணுவது' என்று கடைசியில் முடிக்கிறார்.

प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनविधिः
सुधासूतेश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।
स्वकीयैरम्भोभिः सलिलनिधिसौहित्यकरणं
त्वदीयाभिर्वाग्भिस्तव जननि वाचां स्तुतिरियम् ॥

ப்ரதீபஜ்வாலாபிர்திவஸகரநீராஜநவிதி:
ஸுதாஸூதேஸ்சந்த்ரோபலஜலலவைரர்க்யரசநா |
ஸ்வகீயைரம்போபி: ஸலிலநிதிஸௌஹித்யகரணம்
த்வதீயாபிர்வாக்பிஸ்தவ ஜநநி வாசாம் ஸ்துதிரியம் ||

இதிலிருந்து நமக்கு என்ன தெரிகிறது? நாம் எத்தனையோ காரியங்களைச் செய்துவருகிறோம். நாம் செய்கிறோம் என்ற அகம்பாவம் நமக்குக் கொஞ்சங்கூட வருவதற்கு இடம் இல்லை; வரக்கூடாது. சில பேர் அகம்பாவம் இல்லாத உயர்ந்த குணம் உடையவர்களாக இருக்கலாம். 'நமக்கு அகம்பாவம் இல்லை' என்று அவர்கள் நினைத்தால், அகம்பாவம் இல்லாத உயர்ந்த குணத்திலிருந்தே அவர்களுக்கு அகம்பாவம் வந்துவிடும். ஆகையால் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

நமக்கு அகம்பாவப்படுவதற்கு இடம் இல்லை என்பது உண்மை. எதைச் செய்யவேண்டுமானாலும் சக்தி வேண்டும். சக்திதான் அம்பாள். அம்பாள் என்பது பெரிய சமுத்திரம். அந்தச் சமுத்திரத்தில் ஒரு திவலைதான் நம்முடைய சக்தி எல்லாம். வாக்குக்கு எல்லாம் அதிதேவதையாக இருக்கிற அவளுடைய ஒரு சிறு துளி அநுக்கிரக விசேஷத்தால்தான் இத்தனை பேசுகிறோம்; இத்தனை காரியங்களைச் செய்கிறோம். இந்த உண்மை தெரிந்தால் அகம்பாவத்திற்குக் கொஞ்சங்கூட இடமே இல்லை என்று தெரிந்துகொள்ளலாம்.

ஆசாரியரவர்களுக்கு இந்த உண்மை தெரிந்திருந்ததனால், 'நூறு சுலோகம் எழுதிவிட்டேன்' என்று நினைக்கவில்லை. 'சூரியனுக்குக் கர்ப்பூர தீபாராதனை பண்ணுவது எப்படியோ சந்திரகாந்தக் கல்லினின்று பெருகும் சீதளமான நீரைக்கொண்டு சந்திரனுக்கு அர்க்கியம் விடுவது எப்படியோ சமுத்திர ஜலத்தைக்கொண்டே சமுத்திரத்தை வழிபடுவது எப்படியோ; அப்படித்தான் பண்ணினேன்' என்று ஸௌந்தர்யலஹரியின் கடைசிச் சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்.

ஆசாரியரவர்களைக் காட்டிலும் பெரிய அவதாரமாக இது வரைக்கும் யாராவது ஆவிர்ப்பவித்தது உண்டா என்று சந்தேகம் உண்டாகிறது. குழந்தையாக இருந்தது முதற்கொண்டே சின்ன வயசில் ஆஸேது ஹிமாசல பரியந்தம் - ராமேச்வரம் முதற்கொண்டு இமயமலை வரையில்-சஞ்சாரம் பண்ணி ஷண்மத ஸ்தாபனம் செய்தவர் அவர்.

இப்படியே உண்மையை அறியவேண்டும். தத்துவத்தை அறிய வேண்டும் என்றால் ஆசாரியரவர்களுடைய கிரந்தத்தைப் பார்க்கவேண்டும். சின்னப் பையனாக இருந்து குழந்தை வயசிலே அவர் சந்நியாச ஆசிரமம் வாங்கிக்கொண்டு அந்தச் சின்ன வயசிலேயே தம் அவதாரத்தைப் பூர்த்திபண்ணிவிட்டார். அதில் மற்றொரு விசேஷம் என்னவென்றால் அவர் அவதாரம் பண்ணுவதற்கு முன்பு நமது தேசத்தில் பல மதங்கள் இருந்தன. அவதாரம் பண்ணின பிறகு அவற்றைக் காணவில்லை. ஞானம் உள்ள பிரபஞ்சம் முழுக்க ஆசாரியரவர்களுடைய கிரந்தங்களைப் போற்றுகிறது. அவருக்குள்ள கௌரவத்தைச் சொல்ல முடியுமா? ஆசாரியரவர்களுடைய மகிமை கல்சுவரிலும் ஏறியிருக்கிறது. கீழ் நாடுகளில் புதைபொருள் ஆராய்ச்சிக்காரர்கள் தோண்டி எடுக்கிறபோது அநேக கல்வெட்டுகள் கிடைத்திருக்கின்றன.

சயாம், கம்போடியா தேசங்கள் இருக்கின்றன. அவை பௌத்தமதம் உள்ள தேசங்கள். ஆயிரம் வருஷங்களுக்கு முந்தி நம் மதந்தான் அங்கே இருந்திருக்கவேண்டும். உலகம் முழுவதும்

இதுதான் இருந்திருக்கிறது. அங்கே அப்புறம் புத்தமதம் பரவி யிருக்கிறது. அங்கே தோண்டி எடுத்தபோது அநேகம் கோயில்கள் இருக்கின்றன என்பதற்குரிய சின்னங்கள் அகப்பட்டிருக்கின்றன. பாழடைந்த கோயில்கள் நம் ஊரிலும் இருக்கின்றன. அங்கே இரண்டோர் இடங்களில் காடுகளில் இடிந்துபோன கோயில்கள் இருக்கின்றன. அந்தக் கோயில்களில் நிறையக் கல்வெட்டுகள் அகப்பட்டிருக்கின்றன. சமீப காலம் வரையில் அங்கே பிரெஞ்சு ஆர்க்கியலாஜிகல் டிபார்ட்மென்டைச் சேர்ந்தவர்கள் 700, 800 சம்ஸ்கிருதக் கல்வெட்டுகளை எடுத்திருக்கிறார்கள். சுலோகங் களைப் பார்த்தால் மிகவும் அழகாக இருக்கின்றன. அவ்வளவு சுத்தமான வாக்கு!

ஒரு சுலோகத்தில் ஆசாரியவர்களைப்பற்றி வருகிறது: 'சகல சாஸ்திரங்களையும் பூலோகத்தில் நிர்த்தாரணம் பண்ணின ஸாக்ஷாத் பகவான் சங்கரர்தாம் இன்னாருக்குக் குரு. அவரிடம் இவர் அத்தியயனம் பண்ணினார்' என்று எழுதியிருக்கிறது:

येनाधीतानि शास्त्राणि भगवच्छङ्कराह्वयात् ।
निश्शेषसूरिमूर्धालिमालालीढाङ्घ्रिपङ्कजात् ॥

யேனாதீதானி ஶாஸ்த்ராணி பகவச்சங்கராஹ்வயாத் |
நிஶ்ஶேஷஸூரிமூர்த்தாலிமாலாலீடாங்க்ரிபங்கஜாத் ||

கோயில் பிரதிஷ்டை பண்ணினவர்களுக்கு ஆசாரியர், ஸாக்ஷாத் பகவான் சங்கரரிடமிருந்து எல்லாச் சாஸ்திரங்களையும் படித்தார் என்று வருகிறது. பகவான் என்றாலே ஸாக்ஷாத் ஆசாரியரவர்களா அல்லது அந்தப் பீடத்தில் வந்தவர்களா என்ற எண்ணம் எல்லார் மனத்திலும் உதிக்கும்.

நைஷதம் என்று ஒரு நூல் இருக்கிறது. பஞ்ச காவியங் களில் அது ஒன்று. ஸ்ரீஹர்ஷன் எழுதியிருக்கிறார். அவர், வேதத்திலும் அத்வைத சாஸ்திரத்திலும் கண்டனகண்ட கத்யம் முதலிய கிரந்தங்களைப் பண்ணினவர். அவர் ஆதி ஆசாரியரைப்பற்றிச் சொல்லுகிற இடங்களில், 'பகவான் சங்கரர்' என்று எழுதுகிறார். பகவான் சங்கரரைத்தான் பகவத் பாதர் என்று நாம் சொல்கிறோம்.

எண்ணூறு வருஷங்களுக்கு முந்தி ஆதி சங்கராசாரியாரைப் 'பகவான் சங்கரர்' என்றுதான் சகல சாஸ்திரங்களும் தெரிந்து கொண்டு குறிப்பிட்டு எழுதியிருக்கின்றனர். கீழ்நாட்டில் கிடைத்த கல்வெட்டிலும் பகவான் சங்கரர் என்றுதான் குறிப் பிட்டிருக்கிறது.

निश्शेषसूरिमूर्धालिमालालीढाङ्घ्रिपङ्कजात् ।
நிஶ்ஶேஷஸூரிமூர்த்தாலிமாலாலீடாங்க்ரிபங்கஜாத் |

அவர்களுடைய அங்க்ரி பங்கஜம் - பாதம், தாமரைப் பூவைப்போல் இருக்கிறது. அங்க்ரி-சரணம்-பாதம்.

தாமரைப் புஷ்பம் என்றால் அதில் வண்டு வந்து மொய்த்துக் கொண்டிருக்காதா? இந்தத் தாமரைப் புஷ்பத்தில் மொய்த்துக் கொண்டிருப்பது எந்த வண்டு? உலகத்தில் எவ்வளவு பேர் தத்துவத்தை ஆராய்ந்துகொண் டிருக்கிறார்களோ அத்தனை பேரும் ஒருவர்கூடப் பாக்கி இல்லாமல் அவர்களுடைய சிரசாகிற வண்டுகளை இந்தச் சரணம் என்ற தாமரைப் புஷ்பத்தில், ஆசாரியரவர்களுடைய பாத கமலத்தில், அதை விட்டு அசையமாட்டேன் என்று, தாழ்த்தியிருக்கிறார்கள்; மொய்க்கவிட்டிருக்கிறார்கள். நிச்சேஷம் - ஒருத்தர்கூடப் பாக்கி இல்லை. மூர்த்தா என்றால் சிரசுக்குப் பெயர். அந்தச் சரண கமலத்தை விட்டு நகருவதுகூட இல்லை. உலகத்தில் இருக்கும்படியான ஞானிகள், அநுபூதிமான்கள் எல்லாருடைய சிரசும் அந்தச் சரணத்தில் லயித்திருக்கின்றன.

இப்படி வண்டுகள் பகவத்பாதரவர்களுடைய பாத கமலத்திலே ஆனந்தத்தை அநுபவித்துக்கொண் டிருக்கின்றன. அத்தகைய பகவான் சங்கரரிடமிருந்து இவர் சாஸ்திரம் படித்தார் என்று கல்வெட்டில் எழுதியிருக்கிறது.

எல்லாருடைய சிரசும் தம்முடைய சரண கமலத்திலே சதா தாழ்ந்து கிடக்கும்படியான மகிமையை உடைய ஆசாரியரவர்கள் ஸௌந்தர்ய லஹரியைப் பாடிவிட்டுக் கடைசிச் சுலோகத்தில், 'நான் என்ன அம்மா உன்னைத் தோத்திரம் பண்ணிவிட்டேன்? உன் அநுக்கிரகத்தில் இது ஒரு திவலை. நான் உன்னைப் பற்றிப் பாடுவது என்பது பரிகாசம் செய்வதுபோல் அல்லவா தோன்றுகிறது? ஏன் என்றால் சூரியனுக்கு முன்னால் கர்ப்பூரத்தை ஏற்றிக் காட்டினால் சந்திரனுக்கு முன்னால் சந்திரகாந்தக் கல் நீரால் அர்க்கியம் விட்டால் இது பார்க்கிறவர்களுக்குப் பரிகாசமாகத் தோன்றாதா? சூரியன் கொடுத்த தேஜஸினாலே கர்ப்பூரம் பிரகாசிக்கிறது. சந்திரனுடைய பிரகாசத்தினாலே சந்திரகாந்தக் கல் குளிர்ச்சியான ஜலத்தை வடிக்கிறது. சந்திரன் இல்லையென்றால் சந்திரகாந்தக் கல் ஜலம் வடிக்குமா? அப்படி உன் அருள் இல்லையென்றால் எனக்கு வாக்கு ஏது? எல்லாம் உன்னுடையது. நீ கொடுத்த வாக்கைக் கொண்டு உனக்கு அர்ப்பணம் பண்ணியிருக்கிற ஸ்துதி இது.' - இவ்வாறு சொல்லியிருக்கிறார் என்றால் நம்மைப்போல் உள்ள அல்பமக்கள் நமக்கு ஒரு சக்தி இருக்கிறது என்று அகம்பாவப்படலாமா?

நாம் நன்றாகப் பேசுகிறோம், எழுதுகிறோம்; உலகம் புகழ்ந்து மாலை போடுகிறது. இந்தமாதிரி சமயங்களில் நமக்கு அகம்பாவம் சுலபமாக வந்துவிடும். அப்போது யோசித்துப்

பார்க்க வேண்டும். அந்தப் புகழ்ச்சிக்கெல்லாம் உண்மையான தகுதி நமக்கு உண்டா? எல்லாம் அம்பாளுடைய அநுக்கிரகம் அல்லவா? எந்த இடத்திலிருந்து நமக்கு அந்தச் சக்தி எல்லாம் வந்ததோ அந்த இடத்திற்கே நம் புகழ், நமது ஸ்தோத்திரம் எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்ய வேண்டும். அந்த மாதிரி அர்ப்பணம் பண்ணிவிட்டால் நமக்கு ஒரு குறையும் இல்லாமல் மேலும் மேலும் அம்பாளுடைய அநுக்கிரகம் கிடைக்கும்; அகம்பாவமே உண்டாகாது. நல்லதோ கெட்டதோ எல்லாவற்றையும் அம்பாளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, அவளுடைய சரண கமலத்தை நாமும் கொஞ்சங்கூட அகம்பாவம் இல்லாமல் தியானம் பண்ணிக்கொண்டிருந்தால் க்ஷேமம் அடைவோம். லோகம் முழுவதும் க்ஷேமத்தை அடையும்.

10

# சிவ 'சின்னங்கள்

எந்தப் பிராணியின் உடம்பிலும் துர்க்கந்தம் வீசும். எல்லாப் பிராணிகளின் மலமும் துர்க்கந்தமே; மற்றப் பிராணி களைவிட மனிதனுடைய தேகமே அதிகத் துர்க்கந்தம் உடையது. ஆனால் பசுமாட்டின் மலம் அத்தகையது அல்ல. எல்லா விதமான மலத்தையும் போக்குவது பசுமாட்டின் மலம். எல்லா மலத்தை யும் போக்கும் சக்தி அதற்கு இருப்பதனால் அது மிகவும் பரி சுத்தமானது. அந்த மலத்திலிருந்து உண்டாகும் பஸ்மம் மிகவும் பரிசுத்தம் உடையது. பசுமாடு, மற்றப் பிராணிகளை விடப் பரிசுத்தமான மிருகம்; எல்லாத் தெய்வங்களும் பசு மாட்டின் சரீரத்தில் இருக்கின்றன என்று சாஸ்திரங்கள் சொல் கின்றன. எல்லா விதமான தோஷமும் பசுமாட்டின் மலத்தினால் போகும் என்று சொல்வார்கள். அந்த மலத்திலிருந்து உண்டாகிற பஸ்மம், எல்லா மலத்தையும் போக்கும்.

பரமசிவனுக்கு உரிய ஐந்து அடையாளங்களில் பஸ்மமாகிய விபூதி ஒன்று; அவனுக்குப் பிரீதியான மற்றோர் அடையாளம் ருத்திராட்சம்; பில்வம் மற்றொன்று. பில்வம், மகாலக்ஷ்மி வாசம் செய்யும் விருக்ஷம், பஸ்மம், சத்திய ஸ்வரூபமானது. அதை ஸாக்ஷாத் பரமசிவனுடைய ஸ்வரூபமே என்று சொல்ல வேண்டும்.

பிரபஞ்சம் எல்லாம் நசித்தாலும் தான் அழியாமல் இருப்பவன்தான் பரமசிவன். உலகத்திலுள்ள பொருள் எல்லாம் எரிந்துபோனால் பஸ்மம் ஆகிவிடுகிறது. அதை எரித்தால் அது அழிவதில்லை; பஸ்மமாகவே நிற்கும், சிவ ஸ்வரூபமும் அத்தகையதே.

ருத்திராக்ஷத்தின் பெருமை மிக அதிகம். உலகத்தில் எவ்வளவோ விருக்ஷங்கள் உண்டு. எவ்வளவோ விதமான விதைகள் உண்டு. ருத்திராக்ஷத்தைச் சிவபெருமானுடைய அடையாளமாகப் பெரியவர்கள் சொல்கிறார்கள். ருத்திரனுடைய நேத்திரம் அது; அதைத் தமிழில், 'திருக்கண்மணி' என்று சொல்வார்கள். ருத்திராக்ஷ மாலையை அக்ஷமணிமாலை, திருக் கண்மணிமாலை என்று சொல்வது வழக்கம். மற்ற விருக்ஷங் களுடைய விதைகளுக்குஇல்லாத ஒரு சிறப்பு, ருத்திராக்ஷத்திற்கு

உண்டு. இதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கலாம். மற்றப் பழங்களில் உள்ள விதைகளுக்கு உள்ளே துளை இல்லை. துளசிமணியை அணிய வேண்டுமானால் துளை போடவேண்டும்; துளைபோட்டுக் கோத்துத் தரித்துக்கொள்ள வேண்டும். தாமரை மணியை மாலையாக அணிவது வழக்கம். அந்த மணிக்கும் துவாரம் செய்தே ஆகவேண்டும். ஸ்படிகமணி மாலையை அணிவார்கள்; அந்த மணிக்கும் துவாரம் செய்தே கோத்து அணிய வேண்டும்.

இயற்கையில் துளையோடு உண்டாவது ருத்திராக்ஷம் ஒன்று தான். இந்த ருத்திராக்ஷம் பாரத தேசத்தில் நேபாளத்தில் இருக்கிறது. பல ஆயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள ஜாவாத் தீவில் உண்டு. ஜாவாவைச் சார்ந்த இடங்களில் விஷ்ணு ஆலயம், சிவாலயம், வேத சாஸ்திரங்கள் எல்லாம் இருந்தன. வேறு இடங்களிலும் நம்முடைய வைதிக மதம் பரவியிருந்தது. இப்போது அங்கே மதாந்தரங்கள் வந்திருக்கின்றன. பாலி என்று ஒரு சின்னத் தீவு இருக்கிறது. அங்கே இப்பொழுதும் சிவாராதனை செய்கிறார்கள். சிவனைப் பிரார்த்தனை செய்கிறார்கள். சிவாகம விதிப்படி வழிபடுகிறார்கள். அங்கே ருத்திராக்ஷ மரம் இருக்கிறது. நம்முடைய தேசத்தில் நேபாளத்தில் வளர்வதோடு பெங்களூர் முதலிய குளிர்ந்த பிரதேசங்களிலும் ருத்திராக்ஷ மரம் வளரும்.

ருத்திராக்ஷத்திற்கு முகங்கள் உண்டு. சாதாரணமாக நாரத்தம் பழத்திற்குள் ஐந்தாறு சுளைகள் இருக்கும். அதே போல் ருத்திராக்ஷத்திலும் முகம் உண்டு. பஞ்ச முகம் உடைய ருத்திராக்ஷமே அதிகம். ஆறுமுக ருத்திராக்ஷமும் உண்டு. சுப்பிரமணிய பக்தர்கள் ஆறுமுகத்திற்கு ஏற்றது ஆறுமுக ருத்திராக்ஷம் என்று அணிவார்கள். ஏகாதச முக ருத்திராக்ஷமும் உண்டு. ஏகாதச ருத்திரனாக இருக்கும் பரமேசுவரனை நினைப்பவர்கள் அதை வாங்கிக்கொள்வார்கள். ஒரே முகம் உடைய ஏகமுக ருத்திராக்ஷம் உண்டு. அது கிடைப்பது அரிது. ஏகமுக ருத்திராக்ஷமும் கிடைத்தால் லட்சம் ரூபாய் கொடுத்தும் வாங்குவது உண்டு. வலம்புரிச் சங்கு, ஏகமுக ருத்திராக்ஷம் இரண்டும் விலை உயர்ந்தவை. இரண்டு முகம், மூன்று முகம், நான்கு முகம் என்று ருத்திராக்ஷங்களில் பல வகை உண்டு. 7 முதல் 13 வரையில் சாதாரணமாகக் கிடைக்கும். 32 முகம் உள்ள ருத்திராக்ஷங்கூட அருமையாகக் கிடைப்பது உண்டு.

இப்படி முகங்களிலே பல வகை இருந்தாலும் எல்லா ருத்திராக்ஷங்களின் மத்தியிலும் துவாரம் இருக்கும். இது இயற்கையில் இருக்கிறது. எந்தக் கொட்டையும் இயற்கையில் துவாரம் உள்ளதாகக் காணப்படவில்லை. பரமேசுவர சிருஷ்டியிலே, மனிதன் இதைத் தரித்து நன்மை அடைய வேண்டுமென்று

இதனை உண்டாக்கியிருக்கிறார். இந்தக் கொட்டைக்கு வேறு உபயோகம் இல்லை. மனிதன் தரித்துக்கொண்டு மோட்ச சாம்ராஜ்யத்தை அடைய வேண்டும் என்பதற்காகவே இதனைப் படைத்திருக்கிறார். இது சிவ சின்னங்களில் முக்கியமானது. பஸ்மமும் ருத்திராக்ஷமும் சித்தசுத்தியை உண்டாக்கும். சித்த சுத்திக்கும் சின்னங்களுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சந்தேகப்படலாம். அதைப்பற்றிப் பிறகு ஆலோசிக்கலாம்.

பஸ்மம், ருத்திராக்ஷம், வில்வம், ஸ்படிக லிங்கம், பஞ்சாக்ஷரம் ஆகிய ஐந்தும் சைவச் சின்னங்கள். நாக்கிலே தரிப்பது பஞ்சாக்ஷர மந்திரம். வேதங்கள் எல்லாம் சிவஸ்வரூபம். பிரபஞ்சத்திற்கெல்லாம் காரணமாக இருக்கிற பரமேசுவரனுடைய சுவாசமே வேதம் என்று சொல்லியிருக்கிறது. சுவாசம் என்பது மூச்சு. மூச்சு இல்லாவிட்டால் மனிதன் வாழ முடியாது. மூச்சு இல்லாமல் மனிதன் இல்லை; மனிதன் இல்லாமல் மூச்சு இல்லை. மனிதனிடம் மூச்சு இருந்தால்தான் மனிதனாக இருப்பான். வேதம் ஈசுவரனுடைய சுவாசம். வேதம் இல்லாமல் ஈசுவரன் இல்லை; ஈசுவரன் இல்லாமல் வேதம் இல்லை. இரண்டும் ஒன்றோடு ஒன்று ஐக்கியமாக உள்ளவை.

வேதங்களில் ரிக் யஜுஸ் ஸாம அதர்வண வேதங்கள் என நான்கு. அவற்றில் அதர்வண வேதம் யக்ஞத்திற்கு அநேகமாக உபயோகப்படுவதில்லை. ஆகையால் அதை நீக்கிவிட்டு வேதம் மூன்று என்று சொல்வது உண்டு.

त्रयी वेदः

த்ரயீ வேத:

இந்த மூன்று வேதங்களிலும் பிரதானமானது யஜுர்வேதம்; அது மூன்று வேதங்களின் மத்தியில் உள்ளது. அதில் ஏழு காண்டம் உண்டு. அந்தக் காண்டங்களுள் நான்காவது காண்டம் நடுவில் இருக்கிறது. அதில் ருத்திரம் இருக்கிறது. 'நமோ நமோ' என்று அதில் வருவதால் தெலுங்கு தேசத்தவர்கள் அதை நமகம் என்று சொல்வார்கள். தமிழ் நாட்டில் ருத்திரம் என்பார்கள். அதற்குப் பிறகு, 'சமே சமே' என்று வரும். அதனால் சமகம் என்று சொல்வது வழக்கம். 'பரமேசுவரனுக்கு நம:' என்று அடுத்து அடுத்து வரும் மந்திரங்களை உடையது இது. இந்த ஸ்ரீருத்திரத்தின் நடுவில் பஞ்சாக்ஷரம் இருக்கிறது. வேதத்திற்கு ஆபரணமாக இருப்பது ஸ்ரீருத்திரம். அதில் மத்தியமணி பஞ்சாக்ஷரம். இந்த மத்திய மணியை எடுத்துவிட்டால் ஆபரணம் வியர்த்தமாகிவிடும். நெற்றிக்குத் திலகம்போல, வேதத்திற்குத் திலகம்போல இருக்கிறது பஞ்சாக்ஷரம். அந்தப்

பஞ்சாக்ஷரத்தின் மத்தியிலே, 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்கள் இருக்கின்றன.

64 கலைகள், 14 வித்தைகள் இவற்றில் நான்கு வேதங்கள் பிரதானமானவை. நான்கு வேதங்களுள் மூன்று வேதம் பிரதானமானவை. மூன்று வேதங்களுள் யஜுர்வேதம் பிரதானமானது. மத்தியகாண்டத்திலும் ஸ்ரீருத்திரம் பிரதானமானது. பஞ்சாக்ஷரத்திலும் சிவ என்ற இரண்டு எழுத்துக்கள் பிரதானமானவை. வேதத்திற்கு ஜீவாம்சமாக இருப்பவை, 'சிவ' என்னும் இரண்டு அக்ஷரங்கள். பஞ்சாக்ஷர உபதேசம் நாவுக்கு ஆபரணமாக இருப்பது.

பாகவதத்தில் சுகப்ரம்மரிஷி விஷ்ணுவின் அவதார விசேஷங்களைச் சொல்கிறார். தசம ஸ்கந்தம் கிருஷ்ண அவதார மகிமையைச் சொல்கிறது. மற்ற ஸ்கந்தங்கள் மற்ற அவதாரங்களைப் பற்றிச் சொல்கின்றன. தக்ஷப்பிரஜாபதியின் யக்ஞ வருணனை ஓர் இடத்தில் வருகிறது. அம்பிகை, தாக்ஷாயணியாக அவதாரம் செய்து தக்ஷனின் மகள் ஆனாள். தக்ஷன், யாகம் பண்ணும்போது ஈசுவரனிடம் துவேக்ஷம் உடையவனிடம் பெற்ற இந்த உடம்பை விட்டுவிட வேண்டும் என்று கனகலம் என்ற இடத்தில் அக்கினியில் சரீரத்தை அர்ப்பித்து விட்டாள். அந்தத் தக்ஷயாகக் கதையைச் சொல்லும்போது சிவநாமாவின் பெருமையைப் பாகவதம் தெரிவிக்கிறது.

यद् द्व्यक्षरं नाम गिरेरितं नृणां
सकृत्प्रसङ्गादघमाशु हन्ति तत् ।
पवित्रकीर्तिं तमलङ्घ्यशासनं
भवानहो द्वेष्टि शिवं शिवेतरः ॥

யத் த்வயக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணாம்
ஸக்ருத்ப்ரஸங்காதகமாஶு ஹந்தி தத் |
பவித்ரகீர்த்திம் தமலங்க்யஶாஸநம்
பவாநஹோ த்வேஷ்டி ஶிவம் ஶிவேதர: ||

'பாவ நிவிருத்திக்கு ஏதாவது உங்கள் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறதா? எங்கள் தெய்வம் பாவ நிவிருத்தி செய்யும்' என்று அந்நிய மதஸ்தர்கள் சொல்கிறார்கள். 'எங்கள் தெய்வத்தினிடங்கூடப் போகவேண்டியதில்லை. எங்கள் தெய்வத்தின் நாமாவே பாவத்தைப் போக்கும்' என்று இந்தச் சுலோகம் சொல்கிறது. அது பெரிய நாமங்கூட அல்ல. இரண்டே எழுத்தை உடையது. தங்கத்தாலும் வெள்ளியாலும் அதை எழுதி வைக்கவேண்டும் என்பது இல்லை; வாயாலே சொன்னால்

பாவம் போய்விடும். யார் சொன்னாலும் அதற்குப் பலன் உண்டு. வாய் உள்ளவர்களாக இருக்கிற யாவரும் அதைச் சொல்லலாம். பல காலம் சொல்லித் தவம் செய்யவேண்டும் என்பதில்லை. பக்தியினால் ஒரு முறை சொன்னாலும் போதும். எப்போது சொல்லவேண்டும், எவ்வாறு சொல்லவேண்டும் என்றால் நியமம் இல்லாமல் எப்போது சொன்னாலும் பாவங்களை எல்லாம் நாசம் செய்யும். உச்சாரணம் செய்யும்போதே, அந்த க்ஷணமே பாவங்கள் எல்லாம் போய்விடும்.

अघं हन्ति आशु

அகம் ஹந்தி ஆசு

அகம் என்றால் பாவம். ஹந்தி-நாசம் செய்துவிடுகிறது; ஆசு அந்த க்ஷணமே என்று சொல்லியிருக்கிறது.

விஷ்ணு புராணங்களில் மகாவிஷ்ணுவின் மகிமையைத்தான் சொல்வார்கள். சிவபுராணங்களில் சிவன் பெருமையைத்தான் சொல்வார்கள். இது சகஜம். ஆனால் சுகப்ரம்ம ரிஷி, பாகவதத்தில் மகாவிஷ்ணுவின் பெருமையைச் சொல்கிறபோது நடுவில் சிவ மகிமையைச் சொல்லியிருக்கிறார். சத்தியமான ஒன்றை எங்கும் சொல்லலாம் அல்லவா? அதனால் சிவ நாம மகிமையை அங்கே சொல்லியிருக்கிறார்.

நாக்கைச் சுத்தமாக்கிக்கொள்ளச் சிவ நாமத்தைச் சொல்வதுபோல் இருதயத்தைச் சுத்தமாக்கிக்கொள்ள ஸ்படிக ரூபமாகச் சிவபெருமானைத் தியானம் செய்ய வேண்டும். மனத்தில் எதைத் தியானிக்கிறோமோ அந்த ஸ்வரூபம் ஆகிவிடுகிறோம். சுத்த ஸ்படிகஸங்காச ரூபமாக இருக்கிற பரமசிவனைத் தியானம் செய்தால் மனம் ஸ்படிகம்போல் மலமற்றதாகிவிடும். தேகத்தைப் பஸ்மத்தாலே பரிசுத்தம் செய்து, நாக்கைச் சிவ நாமாவினாலே பரிசுத்தம் செய்து, கண்டத்தில் ருத்திராக்ஷம் அணிந்துகொண்டு, வில்வத்தைக் கையில் தாங்கிச் சிவ பெருமானை ஸ்படிக ஸ்வரூபமாகத் தியானித்து மனசைப் பரிசுத்தம் செய்து அர்ச்சிக்கவேண்டும்.

மகாலக்ஷ்மி வாசம் செய்யும் இடம் வில்வம். அது சகல தோஷத்தையும் நிவிருத்தி செய்கிறது.

त्रिदळं त्रिगुणाकारं त्रिणेत्रं च त्रयायुधम् ।
त्रिजन्मपापसंहारं एकबिल्वं शिवार्पणम् ॥

த்ரிதலம் த்ரிகுணாகாரம் த்ரிணேத்ரம் சத்ரயாயுஷம் |
த்ரிஜந்மபாபஸம்ஹாரம் ஏகபில்வம் ஶிவார்ப்பணம் ||

தெலுங்கு பாஷைக்கும் தெலுங்கு தேசத்திற்கும் சிவத்திற்கும் அதிக சம்பந்தம் உண்டு. தெலுங்கு தேசத்திற்கு

த்ரிலிங்கம் என்று பெயர், தேசம் ஆனாலும் கிராமம் ஆனாலும் எல்லைக் கல் நடுவது உண்டு. தெலுங்கு தேச எல்லைகளாக மூன்று லிங்கங்கள் இருக்கின்றன. ஸாக்ஷாத் பரமேசுவரனே தெலுங்கு தேசத்திற்கு எல்லைக் கல்லாக இருக்கிறான். தக்ஷிணத்தில் காளஹஸ்தி, மேற்கே ஸ்ரீசைலம், வடக்கே திராக்ஷாராமம். இப்படி மூன்று லிங்கங்கள் மூன்று எல்லைகளாக இருக்கின்றன. அதனால் த்ரிலிங்கம் என்று பெயர் வந்தது. இந்தப் பெயர் தெலுங்கு என்று மாறியது.

தமிழ்நாட்டில் ஈசுவரன் பெருமையை அதிகமாகத் தெரிந்துகொண் டிருக்கிறார்கள். ஆனாலும் இங்கு வைஷ்ணவத்திற்கு மதிப்பு உண்டு. தமிழ்நாட்டில் அக்ஷராப்பியாசம் செய்யும்போது யாராக இருந்தாலும், 'ஓம் நமோ நாராயணாய' என்று அஷ்டாக்ஷரத்தில்தான் ஆரம்பிப்பது வழக்கம். ஆந்திர தேசத்தில் அப்படி இல்லை. தீவிர வைஷ்ணவர்களாக இருந்தாலும் எல்லாச் சாதியினரும், 'ஓம் நம: சிவாய' என்றுதான் ஆரம்பிப்பார்கள். தெலுங்கு தேசத்திற்கு எல்லையாக இருப்பது லிங்கம். தெலுங்கு பாஷையின் ஆரம்பமாக அக்ஷராப்பியாசத்தின் முதலாக இருப்பது பஞ்சாக்ஷரம். இவற்றால் தெலுங்கு தேசத்திற்கும் சிவபெருமானுக்கும் அதிகமான சம்பந்தம் உண்டு என்பது தெரிகிறது.

உலகத்திலுள்ள எல்லாமே சிவன் குடி மக்கள். சிவன் மகா பிதா. நாம் எல்லாரும் யக்ஞம் செய்கிறோம். பிரம்மசாரியாக இருக்கிறவன் சமிதாதானம் செய்கிறான். விவாகத்தில் ஹோமம் இருக்கிறது. எப்படியாவது வாழ்நாளில் யாராக இருந்தாலும் சில சமயங்களில் அக்கினி காரியம் செய்கிறார்கள். அக்கினி காரியம் இல்லாமல் வைதிக மதமே இல்லை. எல்லாவித மாணவர்களும் ஏதாவது ஒரு சமயத்தில் அக்கினி காரியம் செய்யவேண்டி வரும். உலகம் முழுவதுமே வேதம் பரவியிருந்த காலத்தில் எல்லாருமே அக்கினி காரியம் செய்தார்கள். அக்கினி காரியத்தின் கடைசியில் பஸ்ம தாரணம் உண்டு. வைஷ்ணவர்களாக இருந்தால் பாஞ்சராத்திர ஆகமத்திலுங்கூட ஹோமங்களுக்குப் பிறகு ஹோம பஸ்மத்தை எடுத்துத் தரித்துக்கொள்ள வேண்டும். உலகத்தை ஏழு தீவுகளாகப் பிரித்து, ஸப்த த்வீபம் என்று சொல்லியிருக்கிறது. இந்த ஸப்த த்வீபங்களிலும் வேதமே பரவியிருந்த காலத்தில் உலகம் முழுவதும் பஸ்ம தாரணம் செய்துகொண் டிருந்தார்கள். நாம் செய்த அபசாரங்களால் இன்றைக்கு இந்தத் தேசத்தைத் தவிர இதர தேசங்களில் மதாந்தரங்கள் வந்துவிட்டன. அதற்கு நாமே காரணம். நாம் மறுபடியும் நம்முடைய அநுஷ்டானங்களை எல்லாம் சரிவர மேற்கொள்ள வேண்டும். வைதிக மதம் முன்போலவே எல்லா

இடங்களிலும் வரவேண்டும். அதற்கு நம்மிடத்தில் அநுஷ்டானம் வரவேண்டும். பஸ்ம தாரணம் அவசியம்; பஸ்மம் சிவஸ்வரூபம். கலியுகத்தில் எல்லாவிதமான பாவங்களையும் போக்குவதற்கு, பஸ்மதாரணம், ருத்திராக்ஷ தாரணம், சுத்த ஸ்படிக ஸ்வரூப தியானம், பில்வ அர்ச்சனை இவை மிகவும் அவசியம்.

சர்க்கார், மிலிட்டரி, சைன்யம் எல்லாம் வைத்திருக்கிறார்கள். போலீஸ்காரர்களுக்கும் மிலிட்டரியைச் சேர்ந்தவர்களுக்கும் எல்லாம் யூனிபாரம் கொடுத்திருக்கிறார்கள். அந்த யூனிபாரத்தைப் போட்டுக்கொள்ளாவிட்டால் அவர்களிடத்தில் வீரத்தன்மை இருப்பதில்லை. அந்த உடைகளே அவர்களுக்கு ஒரு வீரத்தன்மையைக் கொடுக்கின்றன என்று சொல்கிறார்கள். மேலே இருக்கிற சட்டையினாலே உள்ளே இருக்கிற தன்மை எப்படி வரும்? எப்படியோ அந்த உடைகளே அவர்களுக்கு ஒரு வீரத்தன்மையைக் கொடுக்கின்றன என்கிறார்கள். அதை நம்புகிறோம்.

நமக்கு முக்கியமாக மனசு அடங்கவேண்டும். மனசு கண்டபடி அலையக்கூடாது. பத்து விநாடியாவது ஒன்றைப் பற்றியே நினைத்துக்கொண்டிரு என்றால் அரை செகண்டு நினைக்கிறாற்போல் ஆரம்பித்து எங்கோ நம்மை இழுத்துக் கொண்டு போகிறது. ஏதாவது ஒன்றைச் செய், நினை என்றாலும் செய்கிறதில்லை; முடிகிறதில்லை.

இந்த மனசை எப்படி ஒன்றை நினைக்கச் செய்வது, நிற்கச் செய்வது என்பதைப்பற்றிச் சொல்லும் ஒரு புஸ்தகம் இருக்கிறது. அதற்கு யோக சாஸ்திரம் என்று பெயர். யோகம் என்றால் என்ன தெரியுமா? மனசு இழுத்துக்கொண்டு போகிறபடி நீ போகக்கூடாது. நீ மனசை இழுத்து அடக்கி நிறுத்துவதுதான் யோகம். மனசு உன் இஷ்டப்படி உனக்கு அடங்கி நடக்க வேண்டும்.

योगश्चित्तवृत्तिनिरोधः ।

யோகः சித்தவ்ருத்திநிரோதः ।

'சித்தத்தைக் கொஞ்சம் நிறுத்தவேணும். மனத்தை நிறுத்துதல்தான் யோகம்' என்று அந்தப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறது. எப்படி நிறுத்துவது என்பதற்குக் கொஞ்சங் கொஞ்சமாக அது வழி சொல்லிக்கொண்டு போகிறது.

ईश्वरप्रणिधानाद्वा ।

ஈச்வரப்ரணிதாநாத்வா ।

முதலில் ஈசுவரனை நினை. 'பரமேசுவரனை யார் பார்த்தார்கள்? எனக்குத் தெரியாது. உனக்கும் அவரைத்

தெரியாதே. தெரியாத ஒன்றை எப்படி நினைக்கிறது? பரமேசுவரன் எப்படி இருப்பார் என்பதைப் பார்த்திருந்தால் அல்லவா அவரை நினைக்கலாம்? அவர் எப்படி இருப்பார் என்றாவது தெரியுமா?' என்ற கேள்வி உண்டாகிறது.

ஒருவன் நூறு குடும்பங்களின் சுகதுக்கங்களை எல்லாம் பார்த்து, அவர்களுடைய யோகக்ஷேமத்திற்கு அன்ன வஸ்திரம் எல்லாம் கொடுத்து வேலை கொடுத்து ரட்சித்துக்கொண்டு வருகிறான் என்று வைத்துக்கொள்வோம். தனக்கு ஆகவேண்டிய காரியம் ஒன்றும் இல்லாமல் உண்மையிலேயே ஒரு பொய்யும் சொல்லாமல் வெறும் கருணைப் பிரவாகத்தினாலே அப்படி நூறு குடும்பங்களை ரக்ஷித்துக்கொண்டு வருகிறான் என்றால் அவன் முகம் எப்படி இருக்கும்? அவன் முகத்தைப் பார்த்தே பரமேசுவரன் எப்படி இருப்பான் என்று தெரிந்து கொள்ளலாமே!

நாம் எத்தனையோ அபசாரம் பண்ணிக்கொண்டிருந்தாலும் நமக்கெல்லாம் அநுக்கிரகம் பண்ணிக்கொண்டு பரமேசுவரன் சகல புவனங்களையும் ரட்சித்துக்கொண்டிருக்கிறான். நாம் செய்கிற அக்கிரமத்தைப் பார்த்தோமானால் நமக்கு ஒரு வேளை அன்னம் கிடைக்கலாமா? அப்படி இருக்கிறபோது நம்மைப் போன்ற சகல ஜீவராசிகளுக்கும் ஒவ்வொரு வேளையும் அன்னம் கிடைத்துக்கொண்டிருக்கும்படியாக நம்மிடமிருந்து ஒரு விதப் பிரயோஜனத்தையும் எதிர்பார்க்காமல் ஜீவராசிகளுக்கு எல்லாம் நல்லதே செய்துகொண்டிருக்கிறான். அவன் முகத்தில் கருணையைத் தவிர என்ன பொலியும்? அவன் குணங்களை நினைத்துக்கொள்ளுங்கள். ஒருவிதமான அவகுணமும் இல்லாத ஒரு ரூபம் இருந்தால் அந்தக் கருணை எப்படி இருக்கும்? ஆனந்தம் எப்படி இருக்கும்? அந்த அழகுதான் அப்பா அழகு! அந்தக் கருணையைத் தவிர வேறு எது அழகு? இரண்டு நாள் வியாதியில் படுத்தால் ஜ்வரம் இரண்டு நாள் வந்தால் இந்தச் சரீர அழகு எல்லாம் விகாரமாக ஆகிவிடுகிறது. இருதயத்தில் உள்ள தயை வெளியில் தெரிகிற அழகுதான் அழகு. அது சாசுவதமான அழகு. அவனுக்குப் பிறப்பு இறப்பு என்பது இல்லை. அவனுடைய ரூபம் எப்படி இருக்கும்? இந்த உலகத்திலே சாதாரணமாகச் சத்தியத்தையே பேசிக்கொண்டு, பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் ஒரு நூறு குடும்பங்களை ரட்சித்துக்கொண்டிருக்கிறானே, அவன் முகம் எப்படி இருக்கிறது என்று பார். அவனைப்போல் எவ்வளவோ மேலாகப் பரமேசுவரனுடைய முகம் இருப்பதாக நினைத்துக்கொள். இப்படிச் சொல்கிறது சாஸ்திரம்.

அதுவும் முடியவில்லை. 'இந்த உலகத்திலே நூறு குடும்பங்களை வைத்து ரக்ஷிக்கிறவனை நான் எங்கே போய்க் கண்டுபிடிப்பேன்?' என்றால், 'சரி. உனக்கு எத்தனை பேர்களையோ தெரிந்திருக்குமே, அவர்களுள் கூடுமானவரையில் ஆசை இல்லாதவன், கோபம் இல்லாதவன், கெட்ட குணம் இல்லாதவன் இப்படியாக நல்ல குணங்களை உடைய ஒருவனை நினைத்துக்கொள்' என்கிறது.

वीतरागविषयं वा चित्तम् ।

வீதராகவிஷயம் வா சித்தம் |

ஆசையோ காமமோ கோபமோ இல்லாத ஒருவனை இந்த உலகத்தில் எப்படிக் கண்டுபிடிப்பது? சரி. இந்த உத்தமமான குணங்களை எல்லாம் வைத்துத்தானே இந்தக் குணங்களை எல்லாம் உடையவன் எப்படி இருப்பான் என்பதாக ரவிவர்மா எழுதியிருக்கிறான். அவனைப்போல் ஓர் உருவத்தை உன் மனத்தில் எழுதிக்கொள்ள முடியவில்லை என்றால் சரி. கடைசிப் பட்சமாகவாவது உனக்கு எதை நினைத்துக்கொள்வது சௌகரியமோ அதை நினைத்துக்கொள் அப்பா.

यथाभिमतध्यानाद्वा ।

யதாபிமதத்யாநாத் வா |

இந்தக் கடிகாரம் மாதிரி நினைத்துக்கொள், அதுவும் முடியவில்லை என்கிறாயா?

அப்புறம் என்ன பண்ணவேண்டும்?

விதிப்படி மூச்சை வெளியே விடுவதனாலும் உள்ளே அடக்குவதனாலும் சித்தம் அமைதி பெறும். மூச்சைச் சரியாக அடக்கி அடக்கி விடு. எதற்காக மூச்சை அடக்கவேண்டும்? மூச்சை அடக்கினால் மனசின் அசைவு இருக்காது.

மூச்சுக்கும் மனசுக்கும் என்ன சம்பந்தம்? வெளியில் இருக்கிற காரியம் எப்படி மனசைப் பாதிக்கும்?

சம்பந்தம் உண்டு.

அது எப்படி?

'சுவாசம் கொஞ்சநேரம் நிற்க அப்பியாசம் பண்ணு. முதலில் லேசான அப்பியாசத்தையாவது பண்ணு. பிறகு குரு உபதேசம் பெற்று மந்திரத்தோடு சுவாசத்தை அடக்க அப்பியாசம் பண்ணு. சுவாசத்தை அடக்கினால் மனசு அடங்கும் என்று சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. பிராணயாமம் அதற்காகத்தான் பண்ணவேண்டும் என்று சொல்கிறார்கள்.'

'நான் பிராணயாமம் பண்ணுகிறேன். சுவாசம் நிற்கிறபோது மனசு நிற்கும் என்று எப்படித் தெரிந்துகொள்ளலாம்?'

எப்படித் தெரிந்துகொள்வதா? இப்போது பார்க்கிறோமே, லாட்டரிச் சீட்டு. பரிசு நமக்குக் கிடைக்கவேண்டும் என்பதற்கு ஒன்றும் முயற்சி செய்யவில்லை. போட்டியில் கலந்துகொள்ளக் கூப்பன் அனுப்பவில்லை. யாரோ ஒருவன் இவனிடம் கையெழுத்து வாங்கிக்கொண்டு போய் இவன் பேரில் போட்டிருக்கிறான். திடீரென்று ஒரு நாள் ஒரு செய்தி வருகிறது. இருபதினாயிரம் ரூபாய் இவனுக்குப் பரிசு விழுந்திருக்கிறது என்ற செய்தி வருகிறது. அதைக் கேட்டவுடன் இவன், 'ஹா!' என்று அப்படியே வாயைத் திறந்துகொண்டு ஒரு கணம் உட்கார்ந்து விடுகிறான். அப்போது சுவாசம் போய்வரவில்லை; நின்று விட்டது. மனசு இல்லாமல் போய்விட்டது. இரண்டு மூன்று விநாடிகளுக்கு அப்புறந்தான் ஒரேயடியாக, 'அப்பாடி!' என்று சுவாசம் வெளிப்படுகிறது. அளவுக்கு மீறித் துக்கம் வந்தாலும் அப்படித்தான் சுவாசம் நின்று போகிறது. மனசு நின்றுவிடுகிறது; லயித்துப் போகிறது. எதிர்பாராத ஆனந்தம் வந்துவிட்டால் வரப்போகிறதை நினைத்தால் மனசு ஹா என்று நிற்கிறது.

மனசு அடங்கினால் சுவாசம் அடங்குகிறது. வெளிக் காரியங்களுக்கும் உள்ளுக்கும் சம்பந்தம் இருக்கிறது. அதே போல உள் உணர்ச்சிக்கு ஏற்றபடி வெளிக்காரியங்கள் நடப்பதைப் பார்க்கிறோம்.

உள்ளத்திலே துக்க உணர்ச்சியோ பக்தி உணர்ச்சியோ அதிகமாகிவிட்டால் கண்ணிலே ஜலஞ்ஜலமாக வருகிறது. எப்படி வருகிறது? மனசுக்கும் கண்ணுக்கும் சம்பந்தம் இருப்பதனால் தான் வருகிறது. கோபம் வந்துவிடுகிறது. உதடு துடிக்கிறது. மனசுக்கும் உதட்டுக்கும் சம்பந்தம் இருக்கிறது. கோபம் வந்தால் கண் சிவக்கிறது.

இப்படி உள்ளே ஏற்படுகிற உணர்ச்சிக்கு ஏற்ப வெளியே சில காரியங்கள் நடக்கின்றன. மனசில் துக்கமோ ஆனந்தமோ வந்தவுடனே சுவாசம் நின்றுபோகிறது; மனசு நின்று போகிறது. மனோபாவத்திற்கும் வாக்குக்கும் சம்பந்தம் இருக்கிறது. இவை ஒன்றுக்கு ஒன்று சம்பந்தம் உடையவை. அதனால் பெரியவர்கள் தங்களுடைய அநுபவத்தின் மூலமே வெளியே சில காரியங்களைச் செய்து உள்ளே அதற்கு ஏற்ற விளைவுகளை உண்டாக்கிக்கொள்ள லாம் என்று எழுதி வைத்திருக்கிறார்கள். மிலிட்டரிக்காரன், "யூனிபாரம் போட்டால் வீரத்தன்மை வருகிறது' என்று அதனால் தான் சொல்கிறான். அப்படித்தான் பக்தி வரவேண்டும், சாந்தம் வர வேண்டும், சத்தியம் வரவேண்டும் என்றால் வெளியே சில சின்னங்களைப் போட்டுக்கொள்ள வேண்டும் என்று நம்முடைய பெரியவர்கள் சொன்னார்கள்.

स्नानाचमनयज्ञोपवीतादिकया क्रियया देही संस्क्रियमाणः
ஸ்நாநாசமநயக்ஞோபவீதாதிகயா
க்ரியயா தேஹீ ஸம்ஸ்க்ரியமாண :

என்று ஆசாரியரவர்கள் சொல்கிறார். வெளியில் நாம் செய்கிற சில சம்ஸ்காரங்களினாலே உள்ளே சில நன்மைகள் ஏற்படுகின்றன. இவை எல்லாம் வெளிவேஷம் என்று நினைத்தால் வெறும் வேஷமாகவே போய்விடுகின்றன. வேஷம் போட்டு ஆகவேண்டியது இல்லை. ஆத்மார்த்தமாக, ஜீவனைப் பரிசுத்தம் செய்து கொள்வதற்காக, இந்தச் சின்னங்களை அணிகிறேன் என்று நினைத்தால் சத்தியமாக உள்ளே பரிசுத்தம் ஏற்படுகிறது. புறத்திலே தரிக்கும் சின்னங்கள் ஆத்மாவுக்கு உபயோகப்படுகின்றன.

நான் மடாதிபதி; உங்களிடமிருந்து பணம் வாங்க வேண்டும் என்பதற்காக இந்த வேஷமான விபூதி, ருத்திராக்ஷம் எல்லாம் போடுகிறேன். போடாவிட்டால் நீங்கள் பணம் கொடுக்கமாட்டீர்கள். இதைப் போட்டுத்தான் உங்களை ஏமாற்றுகிறேன் என்றால், உங்களுக்கு இந்த வேஷம் போட்டு எங்கிருந்து பணம் வரப்போகிறது? உங்களுக்கு வேறு எந்த வழியிலிருந்தோ பணம் வருகிறது. நீங்கள் இந்தச் சின்னங்களைத் தரித்துக்கொள்வது உங்களுடைய ஆத்மார்த்தமாகத்தான். வேதம், மந்திரம், சாஸ்திரம், பிராணாயாமம், எல்லாம் பரிசுத்தி கொடுக்கின்றன. மனசை உள்ளே பரிசுத்தம் செய்து அடக்குகின்றன. பிறருக்காக இவற்றைச் செய்ய வேண்டாம். 'எனக்காக, என்னுடைய ஆத்மப்பிரயோஜனத்திற்காக இதைச் செய்கிறேன்' என்ற நினைவு வேண்டும். இதனாலே மோக்ஷத்தை அடையலாம்.

சகல வஸ்துக்களும் அழிந்தாலும் கடைசியில் தான் ஒன்று மட்டும் சத்தியமாக இருக்கிற பஸ்மத்தை நெற்றியிலும் ஸ்வபாவமாகத் துவாரங்களுடனும் முகங்களுடனும் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிற ருத்திராக்ஷத்தைக் கழுத்திலும் சாக்ஷாத் மகாலக்ஷ்மியின் வாசஸ்தலமாகிய வில்வத்தைச் சிரஸிலும் வேதத்தின் மத்திய மணிக்கு - நடுநாயக மணிக்கு-ஒப்பாக விளங்குகிற, 'சிவ' என்னும் இரண்டு அக்ஷரத்தையும் நாக்கிலும் சுத்த ஸ்படிகப் பிரகாச மகாலிங்கத்தை உள்ளத்திலும் தரித்துக்கொண்டு ஜன்ம ஸாபல்யத்தை அடையவேண்டும். நாம் எதை நினைக்கிறோமோ அதுமயமாக ஆகிவிடுகிறோம். ஓர் அழகியை நினைத்தால் காமம் வரும். துஷ்டனை நினைத்தால் கோபம் வரும். சுத்த ஸ்படிகமாக விளங்குகிற பரமேசுவரனை நினைத்தால் நம் மனசு சுத்த ஸ்படிகமாக ஆகும். அவன்தான் எப்போதும் ஆனந்த ஸ்வரூபியாக இருக்கிறான். ஆகவே விபூதி ருத்திராக்ஷ தாரணம், பஞ்சாக்ஷர ஜபம், உள்ளே சுத்த ஸ்படிக சங்காச ரூபியாகிய பரமேசுவரனுடைய தியானம், பில்வார்ச்சனை இவற்றை எப்போதும் நாம் செய்துகொண்டே இருக்கவேண்டும்.

# 11

# வேதவியாசரின் பெருமை

வியாசருக்கு வேதவியாசர் என்று பெயர். வேதங்கள் நிறைய இருந்திருக்கின்றன. கலியுகம் ஆரம்பிப்பதற்கு முன்னுல் துவாபர யுக முடிவில் வியாச பாவகன் வேதங்களை நான்காகப் பிரித்தார். 'இனி வரப் போகிற யுகத்தில் ஜனங்களுடைய வயசும் குறைச்சல்; ஞாபகசக்தியும் குறைச்சல்; ஆசாரம் எல்லாம் குறைச்சல்; பெரிய யோகசக்திகள் எல்லாம் குறைந்து போகப் போகின்றன. ஒரேயடியாக வேதம் அழிந்துபோகாமல் இருக்க ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும்' என்று அவர் நினைத்தார்.

நல்ல பகல் இருந்தால் ராத்திரி வரும்; மழைநாள் என்ருல் பின்னுல் நல்ல கோடை வரும். அப்படி வேதம் மிகவும் நன்ருக ஒருகாலந்தில் இருந்தால் கொஞ்சம் குறைவாக மங்கியிருக்கும் காலமும் உண்டு. அந்தச் சமயத்தில் வேதத்தை ரக்ஷிக்க வேண்டும்; என்ன செய்வது?

கிராமாந்தரங்களில் முன்னிருட்டு நாளில், வானம் இருண்டு இருக்கிற ராத்திரி வேளையில் திருட்டு இருக்கும். அப்போது பத்துப் பேர் சேர்ந்து ஊரெல்லாம் ரோந்து சுற்றிஞல் திருட்டுக் கொஞ்சமாவது குறையாதா? அப்படி, வரப்போகிற கலியுகத்தில் வேதம் முழுவதும் அழிந்து போகாமல் இருக்க வேண்டுமாஞல் முழுக்க இல்லாவிட்டாலும் ஒரு நான்கு பேர் களாவது வேதத்தின் ஒவ்வொரு பாகத்தைக் காப்பாற்றி யாகவேண்டும் என்பதற்காக வியாச மகரிஷி வேதத்தை ரிக், யஜுஸ், ஸாம, அதர்வணம் என்று நான்காகப் பிரித்தார். காதிஞலே கேட்டு, வாக்கிஞலே ஸ்வரத்தோடு அத்தியயனம் பண்ணி லோகத்தில் வேதம் பரம்பரை பரம்பரையாக வந்து கொண்டிருக்க வேண்டுமென்று ஒவ்வொரு வேதத்தை ஒவ்வொரு ரிஷிக்கு உபதேசம் செய்தார். ஸுமந்து, பைலர், ஜைமினி, வைசம்பாயனர் என்ற நான்கு ரிஷிகளிடத்தில் நான்கு வேதங்களையும் ஒப்படைத்தார். ஜைமினியிடத்தில் ஸாம வேதத்தை ஒப்படைத்தார்; வைசம்பாயனரிடத்தில்

யஜுர்வேதத்தையும் ஸுமந்துவினிடம் ரிக் வேதத்தையும் பைலரிடம் அதர்வண வேதத்தையும் ஒப்படைத்தார்,

வேதம் முழுவதும் மந்திரங்கள் நிரம்பி யிருக்கின்றன. மிகவும் நியமமாகவும் ஆசாரமாகவும் இருந்து ஜபம் பண்ணிக் கொண்டு வந்தால் அந்த மந்திரங்களின் பிரவிருத்தியினால் உலகத்திற்கு ஒரு சிரேயஸ் ஏற்படும். அதற்கு மிகவும் நியமமாக இருக்கவேண்டும்; ஆசாரமாக இருக்க வேண்டும். எந்த எந்தக் காலத்தில் வேதாத்தியயனம் பண்ணவேண்டும் என்று வரையறை இருக்கிறது. புஸ்தகத்தைப் பார்த்துப் படிக்காமல் இருக்க வேண்டும். வேதம் சுருதி; அதைக் காதினாலே கேட்டு அப்படியே வாக்கில் தாரணம் பண்ணவேண்டும்.

அதற்கு அங்கமான சாஸ்திரங்கள் சில இருக்கின்றன. அந்த அங்கங்களோடுகூட வேதத்தை அத்தியயனம் பண்ண வேண்டும். இப்படிப்பட்ட நியமங்களோடு வேதத்தை ரக்ஷிப்பதற்காக அதே காரியமாக இருக்கவேண்டும். உலகத்தில் இவர்கள் செய்ய வேண்டிய காரியம் இதுதான். வேதத்தைச் சம்ரக்ஷித்துக்கொண் டிருந்தால் லோகம் முழுக்க க்ஷேமமாக இருக்கும், எல்லாராலும் அதைச் சம்ரக்ஷிக்க முடியவில்லை. ரிஷிகளும் அவர்கள் வம்சத்தில் வருகிறவர்களுமாவது இதே காரியமாக எப்போதும் இருக்க வேண்டும் என்பதற்காக வியாச மகரிஷி வேதத்தை நான்காகப் பிரித்து நான்கு ரிஷிகளுக்கு உபதேசம் செய்தார்.

வேதத்திற்கே ரிஷி என்று ஒரு பெயர் உண்டு. ஆகையால் அந்த மந்திரத்தை யார் பார்த்தவர்களோ அவர்களுக்கு ரிஷி என்று பெயர்.

ऋषयो मन्त्रद्रष्टारः

ரிஷயோ மந்த்ரத்ரஷ்டார:

ரிஷிகள் மந்திரத்தைப் பார்ப்பவர்கள். அப்படி என்றால் புஸ்தகத்தில் இருக்கிறதைக் கண்ணால் பார்க்கிறது என்று அர்த்தம் அல்ல.

ரேடியோ இருக்கிறது. ஒலி அலைகளை ரிஸீவர் வாங்கிக் கொண்டு அதைப் பெருக்கிவிடுகிறது. 'டேப் ரெகார்டு' வைக்கிறார்கள். அது நான் பேசுகிற சப்தத்தை அப்படியே கிரகித்துக் கொண்டு எப்போது வேண்டுமானாலும் எந்தக் காலத்தில் வேண்டுமானாலும் அப்படியே திருப்பி அந்தச் சப்த அலைகளைக் கொடுக்கிறது. நான் பேசினால்தான் இந்த, 'டேப் ரெகார்டு' சப்தத்தைக் கிரகித்துக்கொள்ளும்.

எத்தனையோ அநாதியான சப்தங்கள் ஒலி ரூபமாக ஆகாசம் முழுவதும் வியாபித்திருக்கின்றன. யோக அப்பி

யாகங்கள் செய்து மந்திர சக்திகளை, அநாதியான சப்தங்களை ரிஷிகள் கிரகித்துக்கொள்கிறார்கள். அப்படிக் கிரகித்துக் கொள்ளக்கூடியவர்களைத்தான் த்ரஷ்டாக்கள் என்கிறோம். அர்ஜுனன், மகாவிஷ்ணுவினுடைய விசுவ ரூபத்தைத் தரிசித்தது போலவே இவர்கள் யோகசக்தியினால் அநாதியான சப்தரூபமான மந்திரங்களைக் கிரகித்தார்கள்.

இதைப்பற்றித் தனியே சொல்லும் யோக சாஸ்திரம் இருக்கிறது. அந்தச் சாஸ்திரத்திலே, 'திவ்யஶ்ரோத்ரம்' என்று சொல்லியிருக்கிறது. இந்தக் கண்ணால் கொஞ்ச தூரந்தான் பார்க்கலாம். புறக்கண்ணால் பார்க்க முடியாததையெல்லாம் அகக்கண்ணால் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் பார்த்து விடலாம்.

दिव्यं ददामि ते चक्षुः

திவ்யம் ததாமி தே சக்ஷு:

என்கிறார் கீதையில் பகவான். அளவு கடந்து இருப்பதைப் பார்க்கும் சக்தி உடையது இந்த அகக்கண்.

அப்படியே காதால் வெளியில் ஏற்படும் சப்தத்தைத்தான் கேட்கலாம். ஆனால் யோகாப்பியாசம் பண்ணித் தியானம் பண்ணிப் பெற்ற சக்தியினால் ஆகாசத்தில் இருக்கும்படியான அநாதியான சப்தங்களையெல்லாம் கிரகிக்கலாம் என்றும் சொல்லியிருக்கிறது. அப்படிச் சப்தரூபமான மந்திரங்களைக் கிரகிக்கக் கூடியவர்களுக்குத்தான் - பார்க்கக் கூடியவர்களுக்குத் தான்-ரிஷிகள் என்று பெயர். அவர்களால் காணப்பட்ட மந்திரங்களுக்கும் ரிஷிகள் என்று பெயர். அதீந்திரியமானவைகளைத் தெரிந்துகொள்ளும் அறிவிற்கு வேதம் என்று பெயர்.

இந்த வேதத்தை அநாதிகாலம் முதற்கொண்டு புஸ்தகம் இல்லாமலேயே ரிஷி பரம்பரையினர் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். நாம், 'அபிவாதயே' சொல்லும்போது, இன்ன ரிஷி பரம்பரை, இன்ன கோத்திரம், இன்ன ஸூத்ரம் என்று சொல்லுகிறோம். அதிலிருந்து நாம் இன்ன ரிஷியின் பரம்பரை என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

ஒரு மருந்தை வாங்கி உபயோகிக்காமல் கொஞ்சநாள் வைத்திருந்தால் அதன் வீரிய சக்தி குறைந்துவிடும். அப்படியே வேதத்தை அடிக்கடி அப்பியாசம் பண்ணாமல் இருந்தால் அந்த மந்திரங்களின் வீரிய சக்தி குறைந்துவிடுகிறது. அந்த வீரிய சக்தியைத் திருப்பி உண்டுபண்ணுவதற்குப் பூஜை பண்ணி ஹோமம் பண்ணிப் பல ஆவிருத்திகள் உச்சாரணம் பண்ண வேண்டும். தவறுகளுக்கு எல்லாம் பிராயச்சித்தமாக இருப்பது காயத்ரி ஜபம்.

ரிஷி பரம்பரையில் வந்திருப்பவர்களுடைய முக்கியமான காரியம், வேதத்தை ரக்ஷிக்க வேண்டியதுதான்; சம்பாதிப்பது, சாப்பிடுவது எல்லாம் அடுத்தபடி ஏற்பட்ட காரியங்கள்.

அபாரமான வேதத்தை-வியாச மகரிஷி-கலியுகத்தில் அழிந்துபோகாமல் இருக்க வேண்டும் என்பதற்காக நான்கு வேதங்களாகப் பிரித்து, தம்முடைய சிஷ்யர்களில் நான்கு பேர்களுக்கு உபதேசம் செய்தார். ஒவ்வொரு சிஷ்ய பரம்பரையிலாவது ஒவ்வொன்றை அத்தியயனம் பண்ணிக்கொண்டு வரட்டும் என்று அப்படிச் செய்தார்.

மிகவும் நியமம், ஆசாரம் இவற்றோடு காப்பாற்றப்பட வேண்டிய வேதத்தை நான்கு ரிஷிகளுக்குச் சொல்லிவிட்டு, எல்லாருக்கும் உபயோகப்படும்படியாக வேதத்தின் தாத்பரியங்களைப் பதினெட்டுப் புராணங்களாகவும் மகாபாரதமாகவும் பண்ணி ஸூதருக்கு உபதேசம் பண்ணினார். அவர் ஸூத வம்சத்தில் பிறந்தவர். ஸூத புராணிகர் என்றே அவருக்குப் பெயர்.

வர்ணம் என்பதை ஜாதி என்று நாம் நினைக்கிறோம். அப்படி இல்லை. வர்ணங்கள் நான்கு; ஜாதிகள் மனுஸ்மிருதியில் 20-க்கு மேலும் ஸூதஸம்ஹிதையில் 50-க்கு மேலும் சொல்லப்பட்டிருக்கின்றன. யஜுர்வேதத்தில் ஏழாவது காண்டத்தில் இதுபோல் அநேக ஜாதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

சில சமயங்களில் ஒரு வர்ணத்தார் இன்னொரு வர்ணத்தாரை விவாகம் செய்துகொள்ள நேர்ந்ததுண்டு. அவர்களுக்குப் பிறக்கும் குழந்தையை எந்த வர்ணம் என்று சொல்வது; ஸ்திரீ, வைசிய வர்ணத்தைச் சேர்ந்தவளாகவும் புருஷன் க்ஷத்திரிய வர்ணத்தைச் சேர்ந்தவனாகவும் அல்லது ஸ்திரீ க்ஷத்திரிய வர்ணத்தைச் சேர்ந்தவளாகவும் புருஷன் பிராம்மண வர்ணத்தைச் சேர்ந்தவனாகவும் இருந்தால் அத்தகைய ஸந்ததிகளின் ஜாதிகளுக்கெல்லாம் பொதுவாக அநுலோமம் என்று பெயர். தனித்தனியாக வேறு பெயர்களும் உண்டு. அப்படியன்றி ஸ்திரீ க்ஷத்திரிய வர்ணத்தைச் சேர்ந்தவளாகவும் புருஷன் வைசிய வர்ணத்தைச் சேர்ந்தவனாகவும் அல்லது ஸ்திரீ பிராம்மண வர்ணத்தைச் சேர்ந்தவளாகவும் புருஷன் க்ஷத்திரிய வர்ணத்தைச் சேர்ந்தவனாகவும் இருந்தால் அத்தகைய ஸந்ததிகளின் ஜாதிகளுக்குப் பொதுவாகப் ப்ரதிலோமம் என்று பெயர்.

இத்தகைய வம்சத்தில் வந்தவர் ஸூதர்; அவருடைய சக்தியை, ஞானத்தைப் பார்த்து அவருக்கு வியாசர் இந்த அதிகாரத்தைக் கொடுத்தார்; பதினெட்டுப் புராணங்களுக்கும்

அதிகாரி அவரே. அந்தப் புராணங்களை அவருக்கு உபதேசம் செய்து, அவரையே ஸகல வர்ணங்களுக்கும் ஸகல ஜாதிகளுக்கும் உபதேசிக்கும்படி அநுக்கிரகம் செய்தவர் வியாசர்.

இவ்வளவும் பண்ணிவிட்டு, அதற்கப்புறம் இவை எல்லாவற்றிலும் உள்ளடங்கியிருக்கும் தத்துவங்களைச் சுருக்கமாக ஸத்யமான பிரஹ்ம விஷயமாக ஒரு நூல் எழுதினார். அதற்குப் பிரஹ்ம ஸூத்திரம் என்று பெயர். பிக்ஷுஸூத்ரம் என்றும் பெயர் உண்டு. வியாசருக்குப் பாதராயணர் என்றும் ஒரு பெயர் வழங்குகிறது.

வியாசருடைய காலம், துவாபர யுகம் முடியும் சமயம்; கலியுகம் ஆரம்பமாவதற்கு முன் அவதாரம் பண்ணினவர் அவர் என்று ஒருவாறு ஊகிக்கலாம். ஆஞ்சநேயர், வியாசர், அசுவத்தாமா, பலி போன்றவர்கள் எப்பொழும் இருக்கிறார்கள்.

வியாசாசாரியர் பண்ணின பிரஹ்மஸூத்ரத்திற்கு அநேக விதமான பாஷ்யங்களை அப்புறம் பல பேர் எழுதியிருக்கிறார்கள். அந்த மாதிரியாக எழுதியுள்ள பாஷ்யாசாரியர்களுக்குள் நம் ஆதி ஆசாரியர் அவர்களாகிய பகவத்பாதரவர்களும் ஒருவர். அவருடைய பாஷ்யம் இப்போது கிடைப்பவற்றுள் பழைமையானதென்று தெரிகிறது. அவருடைய பாஷ்யத்திற்கும் முந்தியே சில பாஷ்யங்கள் இருந்திருக்க வேண்டும் என்று அவருடைய பாஷ்யத்தைப் பார்த்தால் தெரிகிறது. யார் யார் அவருக்கு முன்பு பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள் என்று திட்டமாகப் பேர் தெரியாவிட்டாலும் ஆசாரியாரவர்கள் தம்முடைய பாஷ்யத்தில், 'இதற்கு இப்படி அர்த்தம் பண்ணுகிறார்கள். இந்த இந்த அபிப்பிராயங்களை எடுத்துக் கொள்ளலாம். இது தப்பு. இப்படிச் சொல்வதுதான் மேல்' என்பதாக அங்கங்கே குறிப்பிட்டிருப்பதைப் பார்க்கும்போது அதற்கு முந்தியும் சில பாஷ்யங்கள் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

அதற்கு அப்புறம் வைஷ்ணவபரமாக ராமாநுஜாசாரியர், மத்துவாசாரியர் இரண்டு பேரும் பிரஹ்மஸூத்திரத்திற்குப் பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். ராமாநுஜாசாரியர் ஸ்ரீரங்கத்தில் இருந்தவர். மத்துவாசாரியருக்குத் தென்கன்னடம் பக்கம். கூர்ஜரத்துக்கு அருகில் இருந்த வல்லபாசாரியர் என்பவர் ஒரு பாஷ்யம் எழுதியிருக்கிறார். கூர்ஜரத்திற்குப் பக்கத்தில் அநேக ஸேட்டுகளுக்கு-வியாபாரிகளுக்கு-அவர் குரு. அவர் தெலுங்கு தேசத்திலிருந்துதான் அந்தத் தேசத்திற்குப் போயிருக்கிறார். அவர்களுடைய மடம் ஒன்றுகூடச் சென்னையில் சாவுக்கார்ப் பேட்டையில் இருக்கிறது.

இப்படி அநேகம் பேர் பிரஹ்மஸூத்ரத்திற்குப் பாஷ்யம் எழுதியிருந்தாலும் தக்ஷிண தேசத்தில் பிரதானமாகச் சங்கர பாஷ்யம், ராமாநுஜ பாஷ்யம், மத்துவாசாரிய பாஷ்யம் என்பவை மூன்றுமே விசேஷமாக இருக்கின்றன. சிஷ்யர்களுக்குச் சொல்லிக்கொடுத்து, வாக்கியார்த்தம் சொல்லச் சொல்லி, பரீக்ஷை நடத்துவது எல்லாம் இந்த மூன்று பாஷ்யங்களில்தான்.

சைவ சம்பிரதாயப்படி ஸ்ரீகண்டாசாரியர் ஒரு பாஷ்யம் எழுதியிருக்கிறார். அதற்கு அப்பையை தீக்ஷிதர் விஸ்தாரமாக ஒரு வியாக்கியானம் எழுதியிருக்கிறார். அதைப் படிப்பதற்காக ஐந்நூறு மாணவர்களுக்கு அக்காலத்தரசர் பூமிதானம் செய்திருக்கிறார். இப்போதும் ஆரணிக்குப் பக்கத்தில் உள்ள கோயிலில் அதைப்பற்றின கல்வெட்டு இருக்கிறது. சிவன் கோயிலில் பூஜை புரியும் சிவாசாரியர்களில் சில பேர் அதைப் படித்திருக்கிறார்கள். அதற்கு அதிகப் பிரசாரம் இல்லை. பொதுவாக முன்னே சொன்ன அந்த மூன்று பாஷ்யங்களைத்தான் அதிகமான பேர் படிக்கிறார்கள்.

இவர்கள் எல்லோரும் என்ன ஸூத்ரம், என்ன வேதம் உடையவர்கள் என்று பார்த்தால் ரிக், யஜுஸ், ஸாம வேதங்களையே சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். நான்கு வேதங்களுள் அதர்வண வேதம் நம் தேசத்தில் முந்நூறு, நானூறு வருஷங்களுக்கு முன்பு வரையில் இருந்திருக்கிறது என்பதற்குக் கல்வெட்டுக்கள் சாட்சியாக இருக்கின்றன.

வடக்கே ஒரிஸாவில் இருக்கும் பிராமணர்களுள் பதினெட்டு ஜாதிகள் இருக்கின்றன. அவர்களுள் ஆதர்வணிகர் என்பது ஒரு ஜாதி; கோசலம், குஜராத் தேசங்களிலும் அதர்வண வேதத்தை அத்தியயனம் பண்ணினவர்கள் நான்கைந்து பேர் இருப்பார்கள். திண்டிவனத்திற்குப் பக்கத்தில் பேரணி என்ற ஊர், எண்ணாயிரம் என்ற ஊர், காஞ்சீபுரத்துக்குப் பக்கத்தில் வாலாஜாபாத் என்ற ஊர் இங்கெல்லாம் நிறையக் கல்வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. சோழநாட்டுக் கல்வெட்டு, தொண்டை நாட்டுக் கல்வெட்டு இவற்றிலெல்லாம் பார்த்தால் நம் தேசத்திலும் பழைய நாளில் அதர்வண வேதத்தை அத்தியயனம் பண்ணினவர்கள் இருந்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

ஸூத்திரங்கள் சில இருக்கின்றன. ஆபஸ்தம்ப ஸூத்ரம், போதாயன ஸூத்ரம், ஆச்வலாயன ஸூத்ரம் என்று நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். இவ்வளவுக்கும் மூலமானவர் வியாசர். ஆசாரியரவர்கள் பாஷ்யம், ராமாநுஜர் பாஷ்யம், மத்துவாசாரியர் பாஷ்யம், ஸ்ரீகண்டபாஷ்யம், வல்லபாசார்யர் பாஷ்யம் எல்லாவற்றுக்கும் மூலம் வியாசாசாரியருடைய பிரஹ்ம ஸூத்ரந்தான். எந்த வேதத்தைச் சேர்ந்தவர்களாக இருந்

தாலும் அந்த அந்த வேதத்தை நமக்கு உபதேசம் பண்ணின ரிஷிகளுக்கும் உபதேசம் பண்ணினவர் வியாசர்தாம்.

மேலே பல கிளைகள் இருக்கலாம். கிளைகளைப் பார்த்து, 'இது ஒரு திக்கு, அது ஒரு திக்கு, இரண்டுக்கும் என்ன சம்பந்தம்?' என்பார்களா? கிளைகளோடு கீழே இறங்கினால் அவற்றுக்கெல்லாம் மூலமான அடிமரம் - வேர் - ஒன்றுதான் என்பது தெரியும். அப்படி நம்முடைய வேதங்களுக்கு, ஸூத்ரங் களுக்கு, புராணங்களுக்கு எல்லாம் மூலமான வேர் வியாசர்தாம். அவருடைய படத்தை வைத்துக்கொண்டாவது வேதத்தை மறக்காமல் நாம் எல்லாரும் நம்முடைய கடமையைச் செய்வதில் ஒன்றுபடவேண்டும்.

வியாச மகரிஷியுடைய படத்தை ஒருவர், தம் வீட்டில் வைத்துப் பூஜை பண்ணிக்கொண்டிருந்தார். இப்போது வேத தர்மசாஸ்திர பரிபாலனஸபைச் சம்மேளனம் நடந்துவருகிறது. வைஷ்ணவர்கள் மாத்வர்கள், சைவர்கள், எல்லாருக்கும் பொதுவானது வேதம். இந்த வேதத்திற்கு மூலமான வியாச ருடைய படத்தை வைத்துக்கொண்டு எல்லாரும் ஒற்றுமையாக இருக்கட்டும் என்று அந்தப் படத்தை வாங்கி வந்தேன். சம்மேளன காலத்தில் அந்தப் படம் உபயோகப்படவேண்டும் என்பதுதான் என் அபிப்பிராயம்.

வேதத்தை எல்லாரும் அத்தியயனம் பண்ணவேண்டும். பண்ணவில்லை என்றால் தப்பு. அந்தத் தப்புக்கு ஒரு ரூபாய் அபராதம் கட்டக்கூடாதா? வேதம் படிக்காத எல்லாரிடமும் அபராதமாக ஒவ்வொரு ரூபாய் வாங்கி அதை வைத்துக்கொண்டு யார் நன்றாக அத்தியயனம் பண்ணியிருக்கிறார்களோ அவர் களுக்கு மரியாதை, கௌரவம் செய்யவேண்டும் என்பது என் அபிப்பிராயம். புத்தகம் இல்லாமலே அநாதி காலம் முதற் கொண்டு ஒருவர் ஒருவர் முகமாக இத்தனை காலமும் வேதத்தை ரக்ஷித்து வந்திருப்பவர்களுக்கு நாம் ஒரு கௌரவம் பண்ணவேண்டாமா? இந்தமாதிரியான சம்மேளனம் ஒவ்வோர் எல்லையிலும் நடக்கவேண்டும். பிலாஸபி (Philosophy) என்று வரும்போது நாம் எல்லாரும் அறிவினால் வேறுபட்டு இருக்கலாம். நான் அத்வைதம், நீ விசிஷ்டாத்வைதம் என்று பல வேறுபாடு இருக்கலாம். இதெல்லாம் மூலமான ஒன்றன்மேல் ஏற்பட்ட கிளைகள். 'பிலாஸபி' என்னும்போது தனித்தனியாக இருப்போம். எனக்குச் சங்கரர் உயர்வு; அவருக்கு ராமானுஜர் தாம் உயர்வு என்று இருக்கட்டும். ஆனால் நாம் எல்லாரும் எந்த, 'பிலாஸபிக்காரர்கள்' ஆனாலும் ஒரு நாள் ஒரு கட்டத்தில் வியாசாசாரியரைத் தோளிலேற்றி எழுந்தருளப் பண்ணிக் கொண்டுவரக் கடமைப்பட்டிருக்கிறோம். இதுவரைக்கும்

அப்படிச் செய்ததில்லையே என்றால் செய்யாத குற்றம் நம்முடையது.

நமக்கெல்லாம் மூலம் வியாசர். இதுவரையில் செய்யாததற்குப் பிராயச்சித்தமாக இனி ஒவ்வொரு பேட்டையிலும் நாம் எல்லாருமாக அவரைத் தோளில் தூக்கிக்கொண்டு வர வேண்டும். அதற்காகத்தான் வருஷத்தில் ஒரு முறை இந்தச் சம்மேளனத்தை ஒவ்வொரு பேட்டையிலும் கொண்டாட வேண்டும்.

நமக்கு எந்த மரியாதை வந்தாலும் கொஞ்ச காலத்தில் ஓடிப் போய்விடும். வேதத்தை ரக்ஷிப்பதில் நமக்கு மரியாதை இல்லாவிட்டாலும் பரவாயில்லை. இந்த ஒரு தத்துவம் வாழ்ந்தாலே இது நம்மை எல்லாக் காலத்திலும் ரக்ஷிக்கும். இது ஒன்றுதான் நம் கடமை; கடமையைச் செய்வதையே நமக்கு மதிப்பாக, கௌரவமாக நாம் கொள்ளவேண்டும்.

வேதம் இத்தனை காலமும் வாழும்படியாகச் செய்த வேத வியாசருக்குக் கௌரவம், மரியாதை செய்யவேண்டும் என்பதற்காகத்தான் சம்மேளனம் நடக்கிறது. சென்னையில்கூட இரண்டு சம்மேளனங்கள் இதற்கு முன் நடந்திருக்கின்றன. இது பல பேருக்குத் தெரியாது. வைதிக சபையில் இன்று நடந்தது. வேத வியாசரின் படத்தைத்தான் எல்லாரும் தோளில் தூக்கிக்கொண்டு இங்கே கொண்டுவந்து வைத்திருக்கிறார்கள்.

'இது என்ன படம்? இதை எதற்காகத் தூக்கி வந்தார்கள்?' என்று நீங்கள் எல்லாரும் நினைப்பீர்களே என்பதற்காகத்தான் இத்தனையும் சொன்னேன். நான்கு வேதம், பதினெட்டுப் புராணம் எல்லாவற்றுக்கும் மூலமானவர் இந்த வியாச பகவான்தான். அவரால்தான் இன்று நாம் கொஞ்சமாவது க்ஷேமமாக இருக்கிறோம்.

12

# தர்ம சாஸ்திரங்கள்

நம்முடைய மதத்தைத் தெரிந்துகொண்டு, அதன்படி நாம் நடக்க வேண்டும் என்றால் என்ன செய்வது? பொதுவாக நாம் இப்போது இருக்கிற நிலைமையில் பக்தி, புராணக்கதை இவை சிலருக்குத் தெரியும். பாகவதர்களிடம் பாகவதம் கேட்டிருப்பார்கள். ராமாயணம் கேட்டிருக்கிறோம்; அது சரித்திரம். இதிகாசங்கள், புராணங்கள் முதலியவற்றில் அநேக விஷயங்கள் நமக்கு உபதேசங்களாகவே இருக்கின்றன. தமிழிலும் மற்றப் பாஷைகளிலும் அநேக பிரபந்தங்கள் இருக்கின்றன. இவை எல்லாம் பக்தியைப் பிரதானமாகச் சொல்லியிருக்கின்றன. நாம் செய்கிற காரியங்களில் பாவம் எது? புண்ணியம் எது? எதை நாம் கடைத்தேறுவதற்குச் செய்யவேண்டும்? இவற்றை நமக்கு உபதேசங்களாகவே சொல்வது தர்மசாஸ்திரம்; இதற்கு அறநூல் என்றும் பெயர்.

பராசரர், மனு, சங்கரர். லிகிதர், சாதாதபர் முதலியவர்கள் தர்மசாஸ்திரம் எழுதியிருக்கிறார்கள். புராணங்களில் அநேக தர்மங்கள் இருக்கும். எல்லாத் தர்மங்களையும் சேர்த்து ஓர் இடத்தில் சொல்லியிருக்கிறார்கள். அத்தகைய கிரந்தத்துக்குத் தர்ம சாஸ்திர நிபந்தனம் என்று பெயர். அதை ஆதாரமாக வைத்துக் கொண்டுதான் நம்முடைய நித்திய அநுஷ்டானங்கள் நடக்கின்றன.

நித்தியப்படி நம்முடைய மதப் பிரசாரம், கர்மாநுஷ்டானங்களைச் செய்வது, அந்த நிபந்தனைகளை அநுசரித்துத்தான். வெவ்வேறு இடத்தில் வெவ்வேறு நிபந்தனக் கிரந்தங்களை அநுசரிக்கிறார்கள், வடக்கே இருக்கிறவர்கள் காசிநாத உபாத்யாயர் எழுதியபடி நடக்கிறார்கள். தக்ஷிணத்தில் வைத்தியநாத தீக்ஷிதர் எழுதியதை அநுசரிக்கிறார்கள். பம்பாயில் மிதாக்ஷரி என்று இருக்கிறது, அது சட்டத்திற்குச் சமானமானது. இப்படிப் பல நிபந்தனக்காரர்கள் அநேக நூல்களை அங்கங்கே செய்திருக்கிறார்கள்.

தமிழ்த் தேசத்தில் வைத்தியநாத தீக்ஷிதரின் நிபந்தனந்தான் பிரதானமாக இருக்கிறது.

தர்மசாஸ்திரம் என்பதைக் கொஞ்சம் ஞானம் இருந்தால் எல்லாரும் படிக்கலாம். அத்தியயனம் பண்ணவேண்டும் என்ற அவசியம் இல்லை. பெரியவர்கள் தர்மசாஸ்திரத்தை நன்ருகத் தமிழிலேயே அச்சுப் போட்டிருக்கிருர்கள்.

வேதத்தை ஆதாரமாகக் கொண்ட மதம், வைதிக மதம் என்று சொல்கிறேம், இந்த வைதிக மதத்துக்கும் லோகத்தில் இருக்கும் பாக்கி மதங்களுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. அந்த வித்தியாசத்தைப் பகவான் கீதையில் சொல்லியிருக்கிருர். 'யக்ஞத்தைப் பண்ணிக்கொண்டு வாருங்கள். இதனுல் சகல நன்மைகளும் பெற்று வளர்ச்சி அடைவீர்கள்' என்று சொல்லியே பிரம்மா ஆதியில் யக்ஞங்களுடன் மனிதர்களைச் சிருஷ்டித்து, 'இந்த யக்ஞங்கள் உங்களுக்கு விரும்பியதை அளிக்கும் காமதேனுவாக இருக்கட்டும்' என்று கூறினுர்' என்று பகவான் சொல்கிருர்.

सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्टकामधुक् ॥

ஸஹயக்ஞா, ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி।
அநேந ப்ரஸவிஷ்யத்வ மேஷவோஸ்த்விஷ்டகாமதுக் ॥

அதிக சக்தி உடைய மிருகங்கள் இருக்கின்றன. மிருகங்களிலும் ஒன்றைக் காட்டிலும் இன்னென்று அதிகச் சக்தி உடையதாக இருக்கிறது. அப்படியே மனுஷ்யர்களைக் காட்டிலும் அதிக சக்தி உடையவர்கள் இருக்கிருர்கள். அவர்கள் இந்த லோகத்தில் இல்லை. அவர்களைத் தேவர்கள் என்றும் அவர்கள் இருப்பது தேவலோகம் என்றும் சாஸ்திரங்கள் சொல்கின்றன.

இந்தக் காலத்தில் விருந்துக்குப் போகிருர்கள். 'டோஸ்ட் பிரபோஸ்' பண்ணுகிருர்கள். இவன் சாப்பிடுகிருன். அது இவனுக்குத்தானே புஷ்டியைத் தரும்? 'உன்னுடைய சுகத்துக்காகச் சாப்பிடுகிறேன்' என்று இவன் சொன்னுல் எப்படி அவனுக்குப் புஷ்டியாகும்? இப்படிக் கேட்கலாமா? இதெல்லாம் ஒரு வகை மனேபாவம். இந்த மனேபாவமே அவனுக்கு ஒரு புஷ்டியைக் கொடுக்கிறது.

அப்படியே, யாகங்களில் நாம் கொடுக்கிற ஆஹுதிகள்-ஹவிசுகள்-தேவதைகளுக்குச் சக்தியைக் கொடுக்கின்றன- அப்படி நாம் பாவித்து யக்ஞங்கள் செய்தால் தேவர்களும் அப்படியே பாவித்து நமக்கு அநுக்கிரகம் செய்வார்கள். இப்படிப் பகவான் கீதையில் சொல்லியிருக்கிருர்.

देवान् भावयतानेन ते देवा भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥

தேவாம்பாவயதாநேநதே தேவா பாவயந்து வ:।
பரஸ்பரம் பாவயந்த: ஸ்ரேய: பரமவாப்ஸ்யத ||

இப்படி நம்முடைய மதத்தில் பல யக்ஞங்கள் செய்து தேவர்களைப் பிரீதி செய்து ஈசுவரானுக்கிரகத்திற்குப் பாத்திரர்களாகிறார்கள். பிற மதங்கள் எல்லாம் சுவாமியைத்தான் நேராக வழிபடும்; கடவுளிடத்தில் நேராகப் பிரார்த்தனை செய்யும்.

நம்முடைய மதத்தில் சந்நியாசிகள்தாம் சாக்ஷாத் தெய்வத்தையே நேராக வழிபடலாம். மற்றவர்கள் தேவதைகளையும் பிரீதி பண்ணி. தெய்வங்களுடைய அநுக்கிரகத்தினால் நன்மை அடைய வேண்டும். தேவதைகளைப் பிரீதி பண்ணத்தான் பல ஹோமங்கள், யக்ஞங்கள் எல்லாம் பண்ணுகிறோம்.

ஒரு பெரிய ராஜா இருந்தால் எல்லாரும் ராஜாவிடமே நேரில் பேசமுடியுமா? அந்த ராஜாவின் பரிபாலனத்திற்கு உட்பட்ட உத்தியோகஸ்தர்களிடம் குடிமக்கள் நெருங்கித் தங்களுக்கு வேண்டிய அனுகூலங்களைப் பெறுகிறார்கள். உத்தியோகஸ்தர் தாங்களாகச் செய்வதில்லை; அரசன் உத்தரவுப் படி ஜனங்களுக்கு அனுகூலம் செய்கிறார்கள். அரசன்தானே செய்கிறான் என்று அரசனிடத்தில் குடிமக்கள் நேராகப் போக முடியாது.

அப்படித்தான் நம் மதத்தில் சில வழக்கங்கள் இருக்கின்றன. பரமேசுவரன் மகாசக்ரவர்த்தி, ஜனங்கள், குடிமக்கள், வருணன், அக்கினி, வாயு போன்ற பல தேவதைகள்தாம் உத்தியோகஸ்தர்கள். இவர்கள் மூலமாக நாம் பல நன்மைகளை அடையவேண்டும். அதற்காகவே தேவர்களுக்குச் சக்தி அளிக்க யாகம் பண்ணுகிறோம். அக்கினி மூலமாக நாம் கொடுக்கிற அவிசுகள் தேவர்களுக்குச் சேர்ந்து ஆதாரமாகின்றன.

अग्निमुखाः देवाः

அக்நிமுகா: தேவா:

'நம்முடையது அன்று' என்று நம்ப கொடுக்கிற பொருள்கள் தேவதைகளுக்குப் போய்ச் சேருகின்றன. அக்னியில் போடுவதுதான் நம்முடையது இல்லை என்றாகும். போடும்போது 'ந, மம' என்று சொல்லிப் போடுகிறோம். ந, மம என்றால் 'என்னுடையது அல்ல' என்று அர்த்தம். தேவர்களுக்கு ஆகாரம் போய்ச் சேருகிற வழிதான் அக்கினி.

இப்படியே நாம் ஏந்த வம்சத்தில் பிறந்தோமோ அந்த வம்சத்திலுள்ள பித்ருக்களைப் பிரீதி செய்யப் பல காரியங்களைச் செய்கிறோம்.

தெய்வ காரியங்களுக்குப் பக்தி வேண்டும். பித்ரு காரியங்களுக்குச் சிரத்தை வேண்டும். தெய்வ காரியங்களைப் பண்ணும்போது சிகையை நன்றாக முடிந்துகொண்டு யக்ஞோபவீதம் இடது தோளில் இருக்கும்படியாகப் பக்தியோடு செல்ய வேண்டும். ப்ரேத காரியங்களைச் செய்யும்போது சிகையை முடியாமல் யக்ஞோபவவீதம் வலது தோளில் இருக்கும்படியாகச் சிரத்தையோடு செய்ய வேண்டும்.

இதற்காகத்தான் சிகை, யக்ஞோபவீதம் இரண்டும் இருக்கின்றன. சந்நியாசிகளுக்கு இவை இரண்டும் இல்லை. கிருகஸ்தர்கள் தர்ம சாஸ்திரப்படி அநுஷ்டானங்களைப் பண்ண வேண்டும். தேவதைகள், பித்ருக்கள், இவர்களைப் பக்தியோடு, சிரத்தையோடு ஆராதித்து, ஈசுவரானுக்கிரகத்துக்குப் பாத்திரராக வேண்டும்.

13

# ஈசுவர பக்தி ஏன் செய்யவேண்டும்?

தெய்வ பக்தி குரு பக்தி, ஆகிய இரண்டும் அவசியம் ஒவ்வொரு மனிதனுக்கும் வேண்டும் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஈசுவர பக்தி வேண்டுமென்று சொல்கிற மதங்கள் எல்லாம், 'ஸ்வாமி ஒருத்தர் இருக்கிறார்; அவரிடம் நிறையப் பக்தி வேண்டும்; அன்பு வேண்டும்' என்று சொல்லுகின்றன. ஈசுவரன் யார் என்று கேட்டால், "நம்மை எல்லாம் படைத்தவன். நம்மை எல்லாம் ரக்ஷிக்கிறவன்' என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்கிறார்கள்.

இந்தக் கொட்டகையை ஒருத்தன் போடுகிறான்; இந்த வீட்டை ஒரு கொத்தன் கட்டுகிறான். இதைப் பார்த்து, வேறொரு கொட்டகை தென்பட்டால் அதையும் ஒருத்தன் போட்டிருக்கவேண்டும் என்று தீர்மானம் பண்ணுகிறோம். ஒரு பெரிய கொட்டகையைப்போல் வீட்டைப்போல் இருக்கும் பிரபஞ்சத்தைப் பார்க்கும்போது இதையும் ஒருத்தன் சிருஷ்டி பண்ணியிருக்க வேண்டும். என்று தீர்மானிக்கிறோம். ஒரு காரியம் இருந்தால் அதற்குக் காரணம் இருக்கவேண்டும். பிரபஞ்சத்தில் நடக்கிற இத்தனை காரியங்களுக்கும் காரணமாக ஒருவன் இருக்க வேண்டும், அவன்தான் ஈசுவரன் என்று அநுமானிக்கிறோம். இந்தச் சரீரம் நாமாகப் பண்ணிக் கொண்டதன்று. எவனோ சிருஷ்டித்திருக்கிறான். இதன் புஷ்டிக்கு எத்தனையோ விதமான ஆகாரங்களையும் அவன் படைத்திருக்கிறான். அவைகளைச் சாப்பிடச் சக்தி கொடுத்திருக்கிறான். சாப்பிட்டதை ஜீரணம் செய்துகொள்ளவும் சக்தி கொடுத்திருக்கிறான். இப்படியே காற்று, உஷ்ணம், மண் இவற்றை யெல்லாம் சிருஷ்டித்திருக்கிறானே, அவன்தான் ஈசுவரன்.

இவற்றையெல்லாம் நம்மைக் கேட்டுக்கொண்டா அவன் படைத்தான்! உலகத்தைப் படைத்தான்; ரக்ஷிக்கிறான். இதற்காக நாம் அவனிடத்தில் ஏன் பக்தி செய்யவேண்டும்? நமக்கு அவனால் ஆகவேண்டிய காரியம் என்ன இருக்கிறது? எதற்காக

அவனை நாடி அன்பு செய்ய வேண்டும்?—இப்படி நமக்குச் சந்தேகம் வருகிறது. இந்தச் சந்தேகம் ஒருபக்கம் இருக்கட்டும்.

'ஈசுவரன் யார்? அவனுக்கு உரிய லக்ஷணங்கள் என்ன? என்பதை, வேதத்தை விளக்கும் சாஸ்திரம் எப்படிச் சொல்கிறது என்று பார்க்கலாம். வியாசாசாரியர் பண்ணின பிரம்ம ஸூத்ரம் என்ன சொல்கிறது என்று பார்க்கலாம். ஆதி ஆசாரியரவர்கள் ராமாநுஜாசாரியார், மத்துவாசாரியர் இவர்கள் எல்லாரும் பாஷ்யம் பண்ணி யிருக்கிற பிரம்ம ஸூத்ரத்தில் ஈசுவரனைப்பற்றிச் சொல்கிறபோது,

कर्ता शास्त्रार्थवत्त्वात् ।

கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்வாத்

என்கிறது. இந்தப் பிரபஞ்ச சிருஷ்டிக்கெல்லாம் கர்த்தா அவன்தான் என்று சொல்கிறது. இவற்றையெல்லாம் பார்த்து விட்டுத்தான் வேதத்திற்கு அந்நியமாக உள்ள மதங்கள்கூடச் சுவாமியைச் சொல்லும்போது, 'கர்த்தர்', கர்த்தர்' என்று சொல்லிக்கொண் டிருக்கின்றன.

ஈசுவரன் கர்த்தர் மாத்திரம் அல்ல; அவனுக்கு வேறு ஒரு வேலையும் இருக்கிறது. நாம் என்ன என்னவோ பண்ணுகிறோம். சில சமயம் தப்புக் காரியம் பண்ணுகிறோம். இவை எல்லாவற்றையும் எழுதி வைத்துக்கொண்டு அவற்றுக்கெல்லாம் தகுந்தபடி நமக்குப் பலனைக் கொடுக்கிறான்.

फलमत उपपत्तेः ।

பலமத உபபத்தே:

கர்ம பலன்களைக் கொடுக்கிறவன் ஈசுவரன். மனோவாக்குக் காயங்களினால் நல்லதை நினைக்கிறோம். செய்கிறோம்- பல சந்தர்ப்பங்களில் கெட்டதையும் நினைக்கிறோம். இவை எல்லாவற்றையும் ஈசுவரன் எழுதிவைத்துக்கொள்கிறான். அவரவர்கள் பண்ணின கர்மத்திற்கேற்பப் பலனையும் அவன் கொடுக்கிறான். இந்த இரண்டு லக்ஷணங்கள்தாம் ஈசுவரனுக்குக் கொடுக்கபட் டிருக்கின்றன.

அவன் கர்த்தா; சிருஷ்டி பண்ணட்டும்; அது அவன் காரியம். அவன் பலதாதா; அவரவர்கள் செய்த காரியங்களுக்கு ஏற்ற பலனைக் கொடுக்கட்டும். மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்ற வேண்டாமா? உலகத்தைச் சிருஷ்டித்தான்; ரக்ஷிக்கிறான். நமக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்? எதற்காக அவனை நாம் பக்தி பண்ணவேண்டும்? இப்படி ஒரு சந்தேகம் உண்டாகிறது.

நம் தேசத்தில் நம்மைப் போலவே வேதத்தை அநுசரித்துக் கொண்டிருக்கும் மதஸ்தர்களில் சாங்கியர், மீமாம்சகர் என்று இரண்டு வகையார் உண்டு. அவர்களில் சாங்கிய மதத்தைச் சேர்ந்தவர், 'ஈசுவரன் ஜகத்துக்குக் கர்த்தா அல்ல' என்று கண்டனம் பண்ணியிருக்கிறார்கள். 'ஈசுவரன் ஞானஸ்வரூபி. இந்த ஜகத் வெறும் கல்மண்ணுலாகிய ஜடப் பொருள். ஞானப் பொருள் ஜடப்பொருளுக்குக் காரணமாகாது; ஆகவே ஈசுவரனை ஜகத்துக்குக் கர்த்தா என்று சொல்வது தப்பு. வேறு யாரோ கர்த்தா; ஈசுவரன் கர்த்தாவே அல்ல' என்று சாங்கிய மதஸ்தர்கள் நிர்த்தாரணம் பண்ணப் பார்த்தார்கள்.

மீமாம்சகர்கள் எப்போதுமே வேதத்தில் சொல்லியிருக்கும் கர்மாநுஷ்டானங்களுக்கு அதிகப் பிராதான்யம் கொடுப்பவர்கள். 'ஜகத் சிருஷ்டிக்கு ஈசுவரன் கர்த்தாவா இல்லையா?' என்பதைப்பற்றி அவர்கள் எதுவும் சொல்லவில்லை. ஆனால் 'ஈசுவரன் பலதாதா அல்ல' என்பதைப் பலமாகச் சொன்னார்கள். இவர்கள் ஜகத்துக்கு ஈசுவரன் கர்த்தாவா அல்லவா என்று சண்டை போடவில்லை. 'நாம் செய்கிற நல்ல காரியங்களுக்கும் கெட்ட காரியங்களுக்கும் ஏற்ற பலனைக் கொடுக்கிறவன் ஈசுவரன் என்பது தப்பு. அவன் பலதாதா அல்ல' என்றார்கள்.

ஆகவே ஈசுவரனைப்பற்றி நம்முடைய வேதத்திலும் பிரம்ம ஸூத்ரத்திலும் சொன்ன இரண்டு லக்ஷணங்களையும் இந்தச் சாங்கிய மதஸ்தர்கள், மீமாம்சகர்கள் ஆகிய இரண்டு பேரும் ஒன்றாகத் தள்ளிவிட்டார்கள். மீமாம்சகர்கள், ஈசுவரன் பலதாதா அல்ல என்று சொன்னதற்குக் காரணம் நாம் செய்கிற கர்மாக்களே நமக்குப் பலனை அளிக்கின்றன என்பதனால் தான்? வேத சாஸ்திரங்கள் எந்தக் கர்மாவை அநுஷ்டித்தால் புண்ணியம் வரும் என்று சொல்லியிருக்கின்றனவோ அந்தக் கர்மாவை அநுஷ்டித்தால் புண்ணியம் வருகிறது. எதைச் செய்தால் பாபம் சம்பவிக்கும் என்று சொல்லுகின்றனவோ அதைச் செய்தால் பாவம் சம்பவிக்கிறது. இபபடி நாம் செய்கிற கர்மாக்களே நமக்குப் பலனை அளிக்கின்றனவே தவிர ஈசுவரன் பலதாதா அல்ல என்று சொன்னார்கள்.

வேதத்தை ஒப்புக்கொண்டிருக்கிற மதங்களுக்குள்ளேயே, ஈசுவரன் ஜகத்துக்குக் கர்த்தா அல்ல, அவன் பலதாதா அல்ல என்று சொன்ன மதங்கள் இந்தச் சாங்கிய மதமும் மீமாம்சக மதமுந்தாம்.

ஆசாரியரவர்கள் அவதாரம் பண்ணிப் புத்த மதத்தைக் கண்டனம் பண்ணினதால்தான் அது இந்தத் தேசத்தைவிட்டே போயிற்று என்று பலர் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். புத்த

மதத்தை அவர் ஸ்வதந்திரமாகக் கண்டனம் செய்கிற இடங்கள் அவர் பாஷ்யங்களைப் பார்த்தால் இருக்குமோ இருக்காதோ சந்தேகம். மிகவும் சொல்பம். வேதத்தை அநுசரித்த சாங்கிய மதம், மீமாம்சக மதம் இவை இரண்டைச் சேர்ந்தவர்களும், 'ஜகத்துக்குக் கர்த்தா ஈசுவரன் அல்ல: அவன் பலதாதா அல்ல' என்று சொல்கிறார்களே என்று, அவர்கள் தத்துவத்தைப் பற்றியே விசாரித்து, 'அப்படிச் சொல்வது தப்பு. வேத வாக்கியப்படி, பிரம்ம ஸூத்ரப்படி சொல்லியிருக்கிற லக்ஷணங்கள்தாம் உண்மையானவை' என்று நிர்த்தாரணம் செய்தார். ஈசுவரன் இல்லாமல் ஜகத் உண்டாகாது. நாம் செய்கிற கர்மாக்களே நமக்குப் பலனைக் கொடுக்கும் என்று சொல்ல முடியாது. ஈசுவரன்தான் பலனைக் கொடுக்கிறான். அவனுடைய சைதன்யந்தான், சங்கல்பந்தான், உலகத்தைச் சிருஷ்டித்து, அவரவர்களுடைய கக்மாக்களுக்கு ஏற்ற பலனைக் கொடுக்கிறது' என்று சாங்க்ய மதத்தையும் மீமாம்சக மதத்தை யும் எதிர்த்து நிறைய எழுதியிருக்கிறார். புத்த மதத்தைக் கண்டனம் பண்ணி எழுதியிருக்கும்படியாகத் தோன்றும் சில இடங்களிலும்கூட ஸூத்ரம் அப்படி இருப்பதனால் அதற்கேற்ற படி பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். ஆசாரியரவர்கள் புத்த மதத்தைக் கண்டித்ததால்தான் புத்தமதம் இந்தத் தேசத்தை விட்டே போயிற்று என்று சொல்வதற்கு அவர் பாஷ்யத்தில் அதிக ஆதாரம் இல்லை என்று சொல்ல வந்தேன்.

புத்தமதத்தைப் பலமாகக் கண்டித்தவர்கள் தார்க்கிகர்களும் மீமாம்சகர்களுந்தான். தார்க்கிகரான உதயனாசாரியர், மீமாம்சகரான குமாரில பட்டர் என்னும் இரண்டு பேருமே ஒவ்வொரு காரணத்திற்காக அந்த மதத்தைப் பலமாகக் கண்டித்திருக்கிறார்கள்.

ஈசுவரன் என்று ஒருத்தன் இல்லை என்று சொன்னதற்காக உதயனாசாரியர் அந்த மதத்தைப் பலமாகக் கண்டித்தார். மீமாம்சகர்களுக்கு வேதத்தில் சொல்லப்பட்ட கர்மாநுஷ்டானங்களே பிரதானம் என்று சொன்னேன். 'ஈசுவரன் பலதாதா அல்ல' என்று இவர்கள் சொன்னாலும், நாம் செய்கிற கர்மாநுஷ்டானங்கள் பலனைத் தருகின்றன. தர்ம சாஸ்திரங்களை எல்லாம் சிரத்தையுடன் அநுஷ்டிக்க வேண்டும்' என்பவர்கள் மீமாம்சகர்கள். அநுஷ்டானம் ஒன்றுமே வேண்டாம் என்று புத்தமதத்தினர் சொன்னதற்காக, புத்தமதத்தைப் பலமாகக் கண்டித்தார்கள். குமாரிலபட்டர் என்பவர் அதைக் கண்டித்துப் பல இடங்களில் நிறைய எழுதியிருக்கிறார். உதயனாசாரியர், குமாரிலபட்டர் இவர்களால்தான் பௌத்தர்களுடைய கொள்கைகள் ஜனங்களுடைய மனத்தில் பரவுவதற்கு இல்லாமல்

நின்றுபோயின. ஆசாரியரவர்கள், 'ஈசுவரன்தான் ஜகத்துக்கெல்லாம் கர்த்தா; அவன்தான் பலதாதா' என்று நிர்த்தாரணம் பண்ணிவைத்தார். அவை எல்லாம் இருக்கட்டும்.

தப்பான விஷயங்களைக் கேட்டு உங்களுக்கும் உண்மை தெரியாமல் போகக்கூடாது என்பதற்காக இதைச் சொன்னேன். குமாரிலபட்டர் தர்க்கபாதம் என்னும் அத்தியாயத்தில் அவர்களை நிறையக் கண்டித்திருக்கிறார். உதயனாசாரியர், பௌத்தாதிகாரம் என்ற தம் நூலில் அவர்களைப் பற்றியே கண்டித்து எழுதியிருக்கிறார். புத்தமதம் இந்தத் தேசத்தில் பரவாமல் நின்று போனதற்குக் காரணம் இவர்கள் இரண்டு பேர்கள்தாம். ஆசாரியரவர்கள் வியாசாசாரியரின் வாக்குத்தான் சத்தியம் என்று நிர்த்தாரணம் பண்ணினார்.

அது எப்படியாவது இருக்கட்டும், ஈசுவரன் ஜகத்துக்கெல்லாம் கர்த்தாவாக இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? அவன் பலதாதாவாக இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? 'அவன்தான் ஜகத்துக்கெல்லாம் கர்த்தா; அவன்தான் பலதாதா' என்று ஆசாரியரவர்களுடைய வாக்குப்படி ஒப்புக் கொண்டாலும் நாம் எதற்காக அவனிடம் பக்தி பண்ண வேண்டும்? இதுதானே நம்முடைய சந்தேகம்?

ஓர் அதிகாரி இருக்கிறான். அவனிடம் போய் நாம் அடிக்கடி நம் குறைகளைச் சொல்லிக்கொள்கிறோம் என்றால், ஒன்று அவன் அஞ்ஞானியாக இருக்கவேண்டும். அல்லது லஞ்சம் வாங்குகிறவனாக இருந்தால் அடிக்கடி அவனிடம் போய்-நாம் நிறையத் தப்புப் பண்ணினாலுங்கூட அதை மறைத்துக்கொண்டு தண்டனை அதிகம் வராமல் இருக்க அவனை அநுசரித்துக்கொண்டாகவேண்டும். இந்த இரண்டு குறைகளும் இல்லாதவனாக ஈசுவரன் இருக்கிறபோது அவனிடத்தில் சென்று எதற்காகப் பக்தி பண்ணவேண்டும்?

'ஈசுவரன் எங்கே இருக்கிறான்? அவனே இல்லாதபோது பக்தி ஏது?' என்று சொல்பவர்கள் பலர். அவர்கள் ஒரு பக்கத்தில் இருக்கிறார்கள். நமக்கு அதைப்பற்றிக் கவலை இல்லை.

ஒரு சின்னக் காரியத்தைச் செய்யவேண்டுமென்றாலும் ஓர் ஆள் வேண்டியிருக்கிறது. இந்தப் பிரபஞ்சத்தையும் இதில் உள்ள ஆருயிர்கள் அத்தனையையும் நாம் படைக்கவில்லை. படைத்தவன் ஒருவன் இருக்கத்தான் வேண்டும்.

எத்தனை சுகங்கள், துன்பங்கள் எல்லாம் ஒவ்வொருவர் வாழ்விலும் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன! துக்கம் ஏற்படுவதற்கு உரிய காரியத்தை நாம் இப்போது செய்யாமல் இருந்தாலும் துக்கம் வருகிறது. அது பூர்வஜன்ம பலன் என்றால் அவற்றை எல்லாம் கணக்கில் வைத்துக்கொண்டு அவரவர்க

ளுடைய கர்ம பலனைக் கொடுக்கிற அறிவு ஒன்று இருக்கத்தான் வேண்டும் என்று ஒப்புக்கொள்கிற நாமே, 'அப்படிப்பட்ட பேரறி வுள்ளவனுன சர்வஞ்ஞனுல் நமக்கு என்ன காரியம்? நமக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?' என்று ஆலோசிக்கவேண்டும்; அல்லவா?

நம்முடைய மதத்திற்குப் பிரமாணமாக இருப்பவை ஆறு சாஸ்திரங்கள். முன்பே சாங்கியம் என்று ஒன்று சொன்னேன். அந்தச் சாங்கியத்தில் ஸேச்வர சாங்கியம் அல்லது யோகம், நிரீசுவர சாங்கியம் என்று இரண்டு உண்டு. மீமாம்சை என்று ஒன்று சொன்னேன். அதில் பூர்வமீமாம்சை, உத்தரமீமாம்சை என்று இரண்டு. அப்புறம் வருவது தர்க்க சாஸ்திரம்; நியாயம், வைசேஷிகம் என்று அதில் இரண்டு. ஆக மூவிரண்டு ஆறு சாஸ்திரங்கள். இவைகள் எல்லாம் ஸூத்ரங்களாக இருக்கின்றன. இந்த ஆறு சாஸ்திரங்களுக்கும் பாஷ்யம் எழுதின வர்கள் அநேகம் பேர். அவர்களில் ஆசாரியரவர்களும் ஒருவர்.

பாதராயணர், ஜைமினி போன்றவர்கள் எல்லாரும் ஸூத்ரகாரர். அவர்கள் எழுதிய ஸூத்ரங்களுக்குப் பாஷ்ய காரர்கள் தனித்தனியாக இருக்கிருர்கள்.

பதஞ்சலி சொன்னதற்கு யோக ஸூத்ரம் என்று பெயர். அதற்குப் பாதஞ்சலம் என்றும் பெயர். இதுவும் சாங்கியத்தைச் சேர்ந்தது; ஸேச்வர சாங்கியம்.

அந்த யோக ஸூத்ரத்தில் யோகம் என்ருல் என்ன என்ற கேள்வியைக் கேட்டுக்கொண்டு,

योगश्चित्तवृत्तिनिरोधः।

யோக: சித்தவ்ருத்திநிரோத :।

'மனசை அடக்குவதுதான் யோகம்' என்று சொல்கிருர். எத்தனையோ வித்தைகளை நாம் கற்றுக்கொள்கிருேம். எங் கெங்கோ ஏறுகிருேம், புலி, சிங்கம், கரடி முதலிய பிராணிகளை யெல்லாம் அடக்குகிருேம். ஆனுல் நமக்குக் கொஞ்ச நாழிகை மனத்தை அடக்கத் தெரியவில்லை. எத்தனை எத்தனையோ விஞ்ஞான அறிவையெல்லாம் வளர்த்துக்கொண்டு வெளியில் இருக்கிற பூதங்களையெல்லாம் அது ஆட்டி வைக்கிறது. அந்த மனத்தை நம்மால் அடக்க முடியவில்லை.

சித்தத்தை அடக்கி ஒரு நிமிஷம் சும்மா இருக்கத் தெரிய வில்லை. ஏதாவது ஒன்றைப்பற்றியே நினை என்ருலும் மனசு கேட்கமாட்டேன் என்கிறது. 'சித்தத்தை நிறுத்துவதுதான் யோகம்' என்று சொல்கிருர் பதஞ்சலி.

'சரி, அதை நிறுத்துவது எப்படி?' என்ற கேள்வியைப் போட்டுக்கொண்டு அடுத்த ஸூத்ரம் சொல்கிருர்: 'ஈசுவரனை

நினைக்க ஆரம்பி' என்கிருர். சித்தி விருத்தி நிற்பதற்கு ஈசுவரனை நினைக்க ஆரம்பிக்க வேண்டும். இப்படிப் பல ஸூத்ரங்கள் ஒன்று இல்லாவிட்டால் ஒன்று என்று சொல்லிக்கொண்டே போகிருர்.

சித்தம் நின்ருல் பிராணன் நிற்கிறது. அதிக ஆனந்தமோ அதிகத் துக்கமோ வந்தால் மனசு நின்று, சுவாசமும் தடைப் படுகிறது. சித்தத்திற்கும் பிராணனுக்கும் சம்பந்தம் இருப்பது தெரிகிறது. ஆகவே, 'பிராணனை நிறுத்தியும் சித்தத்தை நிறுத்தப் பழகலாம்' என்கிருர். ஆனுல் முதலாவதாக, 'சித்தத்தை நிறுத்துவதற்கு ஈசுவரத் தியானம் பண்ணு' என்கிருர்.

'அந்த ஈசுவரன் யார்?' என்ற கேள்வியைப் போட்டுக் கொண்டு அவரே அப்புறம் சொல்கிருர்:

क्लेशकर्मविपाकाशयैरपरामृष्टः पुरुषविशेषः ईश्वरः ।

க்லேஶகர்மவிபாகாஶயை: அபராம்ருஷ்ட:
புருஷவிஶேஷ: ஈஶ்வர: |

நமக்கு என்ன என்னவோ குறைகள் இருக்கின்றன; அவற்ருல் கஷ்டம் வருகிறது; துக்கம் வருகிறது; கர்மா ஒரு பக்கம் பிடித்து இழுக்கிறது. துக்கம் வேறு; குறை வேறு. இவற்ருல் மிகவும் ஆயாசப்படுகிறோம்; மனக்கிலேசம் அடை கிறோம். இவற்றில் ஒன்றும் இல்லாதபடி வெறும் பட்டமரமாக இருக்கவேண்டும்; ஆனுல் அறிவும் இருக்கவேண்டும்.

சில பிறவிகள் மந்தியாக, ஒன்றும் தெரியாமல் இருக் கின்றன. வெறும் கல்லுக்குச் சைதன்யம் இல்லை; குறை இல்லை; மோட்சமும் இல்லை. அப்படிப் பிறவியில் ஒன்றும் தெரியாத மந்தியாக, அசடாக, கல்லுமாதிரி குழந்தையோ ஒருவனோ இருந்தால் அவனை உயர்ந்தவன் என்று சொல்ல முடியாது. அவன் ஜீவன் முக்தித்தன்மையை அடைந்துவிட்டான் என்று நினைப்பது தப்பு. அது ஒரு பாவத்தின் பலன். அந்த ஜனனம் போய்விட்டால் அடுத்த ஜனனத்தில் அவனுக்குத் துக்கம் வந்து விடும்.

உலகத்திற்குள் எவன் மகாபுத்திமானோ எவன் புத்தி அதிக சூக்ஷ்ம மானதோ நல்ல கத்தியின் கூர் எப்படி இருக் கிறதோ அப்படிப்பட்ட கூர்மையான புத்தி உடையவனாகக் கூர் உடையவனாக எவன் இருக்கிருனோ அவன் பட்ட மரம் மாதிரி, சலனம் இல்லாத மனசு உடையவன் ஆகவேண்டும். காமத்தி னுலோ குரோதத்தினுலோ அவன் மனம் சலனம் அடையாமல் பேதிக்காமல் இருந்தால் அதுதான் ஆனந்தம்.

கஷ்டத்தையோ துக்கத்தையோ காமத்தையோ தெரிந்து கொள்ளச் சக்தி இல்லை; அதனுல் கஷ்டம் இல்லை; துக்கம்

இல்லை என்று சொல்லிக்கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. அதனால் அவன் எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கிறான் என்று சொல்ல முடியாது. எல்லாம் தெரிய வேண்டும். சூக்ஷ்மமான புத்தியினாலே தன்னைச் சுற்றி நடக்கிற விவகாரங்களை யெல்லாம் அறிந்துகொள்ள வேண்டும். ஞானம் பூர்ணமாக இருக்கிறது. ஆனால் சலனம் இல்லாத மனசு உடையவனாக, காமம் இல்லாத மனசு உடையவனாகக் கஷ்டம், துக்கம் எதுவுமே இல்லாத மனசு உடையவனாக இருந்தால்தான் அவன் எப்போதும் எல்லாக் காலத்திலும் ஆனந்தம் உடையவனாக இருப்பான். அப்படி நம்மில் யாராலும் இருக்க முடியவில்லை. ஈசுவரன் ஒருவன்தான் சர்வக்ஞனாக சதா ஆனந்தரூபியாக ஸத்-சித் ஆனந்த ரூபியாக இருக்கிறான் என்று ஈசுவரனுக்கு ஒரு லக்ஷணம் சொன்னார்கள்.

இது ஒன்றைத் தவிர அந்த யோக சாஸ்திரத்திலே மற்ற எல்லாம் சாங்கியம் மாதிரிதான். அதுவும் சாங்கியத்தைப் போன்றது என்று சொன்னேன். 'ஈசுவரன் ஜகத்துக்குக் கர்த்தா அல்ல, அவன் பல தாதாவும் அல்ல' என்று சொன்னாலும் சொல்லிக்கொண்டு போகட்டும். 'அவர் பல தாதாவாக இருந்தால்தான் என்ன? நமக்கு அவரால் ஏதாவது காரியம் ஆக வேண்டுமா?' என்றால் ஒரு காரியம் ஆகவேண்டும். என்ன காரியம்?

நாம் யாரை நினைக்கிறோமோ அவராக மாறிவிடுகிறோம். சர்வக்ஞனாக எல்லாம் உணர்ந்தும் சித்தத்தில் கொஞ்சங்கூடச் சலனமில்லாமல் சதா ஆனந்த ஸ்வரூபியாக ஈசுவரன் இருக்கிறான். அவனை நினைக்க ஆரம்பித்தால் நாமும் அப்படி ஆகலாம்.

निवातस्थदीपवत् ।

நிவாதஸ்ததீ பவத் |

ஏற்றின விளக்கு, காற்று இல்லாது போனால் கொஞ்சங்கூட ஆடாமல் அசையாமல் இருக்கிறது. அதைப்போல் ஈசுவரன் இருக்கிறான். நம்முடைய சித்தமும் ஆடாமல் அசையாமல் இருக்கும் விளக்கைப்போல இருக்கவேண்டும். எவனுடைய சித்தம் அப்படி இருக்குமோ அவனையே சதா நினைத்தால் அப்படியே ஆகிவிடுகிறது என்று யோக சாஸ்திரம் கூறுகிறது.

ஈசுவரன் ஒருவன் இருக்கிறான். அவன் எல்லாம் அறிந்த ஞானி; எதனாலும் பாதிக்கப்படாத, அசைவு இல்லாத, ஆடாத, உறுதியான சித்தம் உடையவன் என்று அவனையே நாம் நினைத்தால் நாமும் அவனாகவே ஆகிவிடலாம்.

எதையாவது ஒன்றை நினைத்துத் தியானம் பண்ணு என்றால் இப்போது இருக்கிற மனசு நாம் சொன்னபடி கேட்க மாட்டேன் என்கிறது. மனசு நாம் சொன்னபடி கேட்பதற்கு-சித்தவிருத்தி நிரோதம் பண்ணுவதற்கு - யோகத்தைச் சாதனமாகக் கொள்ளவேண்டுமென்றால் எவனாவது ஒருத்தன் எப்பொழுதும் அசையாமல் எல்லாவற்றையும் அறிந்து கொண்டு, பட்டகட்டையைப்போல் இருந்தான் என்றால் அவனைப் பிடித்துக்கொள்ளவேண்டும். அவனைப் பிடித்துக்கொண்டால் நாம் கரை ஏறலாம். எல்லாரும் எல்லாம் அறிந்து கொண்டு, பட்டகட்டை மாதிரி இருக்கிறார்கள் என்றால் சுவாமி என்று ஒருத்தனை நினைக்கவே வேண்டாம். ஆனால் நாம் எல்லாரும் ஏதாவது ஒன்றைப்பற்றிச் சதா கவலைப்பட்டுக் கொண்டே இருக்கிறோம். மனசு ஆடிக்கொண்டே இருக்கிறது. கஷ்டம், துக்கம் இவைதான் நமக்கு உண்டாகின்றன. ஆனந்தம் என்பதே இல்லை. யார், யாரைப் பிடித்துக்கொண்டு கரையேறுவது? கரையேறுவதுதான் ஆனந்தம் என்று சொல்கிறோம். ஆகவே நாம் கடைத்தேறுவதற்கு ஈசுவரன் என்று ஒருவன் இல்லை என்றால் நம்மால் அந்த நிலையையே அடைய முடியாமல் போய்விடும்.

நல்ல ஞானம் வர வேண்டும். கத்திமுனை போன்ற சூக்ஷ்மமான அறிவு உடையவனாக இருந்துகொண்டே, சித்தத்திலே அசைவு, கஷ்டம், காமம் எல்லாம் உண்டுபண்ணும்படியான உணர்வு வந்தாலும் அதை உணர்ந்துகொண்டே - சித்தத்தில் அசைவு இல்லாமல் கஷ்டம் இல்லாமல் காமத்தினால் கஷ்டப்படாமல் சித்த விருத்தி நிரோதம் பண்ணிச் சதா ஆனந்தமாகச் சோர்வு இல்லாமல் காரியங்களை நன்றாகச் செய்யக்கூடிய நிலை நமக்கு வர வேண்டும். அதற்கு ஒன்றைப் பற்ற வேண்டும். அப்படி ஒருத்தன் இல்லாது போனால் யாரைப் பிடித்துக் கொண்டு நாம் அந்த மாதிரி நிலையை அடைகிறது? ஒருவனும் இல்லையென்றால் மோக்ஷத்தை அடைய ஒருத்தருக்கும் வழி இல்லாது போகும். ஆகையால், 'அப்படிப்பட்ட சகல உத்தமமான குணங்களும் பூர்ணமாக இருந்து, ஞானத்தின் எல்லையிலே இருக்கும்படியான வஸ்து ஒன்று உண்டு; அந்த ஒன்றுதான் ஈசுவரன் என்று நினை' என்றார்கள்.

அதனால்தான் ஈசுவரனுக்குரிய லக்ஷணங்களைச் சொல்லும் போது, 'அவன் நித்திய சுத்தன், நித்திய புத்தன், நித்திய முக்தன்' என்றெல்லாம் சொன்னார்கள். அவன் எப்போதும் சுத்தன்; நமக்கு மிகுதியான அழுக்கு இருக்கிறது. மலங்களைப் பூசிக்கொண்டிருக்கிறோம். அழுக்குப் போகவேண்டுமென்றால் அழுக்கைப் போக்கும்—துடைக்கும்—ஒரு வஸ்து வேண்டும். அது இல்லை

என்றால் அழுக்கு எப்படிப் போகும்? அழுக்கை, மலத்தைப் போக்கும் அந்த வஸ்துதான் ஈசுவரன்.

சஞ்சலமாகிற சேற்றில் வழுக்கி விழுந்துகொண் டிருக்கிறோம். சேற்றிலிருந்து எழுந்திருக்க வேண்டுமென்றால் சேற்றில் நம்மைப்போலப் புதைபடாமல் கரையில் இருக்கும் ஒரு கெட்டியான வஸ்துவைப் பிடித்துக்கொண்டால்தான் கரை யேற முடியும். அந்தக் கெட்டியான வஸ்துவே ஈசுவரன்.

அவன் ஜகத்துக்குச் சிருஷ்டிகர்த்தாவாகவோ பலதாதா வாகவோ இருந்துவிட்டுப் போகட்டும். அதை இல்லை என்று நாம் சொல்ல வரவில்லை.

நம்முடைய அழுக்கையெல்லாம் போக்கி நாம் சுத்தமாக இருக்க வேண்டுமென்றால், நம்முடைய மனத்தில் சஞ்சலங்கள் எல்லாம் போய் நம்முடைய மனம் கெட்டியாக ஸ்திரமான வஸ்துவாக வேண்டுமென்றால் அவன் கெட்டியானவனாக இருக்கவேண்டும். சாஸ்திரங்கள் அவனைப் போய்ச் சரணடை கிற இடத்தில் அவன் இப்படிப்பட்ட உத்தமமான குணங்கள் நிரம்பினவனாகத்தான் சொல்லி அவனைப் பிடித்துக்கொள் கின்றன.

भवाय देवाय नमः ।
शर्वाय देवाय नमः ।
ईशानाय देवाय नमः ।
पशुपतये देवाय नमः ।
रुद्राय देवाय नमः ।
उग्राय देवाय ननः ।
भीमाय देवाय नमः ।
महते देवाय नमः ।

பவாய தேவாய நம: |
ஶர்வாய தேவாய நம: |
ஈஶாநாய தேவாய நம: |
பஶுபதேயே தேவாய நம: |
ருத்ராய தேவாய நம; |
உக்ராய தேவாய நம: |
பீமாய தேவாய நம: |
மஹதே தேவாய நம: |

என்று சொல்லப்படுகிறது. அவனுக்கு ருத்திரன் என்று பெயர். ருத்திரன் என்றால் இரண்டு மூன்று அர்த்தங்கள்

உண்டு. 'ஊரை எல்லாம் அழ அடிக்கிறவன்' என்று ஓர் அர்த்தம். அழுகையை எல்லாம் போக்குகிறவன்' என்று ஓர் அர்த்தம். இன்னும் பல அர்த்தங்கள் உண்டு. ஜனங்களுடைய பயத்தையெல்லாம் நாசம் செய்கிறவனும் அவன்தான். ஒவ்வொன்றையும் கிடுகிடு என்று ஆட்டி வைக்கிறபோது அதைப் பார்த்தே ஜனங்கள் பயத்தால் நடுங்கும்படியாகச் செய்கிறவனும் அவன்தான்.

எதைக் கண்டு ஜனங்கள் நடுங்கினாலும் நடுங்காவிட்டாலும் முதலிலே மரணம் என்றால் நடுங்குகிறார்கள். அதிலே சந்தேகம் இல்லை. 'உனக்குத் தேதி கிட்டிவிட்டது' என்றால் போதும்; அதைக் கொஞ்சம் நீட்டிக்கொள்ள எவ்வளவு பிரயத்தனம் பண்ணமுடியுமோ அவ்வளவையும் நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் பண்ணுகிறோம். மரணம் என்றால் பெரிய பயமாக நமக்கு இருக்கிறது.

திரவிய நஷ்டம், அவமானம், அநேக விதமான குடும்பச் சிரமங்கள் ஆகியவற்றைக் கண்டு நாம் பயப்படுகிறோம். இப்படிப் பலவிதமான பயத்தையும் கொடுக்கிறவன் ஈசுவரன்தான். இளங்குழந்தையாக நாம் இருந்தால் நம்மைத் திருத்தப் பயமுறுத்தித்தானே ஆகவேண்டியிருக்கிறது? அப்படிப் பயமுறுத்துவதும் குழந்தைகளுடைய க்ஷேமத்திற்காகத்தான் என்று வைத்துக் கொள்ளவேண்டும். ஈசுவரன், குழந்தைகளாகிய நம்மைப் பயமுறுத்த வேண்டிய அவசியம் நேர்கிறது: கடைசியில் அவனிடம் நிறைந்த அன்பு வந்துவிட்டால் எல்லாத் துக்கங்களும் நிவிருத்தியாகின்றன. நம்மைப் பட்டகட்டை யாக்குவதற்காகவே அவன் பட்டகட்டையாக இருக்கிறான். வேதம் ஒரு வாக்கியத்தில் அவனைப்பற்றிச் சொல்லுகிறது.

அவன் எப்படி இருக்கிறான்? மரம்போலக் கொஞ்சங்கூட அசைவு இல்லாமல் இருக்கிறான். வ்ருக்ஷம்போல் ஸ்தப்தனாக இருக்கிறான். எவ்வளவு சிரமப்படுத்தினாலும் ஆடாமல் அசையாமல் நலுங்காமல் ஸ்மரணை இருப்பதாகக்கூடத் தெரியாமல் இருக்கிறான். அதனால்தான் ஸ்தாணு என்று அவனுக்குப் பெயர், ஸ்தாணு என்றால் பட்டகட்டை என்பது பொருள். சுசீந்திரத்தில் இருக்கும் ஈசுவரனுக்கு, 'ஸ்தாணு' என்று பெயர்.

ஸ்தாணுவானது - உலர்ந்த கட்டையானது - எப்படி இருக்குமோ அப்படி அவன் இருக்கிறான்.

விச்வம் என்றால் பிரபஞ்சம். அவன்தான் பிரபஞ்சத்திற்கு மேற்பட்டவன்.

அவன் மகரிஷி, சதா அபிஷேகம் செய்துகொண்டு சடை போட்டுக்கொண்டிருக்கிறான். பட்ட கட்டைக்கு ஸ்தாணு

என்று பெயர். இவனும் ஸ்தாணு. இவனைச் சுற்றிக்கொண்டு இருக்கிறாளே, அவள், இலை இல்லாத கொடி. அவளுக்கு அபர்ணா (அபர்ணா) என்று பெயர். பர்ணம் என்றால் இலை; அபர்ணா-இலை இல்லாதவள். பட்ட கட்டையைச் சுற்றி அந்த இலை இல்லாத கொடி இவ்வாறு சுற்றிக்கொண் டிருக்கிறது.

ஈசுவரன் பட்ட மரம் மாதிரி. எது வந்தாலும், எத்தனை சிரமங்களை உண்டாக்கினாலும் அசைவு இல்லாமல் சூடு இல்லாமல் சுரணை இல்லாமல் இருக்கிறான். அப்படி என்றால், 'அவனுக்கு அறிவு இல்லை; அதனால் சுரணை இல்லை; எதுவும் உறைக்காமல் இருக்கிறான்' என்று நினைக்கலாமா? அவன் சர்வக்ஞன்.

'அவன் எனக்கு நல்ல நினைவை உண்டுபண்ண வேண்டும். நல்ல நினைவு, ஞானம் எல்லாம் உடையவனாக அவன் இருக்கிறான்' என்று சொல்கிறது வேதம்.

குறைகுடம் துளும்பும் என்று சொல்வார்கள். ஜலம் இல்லாத குடமாக இருந்தாலும் துளும்பாது; பூர்ணமாக நிரம்பி இருந்தாலும் துளும்பாது. ஈசுவரன் பூரணமான ஞானம் நிரம்பிய சமுத்திரமாக இருக்கிறான். துளும்புகிற, ஓசைப்படுத்துகிற நமது ஞானத்தை நிரப்பித் துளும்பாமல் ஒலி எழுப்பாமல், பூர்ணமாக நிறையும்படி செய்கிறான்.

இப்படி எப்போதும் சுத்தமாக ஆடாமல் அசையாமல் கடினமாகப் பூர்ணமான ஞானமயமாகவே ஒரு வஸ்து இருக்கிறது என்பது நமக்குக் கண்ணிற்குத் தெரியாவிட்டாலும் நினைப்பிலாவது நாம் நம்பவில்லை என்றால் நாம் கடைத்தேறுவற்கு வழியில்லை.

அதற்காகத்தான் ஈசுவரன் வேண்டும். நாம் அவனையே நினைத்துப் பக்தி பண்ணவேண்டும். அவனையே நாம் நினைத்தால் நாம் அவனாக ஆகக்கூடும். குறையில்லாத ஒரு பூர்ணமான வஸ்துவை நாம் நினைத்தால் நாமும் நிரம்பியவர்கள் ஆகிவிடுகிறோம். நம் குறைகள் எல்லாம் நிவிருத்தி ஆகிவிடுகின்றன. ஞானமயமான வஸ்து ஒன்றை நினைத்தால் நாமும் ஞானம் நிரம்பியவர்கள் ஆகிவிடுகிறோம்; நம் அஞ்ஞானம் எல்லாம் நிவிருத்தியாகிவிடுகிறது. எது வந்தாலும் சித்தத்திலே கொஞ்சங்கூட அசைவு இல்லாத வஸ்து ஒன்றை நினைத்தால் நாமும் சித்தவிருத்தி நிரோதம் செய்தவர்கள் ஆகிவிடுகிறோம். நம்முடைய மனசு படுகிற சஞ்சலங்கள் எல்லாம் நிவிருத்தி ஆகிவிடுகின்றன.

அதனால்தான், 'ஈசுவரன் நித்திய சுத்தன், நித்திய புத்தன், நித்திய முக்தன்; பட்ட மரம்போன்ற ஸ்தாணு; ஸர்வக்ஞன்' என்று சொல்லி, 'அவனிடத்தில் பக்தி பண்ணு, அவனிடத்தில் அன்பு செய்' என்று சொன்னார்கள். நாம் ஒவ்வொருத்தரும்

அவனிடம் பக்தி செய்வது நம்முடைய அழுக்குகளைப் போக்கிக் கொள்ளத்தான்; நம்முடைய அஞ்ஞானத்தைப் போக்கிக் கொள்ளத்தான்; மனத்திலே உள்ள குறையை நீக்கிக்கொள்ளத் தான்; கஷ்டம், துக்கம், மோகம், காமம் எல்லாவற்றினுலும் நம் மனசு சஞ்சலப்படாமல் அலைமோதாமல் ஆடாமல் அசையா மால் பட்டமரம் மாதிரி இருப்பதற்காகத்தான்; சித்தவிருத்தி நிரோதம் செய்து சதா ஆனந்தமாக உற்சாகமாக நம் காரியங் களைச் செய்வதற்காகத்தான், அந்த ஸ்தாணுவைப் பற்றிக் கொண்டு பக்தி செய்யவேண்டும்.

'பற்றுக பற்றற்றுன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'

என்று திருக்குறளில்கூடச் சொல்லியிருக்கிறது, எவன் ஒருவன் பற்றுக்களையெல்லாம் அறுத்துவிட்டுப் பற்றற்றவனுக இருக் கிருனே அவனை நாம் பற்றிக்கொண்டால் நாமும் பற்று அற்ற வர்கள் ஆகிவிடுகிருேம். நம்முடைய பற்றுக்களும் நம்மை விட்டுப் போகும் என்கிருர் திருவள்ளுவர்.

இதற்காகத்தான் நாம் ஈசுவர பக்தி செய்யவேண்டும். அவன் ஜகத்துக்குக் கர்த்தாவாக இருக்கலாம்; பலதாதாவாக இருக்கலாம்: அதனுல் எல்லாம் நமக்கு எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. அதற்காக அவனிடம் பக்தி பண்ணவேண்டியதும் இல்லை, அவன் தன் காரியத்தைத் தன் சங்கல்பம்போலச் செய்கிருனே தவிர நம்மைக் கேட்டுக்கொண்டு செய்யப்போவதில்லை.

அவனிடம் போய் நாம் நம் குறைகளைச் சொல்கிருேமே, அதுகூடச் சரியாகப் படவில்லை. நம் கஷ்டம் அவனுக்குத் தெரியாமலில்லை. எல்லாம் தெரிந்த சர்வக்ஞன் என்று நாமே அவனைச் சொல்லிவிட்டு, 'நம்முடைய கஷ்டங்கள் அவனுக்குத் தெரியவில்லை. அதனுல்தான் முறையிட்டுக்கொள்கிருேம்' என்ருல், நமக்காக அவன் ஞானத்தைக் குறைக்கிருேம். எல்லாம் தெரிந்தவன் என்பதை நம்பிவிட்டால், 'நம் கஷ்டங்கள் குறைகள் எல்லாம் அவனுக்குத் தெரியும்' என்ற நம்பிக்கையும் வேண்டும். ஆகவே தனித் தனியாகச் சென்று நாம் முறை யிடடுக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. 'அவன் எல்லாம் தெரிந்தவன்தான், எவன் தன்னிடம் வந்து, 'ஐயோ அப்பா!'' என்று கத்துகிருனே அவனுக்குத்தான், 'தொலைகிருன்; வந்து பிராணனை வாங்குகிருனே'' என்று கொஞ்சம் கருணை செய்கிருன்' என்று சொன்னுல் அவனைக் கருணா சமுத்திரம் என்று சொல்வ தில் குறை ஏற்படுகிறது.

संसाराख्यविशालनाटकगृहे सर्वाणि रूपाण्यहो
कृत्वाऽधोमुखयोनिकायवनिकां निहृत्य निर्गत्य च ।

सर्वज्ञस्य दयाकरस्य तव देवाग्रे चिरं नृत्यतः
श्रान्तस्यापि ममालमित्युचितवागेकास्तु विश्राणनम् ॥

ஸம்ஸாராக்யவிஶாலநாடகக்ருஹே ஸர்வாணி ரூபாண்யஹோ
க்ருத்வாதோமுகயோநிகாயவநிகாம் நிர்ஹ்ருத்ய நிர்கத்யச ।
ஸர்வக்ஞஸ்ய தயாகரஸ்ய தவ தேவாக்ரே சிரம் ந்ருத்யத:
ஶ்ராந்தஸ்யாபி மமாலமித்யுசிதவாகேகாஸ்து விஶ்ராணநம் ॥

என்று ஸ்ரீதர ஐயாவாள் சொல்வதுபோல அவன் கருணா சமுத்திரமாக இருந்தால் ஞான சமுத்திரமாக இருந்தால் அவனிடத்தில் போய்ச் சொல்ல வேண்டாம். காரியத்திற்காக அவனிடம் போகவேண்டியதில்லை. ஆனாலும் போய்ப் பிரார்த்திக்கிறார்கள். 'கண்ட இடத்தில் போய்ப் பிரார்த்திக்காமல் உபயோகமற்றவனாக இருக்கிறவனிடத்தில் போய்க் கெஞ்சிக் குழைந்து நிற்காமல் எல்லாம் தெரிந்த சர்வேசுவரனிடத்தில் சென்றுதானே முறையிட்டுக் கொள்கிறார்கள்?' என்ற எண்ணத்தால் நாம் அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

இல்லையென்றால் அவனிடத்தில் போய் அது வேண்டும் இது வேண்டும் என்று கேட்பதற்கு நமக்கு வாய் இல்லை. அப்படிப் போய்க் கேட்பதிலும் அர்த்தம் இல்லை. அதன் பொருட்டு அவனிடம் பக்தி பண்ணவும் வேண்டாம். நீலகண்ட தீக்ஷிதர் தம்முடைய ஆனந்தஸாகர ஸ்தவம் என்ற ஸ்தோத்திரத்தில் மதுரை மீனாக்ஷியிடம் சென்று சொல்கிறார்—

आवेद्यतामविदितं किमथाप्यनुक्तं
वक्तव्यमान्तररुजोपशमाय नालम् ।
इत्यर्थ्यसे किमपि तच्छ्रवणे निधातुं
मातः प्रसीद मलयध्वजपाण्ड्यकन्ये ॥

ஆவேத்யதாமவிதிதம் கிமதாப்யநுக்தம்
வக்தவ்யமாந்தரருஜோபஶமாய நாலம் ।
இத்யர்த்யஸே கிமபி தத் ஶ்ரவணே நிதாதும்
மாத: ப்ரஸீத மலயத்வஜபாண்ட்யகந்யே ॥

'உன்னிடத்தில் தெரிவிக்க வேண்டுமென்று அபிப்பிராயம் இருக்கிறதே, அதிலே ஒரு கருத்து எனக்கு இருக்கிறது.'

अविदितं किम् ?

அவிதிதம் கிம்?

'அப்படியானால் அது என்ன?-என்று கேட்கிறாய்? உனக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. உனக்குத் தெரியாத அபிப்பிரா

யத்தை நான் உன்னிடம் சொல்ல வந்தேன் என்று நினைக்காதே.'

'இல்லை யென்றால் எதற்காகச் சொல்ல வேண்டும்?'

'இல்லை இல்லை. உனக்குத் தெரியுமோ தெரியாதோ அதைப்பற்றி நான் யோசிக்கவில்லை. எல்லாம் உனக்குத் தெரியும் என்பதே என் அபிப்பிராயம். ஆனாலும் எதற்காகச் சொல்ல வேண்டும் என்று வந்திருக்கிறேன் என்றால் ஏதோ ஒன்றைச் சொல்ல வேண்டுமென்று நினைத்துவிட்டால் அதைச் சொல்லாமல் இருந்தால் உள்ளே என்னவோ பண்ணுகிறது; என்னவோ சொல்லவேண்டுமென்று நினைத்தோமே என்று மனசு கிடந்து உள்ளே அரிக்கிறது.'

अनुक्त वक्तव्यमान्तररुजोपशमाय नालम् ।

அநுக்தம் வக்தவ்யமாந்தரருஜோபஶமாய நாலம் |

'அதைச் சமனம் பண்ணுவதற்கு நான் உன்னிடத்தில் சொல்லிவிடுகிறேன். நீ கேட்டுக்கொண்டு மாத்திரம் இரு.'

इत्यर्थ्यसे किमपि तच्छ्रवणे निधातुं
मातः प्रसीद मलयध्वजपाण्ड्यकन्ये ।

இத்யர்த்யஸே கிமபிதத் ஶ்ரவணே நிதாதும்
மாதঃ ப்ரஸீத மலயத்வஜபாண்ட்யகந்யே |

'மலயத்வஜ பாண்டியன் பெண்ணே! மீனாக்ஷி! இந்தக் காரணத்திற்காகத்தான் நான் சொல்ல வந்தேன். சொல்லி விடுகிறேன் என்று' மீனாக்ஷி அம்பாளிடத்தில் பிரார்த்தித்தார்.

ஆகவே ஈசுவரனிடத்தில் நாம் சொல்லிக்கொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை. காரியங்களில் நமக்கும் அவனுக்கும் உறவு இல்லை. அவன் காரியத்தை அவன் பண்ணிக்கொண்டு போகிறான். அதில் தலையிட நமக்கு அதிகாரம் இல்லை.

நமக்கு மனசு இருக்கிறது. அது ஒரு கணங்கூட ஓர் இடத்தில் நிற்காமல் சதா திரிந்துகொண்டே இருக்கிறது. எவ்வளவு துக்கம் உண்டோ எவ்வளவு கஷ்டம் உண்டோ எவ்வளவு காமம் உண்டோ அவ்வளவுக்கும் உட்பட்டு அழுக்கைப் பூசிக்கொண்டு மகா சஞ்சலப்படுகிறது. ஆனந்தம் என்பதே என்னவென்று தெரியாமல் இருக்கிறது. நமக்கு எப்போதும் ஆனந்தம் உண்டாக வேண்டுமென்றால் சித்த விருத்தி நிரோதம் பண்ணவேண்டும். பகல் என்றால் ராத்திரி இருக்கிறது. நல்ல வெயில் என்றால் மழை இருக்கிறது. ஜடம் என்றால் உயிர்கள் இருக்கின்றன. இப்படி எல்லாவற்றுக்கும் மாற்றுப் பொருள் இருக்கிறது என்பதிலிருந்தே ஒரே அழுக்கு, ஒரே துக்கம், இப்படிப்பட்ட ஜீவாத்மாக்கள் இருக்கும்போது இதற்கு நேர் விரோதமாக எப்போதும் பரிசுத்தமாகப் பரம

ஞானமாகப் பரம ஆனந்தமாகச் சித்தத்தில் கொஞ்சங்கூட அசைவு இல்லாத பட்ட மரம்போல், ஒரு பரமாத்மா இருக்க வேண்டும் என்பது தெரிகிறது. அது இல்லையென்றால் இந்த ஜீவாத்மாக்கள் கடைத்தேற வழியே இல்லை. சுத்த, நித்திய, முக்தப் பொருளாக இருக்கிற ஈசுவரனிடத்தில் நாம் பக்தி செய்வதே நாமும் அந்த மாதிரியே ஆகவேண்டும் என்பதற்காகத் தான். உலகத்தில் பல பிராணிகளுடைய உடல்களிலோ செடி கொடிகளின் அவயவங்களிலோ உள்ள ஒவ்வொரு பாகத்தின் ஸ்ருஷ்டிக்கும் பிரயோஜனம் இல்லாமலில்லை. அப்படியிருக்க உள்ளறிவும் புற அறிவுமுள்ள மனித ஸ்ருஷ்டி, பேரானந்தமென்னும் எல்லையை அடைவதான பயனில்லாவிடின் பயனற்றதாகும். இவனை அந்த நிலையை எய்துவிக்கக் கருணைக் கடலும் பேரறிவும் பேரானந்தமுமான பரம்பொருள் முக்காலத்தும் விளங்காநின்று தன்மயமாக்கும் அருள் பாலிக்காமல் இருந்தால் உலகில் காணப்படும் ஸ்ருஷ்டிகளுக்கே அர்த்தமில்லை. எல்லா ஸ்ருஷ்டிகளுக்கும் சிகரமான மானிட ஸ்ருஷ்டிக்குப் பிரயோஜனமில்லை. பிரயோஜனமற்ற ஸ்ருஷ்டி இயற்கையில் இல்லவுமில்லை. இயற்கையின் ஆராய்ச்சிக்கும் ஈசனே முடிவு. அதற்காகத்தான் தெய்வபக்தி.

'ஈசுவரனைக்காட்டிலும் குரு பெரியவர்; ஈசுவர பக்தியைக் காட்டிலும் குரு பக்தி விசேஷம் என்கிறார்களே, ஏன்!' என்று கேட்டால், ஈசுவரனை யாரும் பார்க்கவில்லை. பிரத்தியக்ஷமாக நாம் பார்க்கக்கூடிய ஒரு மனிதர் எப்போதும் சுத்தமாக ஞானம் உடையவராக அசைவு இல்லாத சித்தம் உடையவராக அப்பழுக்கு இல்லாமல் நமக்குக் கிடைத்துவிட்டால் நாம் எந்தக் காரியத்திற்காக ஈசுவரனிடத்தில் போகிறோமோ அந்தக் காரியம் அவரிடம் பக்தி செலுத்தினாலே முடிந்துவிடுகிறது; அதனால்தான்.

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः ।

குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேஶ்வர: |

என்று சொல்லியிருக்கிறார்கள்.

ஜகத்தைச் சிருஷ்டிப்பது, பரிபாலிப்பது, போன்ற பல காரியங்கள் ஈசுவரனுக்கு இருக்கின்றன. அவை எல்லாம் குருவுக்கு இல்லை. அவனுக்கு ஆபீஸ் உண்டு; இவருக்கு ஆபீஸ் இல்லை. ஆபீஸ் இருக்கிறவனிடம் போய்த் தொந்தரவு கொடுப்பதைவிட ஆபீஸ் இல்லாமல் இருக்கிறவரிடம் நம் காரியத்தை மிக எளிதாக முடித்துக்கொண்டு விடலாம். ஈசுவரனுக்கு என்ன என்ன உத்தமமான குணங்கள் எல்லாம் இருக்கின்றனவோ அவை எல்லாம் இந்தக் குருவினிடத்தில் இருக்கின்றன.

இவர் சுத்தமானவர்; பொய் சொல்லாதவர்; வஞ்சனை தெரியாதவர்; இந்திரியங்களை எல்லாம் வென்றவர்; மகா ஞானி. இவரைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். ஆகவே குருவின் திருவடிகளைப் பற்றிக்கொண்டு பக்தி செய்ய ஆரம்பித்து விட்டால் ஈசுவர பக்தியினால் நமக்கு என்ன அநுகூலங்கள் உண்டாகின்றனவோ அத்தனையும் சுலபமாக உண்டாகிவிடும். அதனால்தான் குரு பக்தி உயர்ந்தது என்று சொன்னார்கள்.

ஆனால் தெய்வபக்தியை மறக்கக்கூடாது என்பதற்குக் காரணம், இந்தக் குருவை இவனோடு சேர்த்து வைப்பதே தெய்வந்தானே? தெய்வ அநுக்கிரகம் இல்லாவிட்டால் இந்தக் குருவை இவன் எப்படி அடைவான்.

दुर्लभं त्रयमेवैतद् दैवानुग्रहहेतुकम् ।
मनुष्यत्वं मुमुक्षुत्वं महापुरुषसंश्रयः ॥

துர்லபம் த்ரயமேவைதத் தைவாநுக்ரஹஹேதுகம் |
மநுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ச்ரய: ||

தக்ஷிணாமூர்த்தி குரு. எல்லோருக்கும் எக்காலத்திலும் குரு

स पूर्वेषामपि गुरुः कालेनानवच्छेदात् ।
ஸ பூர்வேஷாமபி குரு: காலேநாநவச்சேதாத் |

இந்தக் குருவுக்கும் ஞானம் எப்படிப் பூர்ணமாக ஏற்பட்டிருக்கும்? அதனால்தான் தெய்வத்தை மறக்கக்கூடாது என்றார்கள். குரு, அரை குறையாக இருந்தாலும் அவரை வழிகாட்டியாக வைத்துக்கொண்டு ஈசுவரபக்தி செய்தால் நம்முடைய காரியம் பலிதமாகிவிடும். ஆகவே எப்போதும் குருபக்தி இருக்க வேண்டும். பூர்ணமான ஞானம் உடையவராக, எப்போதும் வாக்கு, மனம், காயம் எல்லாம் சுத்தமானவராக அசைவு இல்லாத சித்தம் உடையவராக நமக்குத் தெய்வ அநுக்கிரகத்தினாலே ஒரு குரு கிடைத்துவிட்டார் என்றால் நமக்கு அவரே போதும்; நம் காரியமாகத் தெய்வத்தினிடம் போகவேண்டிய அவசியமே இல்லை. வியாசரைப்பற்றிச் சொல்கிறது,

अचतुर्वदनो ब्रह्मा द्विबाहुरपरो हरिः ।
अफाललोचनः शम्भुः भगवान् बादरायणः ॥

அசதுர்வதநோ ப்ரஹ்மா த்விபாஹுரபரோ ஹரி: |
அபாலலோசந: ஶம்பு: பகவாந் பாதராயண: ||

என்பார்கள். பாதராயணர் என்பது வியாசருக்குப் பெயர். அவர் "அசதுர்வதநோ ப்ரஹ்மா' நான்கு முகம் இல்லாத பிரம்மா, "த்விபாஹு: அபரோ ஹரி:' இரண்டு கையுள்ள ஹரி, வேறு ஒரு விஷ்ணு; 'அபால லோசந: ஶம்பு:' நெற்றிக் கண் இல்லாத

சிவன்: இப்படிப்பட்ட ஒரு குரு கிடைத்துவிட்டால் இவரைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். ஆகவே குருவைவிடச் சிரேஷ்டமானவர் இல்லை. நமக்கு அவரிடத்தில் பூர்ணமான நம்பிக்கை ஏற்பட வேண்டும். அது நிஜமான நம்பிக்கையாகவும் இருக்க வேண்டும். நமக்கு அவரிடத்தில் நம்பிக்கை வந்துவிட்டால் சுவாமிகூட வேண்டாம். இந்த நம்பிக்கையே அவரிடத்தில் நாம் வைக்கிற பக்தியே நம்மைக் கடைத்தேறச் செய்துவிடும்.

எப்போதும் சுத்தமாகக் குரு இருக்கவேண்டும். வீத ராக-ராக-ஆசை ஒன்றும் இல்லாதவராக - இருக்கவேண்டும். அப்படி ஒருத்தர் நமக்குக் குருவாக அகப்பட்டபோதுதான் நாம் அவரை வழிகாட்டியாகக் கொண்டு ஈசுவர பக்தி பண்ண வேண்டும்.

வைஷ்ணவர்களுக்கு, ஆசார்ய பக்திதான் மிகவும் பிரதானம். ஈசுவர அபராதம் பண்ணினால் ஈசுவரனிடத்திலேயே போய் மன்னிப்புக் கேட்கவேண்டுமென்பது இல்லை; ஆசார்யான் மன்னித்துவிட்டால் ஈசுவரனுடைய கோபம் தணிந்துவிடும். ஆனால் குருவினிடத்தில் போய்த்தான் அந்த அபசாரத்துக்கும் நிவிருத்தி தேடிக்கொள்ள வேண்டும் என்று ஸ்வாமியே சொல்லி விடுவார்.

அதனால்தான் குரு பக்தியை மிகவும் விசேஷமாகச் சாஸ்திரங்கள் சொல்கின்றன. உத்தமமான குரு கிடைக்கவில்லை என்றால் அரை குறையாக இருந்தாலும் அரை வழிகாட்டியாக வைத்துக்கொண்டு ஈசுவர பக்தி செய்யவேண்டும். நாம் செய்வது ஈசுவரனுக்காக அல்ல. நம்மால் அவனுக்கு ஒரு காரியமும் இல்லை.

நாம் அழுக்கு உடையவர்களாக இருக்கிறோம்; சஞ்சலம் உடையவர்களாக இருக்கிறோம். மனசை ஒரு நிமிஷங்கூட ஓர் இடத்தில் நிறுத்த முடியாதவர்களாக இருக்கிறோம். எப்போதும் சுத்தமாக நிரம்பிய ஞானம் உடையவனாக அசங்காமல் ஆடாமல் பட்ட கட்டை மாதிரியாக இருக்கிற அவனை நாம் நினைத்தால் நாம் நினைக்கிறபடியே, அவனாக நாம் ஆகிவிடுவோம். ஈசுவரனைத்தான் அப்படி நினைக்க வேண்டும் என்பது இல்லை. இப்படிப்பட்ட குணங்கள் உடையதாக எதை நினைத்துக் கொண்டாலும் நம்மைப் போன்ற ஒரு மனிதரையே இவ்வளவு குணங்கள் உடையவராக, அவரையே குருவாக நினைத்துப் பக்தி செய்தாலும் நாமும் அப்படியே ஆகிவிடுவோம்.

இதற்காகத்தான், 'குரு பக்தி வேண்டும்; ஈசுவர பக்தி வேண்டும்' என்று நாம் சாஸ்திரங்கள் சொல்கின்றன. இந்தக் காலத்தில் இவை இரண்டும் குறைந்து வருகின்றன. குருகுலப் படிப்பு இல்லாமல் குருபக்தி வளராது. ஈசுவரபக்தியும் வளராது.

இப்போது கதர்தான் போடவேண்டும் என்ற பிரசாரம் செய்கிருர்கள். எல்லோரும் கதர் போடவில்லை. 'சர்க்காவில் நூற்கவேண்டும்: கைக்குத்தல் அரிசியைத்தான் சாப்பிட வேண்டும்' என்ருல் எல்லாராலும் அதைப் பின்பற்ற முடியவில்லை. ஆனாலும் இரண்டொருவர் இருக்கத்தான் இருக்கிருர்கள். 'நான் கதர்தான் உடுத்துக்கொள்வது', 'நான் கைக்குத்தல் அரிசிதான் சாப்பிடுவது' என்று சொல்கிறவர்களைப் பார்க்கிருேம்.

அப்படி, 'குருகுலப் படிப்புத்தான் வேண்டும்' என்று சொன்னால் அது இந்தக் காலத்தில் சிரமந்தான். பூரணமாகக் கொண்டுவர முடியும் என்ற நம்பிக்கையில் சொல்லவில்லை. அப்படி வந்துவிட்டால் நல்லதுதான். ஆனாலும் இதுமாதிரியான ஒரு முறை இந்த நாட்டில் இருக்கிறது என்பதே தெரியாமல் அடியோடு அழிந்துபோக விடக்கூடாது அல்லவா? மியூசியத்தில் வைக்கிற மாதிரியாவது, 'நான் குருகுல வாசம் செய்து படித்தேன்' என்று வருங்காலத்தில் சொல்லிக்கொள்வதற்காகவாவது, பத்துப் பேர்கள் அப்படிப் படிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். விதை முதலையாவது ரக்ஷிக்கவேண்டும்.

ஆதித்யம் முதலிய சில தர்மங்களை அததக் காலத்தில் சிலர் அநுஷ்டானத்தில் வைத்துக்கொண்டிருந்தார்கள். சாப்பிடப் போவதற்குமுன் யாராவது அதிதி ஊருக்கு வந்திருக்கிருரா என்று பார்த்து, அவரை அழைத்துக்கொண்டுதான் சாப்பிடப் போவார்கள். 'இராப் பிச்சை யாராவது இருக்கிருர்களா?' என்று கூவி அழைத்துவிட்டுத்தான் உள்ளே போவார்கள். இப்படிச் செய்தால் பஞ்சமே வராது, பஞ்ச நிவாரண வேலைக்கே அவசியம் இராது. இத்தகைய பழக்கங்களெல்லாம் போய்க்கொண்டு வருகின்றன.

யாராவது ஒரு பையன் குருவினிடத்தில் சென்று அவருக்குச் சுச்ருஷை செய்துகொண்டு படித்து வருகிருன் என்று தெரிந்தால் அவர்கள் அவனுக்கு அங்கங்கே கொஞ்சம் உதவி செய்தாலும் போதும். பெரிய ஸ்தாபனம் வேண்டாம். வேண்டாம் என்ருல் ஏற்படுத்தக் கூடாது என்பதற்காகச் சொல்லவில்லை. அது தனியாக இருக்கட்டும். கூட நாம் ஒவ்வொருவரும் நம்மாலான உதவிகளைத் தனிப்பட்ட முறையில் செய்யவேண்டும் என்ற மனோபாவம் வேண்டும். அது அவசியம்.

குரு பக்தி வேண்டும என்ருல் குருகுலப் படிப்புக் கொஞ்சம் அவசியந்தான். நம்மால் முடிந்த அளவு அதற்கு வசதி செய்வோம். பலன், பத்துப் பேர்களுக்காவது ஏற்படும். அதுதான் நமக்கு விதை முதல். உலகம் க்ஷேமமாக இருக்கக் குருபக்தியும் ஈசுவரபக்தியும் அழியாமல் இருந்தால் போதும்.

14

# தீபாவளி

எல்லாப் புஸ்தகங்களைக் காட்டிலும் பகவத்கீதைக்கு ஒரு விசேஷம் அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. இதுமாதிரி ஞானத்தை உபதேசம் செய்கிற புஸ்தகங்கள் எவ்வளவோ இருக்கின்றன. பாரதத்தில் ஞானோபதேசம் செய்கிற கட்டங்கள் பல வருகின்றன. இன்னும் சிவபுராணம், ஸ்காந்தம் முதலியவற்றில் ஞானோபதேசம் செய்கிற இடங்கள் அதிகமாக இருக்கின்றன. ஆகமங்களிலும் இருக்கின்றன. இருந்தாலும் அவை எல்லாவற்றையும்விடப் பகவத்கீதைக்கு ஒரு தனி மதிப்பு இருப்பது ஏன்? பகவத்கீதையும் இதிகாசங்களின் ஒரு பாகந்தான். பாரதம், பாகவதம், ராமாயணம் இவைகளுக்கு எவ்வளவு பிராதான்யமோ அவ்வளவு பிராதான்யந்தான் பகவத்கீதைக்கும். இதற்குத் தனியாகப் பிராதான்யம் எதுவும் இல்லை. இதிகாச புராணங்களைக் காட்டிலும் ஸ்மிருதி முதலியற்றிற்கு அதிகப் பிராதான்யம் உண்டு. ஸ்மிருதியைக் காட்டிலும் வேதத்திற்கு அதிகப் பிராதான்யம் உண்டு. இருந்தாலும் பகவத்கீதைக்கு அதிக மதிப்பு இருக்கிறது; இதற்குக் காரணம் என்ன?

'இது ஒரு பிரமாண நூலா!' என்று கேட்டால், மற்ற நூல்களைக் காட்டிலும் இதை அதிகப் பிரமாணமானதென்று கொள்ள முடியாது. பிரமாண நூல்கள் என்ற முறையில் பார்த்தால் இதிகாச புராணங்களுக்கு உள்ள நிலையே பகவத்கீதைக்கும் உண்டு. ஞானோபதேசம் என்ற துறையில் பார்த்தாலும் எத்தனையோ இடங்களில் இதில் சொல்லப்பட்டிருப்பதற்குக் குறைவு இல்லாமல் பல கருத்துக்கள் சிவபுராணம், விஷ்ணு புராணம், பாரதம் முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. உபநிஷத்துகளுக்குங்கூடப் பகவத்கீதைக்கு ஏற்பட்டுள்ள கியாதி வரவில்லை. இதற்குக் காரணம் என்ன?

தற்காலத்தில் திருக்குறளைப் பற்றிப் பிரசாரம் பண்ணுகிற மாதிரி அந்தக் காலத்தில் பகவத் கீதையைப் பற்றி அதிகமாகப் பிரசாரம் பண்ணினார்களா? 'கீதா தினம்' என்று அங்கங்கே வைத்துப் பரிசு கொடுத்துக் கீதைக்குக் கீர்த்தி உண்டாக்கினார்களா? அதனால்தான் மற்ற எல்லாவற்றையும்விட அது

விசேஷமாக இருக்கிறதா? அப்படிச் சந்தேகப்படுவதற்கும் இடமில்லை.

பகவத்கீதைக்கு ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகள் காலத்திற்கு முந்தியே எத்தனையோ பேர் வியாக்கியானம் பண்ணியிருக்கிறார்கள்; ஆகையால் இந்தக் காலத்தில் பகவத்கீதையைப்பற்றி நிறையப் பிரசாரம் செய்வதனால்தான் அது அதிகக் கியாதியை அடைந்துவிட்டது என்று சந்தேகப்படுவதற்கு இல்லை. வெகு நாளாக இந்தக் கியாதி இருக்கிறது, நம் தேசத்தில் மாத்திரம் அல்ல. ஜாவா போன்ற தீவுகளில் உள்ளவர்கள்கூடப் பகவத்கீதையை அநுசரித்திருக்கிறார்கள். அது நம் தேசத்துப் புஸ்தகம் என்பதுகூட அவர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ? இப்போது அவர்கள் இஸ்லாமிய மதமாகப் போனபிறகுங்கூட ஏதாவது விசேஷம் என்றால் ராமாயணம், பாரதம் முதலியவற்றிலுள்ள கதைகளை நிழல் நாடகங்களாகப் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். நம்மைக் காட்டிலும் ஆஞ்சநேயர், ராமன், சீதை, கிருஷ்ணன் இவர்களை அதிகமாகக் கொண்டாடுகிறார்கள். அங்கும் பகவத்கீதை இருக்கிறது. பகவத்கீதையைக் காட்டிலும் எத்தனையோ பிரமாண நூல்கள் இருக்கின்றன. ஞானோபதேசம் செய்கிற நூல்களும் இருக்கின்றன. இருந்தாலும் இதற்கு ஒரு தனி விசேஷமும் கியாதியும் ஏற்பட்டிருக்கக் காரணம் என்ன என்று நானாகவே யோசித்துப் பார்த்தேன். எந்தக் காரணத்தினால் இதற்கு இவ்வளவு புகழ் வந்திருக்கிறது என்று ஊகம் பண்ணினேன்.

ஞானோபதேசம் பண்ணுவதாக இருந்தால் பண்ணுவதற்குரிய இடத்தில் சப்தமே இருக்கக்கூடாது; நிச்சப்தமான இடமாக இருக்கவேண்டும். நல்ல அழகான மரங்கள் அடர்ந்த சோலைகளும் நதியின் தீர்த்தங்களும் உள்ள சாந்தமான இடங்களில் கவலையே இல்லாமல் குருவும் நல்ல சாந்தமாக இருக்கிற சமயத்தில் சிஷ்யனும் சௌகரியமாக இருக்கிற சமயத்தில் ஞானோபதேசம் நடக்கும். ஜலரமணீயம், ஸ்தல ரமணீயம் எல்லாம் அங்கே இருக்கவேண்டும். பொதுவாக இந்த மாதிரியான இடங்களில்தான் மகரிஷிகள் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்திருப்பதாகப் பார்க்கிறோம். ஆதி ஆசாரியரவர்களின் படம் பார்த்திருப்பீர்களே? நாலு சிஷ்யர்களுக்கு மத்தியில் அவர் உட்கார்ந்திருக்கிறார். அவரைச் சுற்றிலும் நல்ல மரங்கள்; ஒரு பர்ணசாலை; ஒரு குளம். அவர் செய்திருக்கிற உபதேசங்களைப் பார்க்கும்போது அவர் இப்படிப்பட்ட ஓர் இடத்தில் இருந்துகொண்டுதான் சிஷ்யர்களுக்கு ஞானோபதேசம் செய்திருக்கவேண்டும் என்று ரவிவர்மாவுக்குத் தோன்றியிருக்கிறது. அந்த இடத்தில் சாந்தம் இருக்குமென்று நினைத்துத்தான் அப்படி

எழுதியிருக்கிறார்: ஞானோபதேசம் செய்கிற புஸ்தகங்கள் இப்படி ஜலரமணீயம், ஸ்தலரமணீயம் உள்ள இடங்களில், கவலேயே இல்லாமல் குருவும் சிஷ்யனும் இருக்கிறபோதுதான் பிறந்திருக்கின்றன. இந்த மாதிரியாகப் பகவத்கீதை ஏற்பட்டதா? இல்லை.

பகவத்கீதை உபதேசம் நடக்கிற அந்த க்ஷணத்திற்கு அடுத்த க்ஷணத்தில் யாருடைய கை இருக்கப் போகிறதோ? தலை இருக்கப்போகிறதோ? உயிர் இருக்கப் போகிறதோ என்று யாருக்குமே தெரியாது. அர்ஜுனன்தான் இருக்கப்போகிறானா கிருஷ்ணன்தான் இருக்கப் போகிறானா என்று சொல்லமுடியாத சமயம் அது. உயிர் போவதற்குமுன் இரண்டு நிமிஷம் கிடைத்தாலும் அதற்குள் ஞானத்தை அறிந்துகொண்டு ஆத்மாவைப் பரிசுத்தம் செய்துகொள்ளலாம். உயிர் போவதாக இருந்தாலும் ஞானத்தை அடைய வேண்டியதுதான் முக்கியம் என்று ஞானோபதேசம் நடந்தது; ரணகளத்தில் நடந்தது. அடுத்த விநாடி அந்த யுத்தகளத்தில் யார் தலை இருக்கப் போகிறது? யார் கால் போகப்போகிறது என்று யாருக்கும் தெரியாது. 'தலை பெரிது அன்று, கால் பெரிது அன்று, உயிர் பெரிது அன்று; தத்துவந்தான் தெரியவேண்டும், ஆத்மஞானந் தான் உண்டாகவேண்டும்' என்ற கருத்தை மூலமாகக்கொண்டு எழுந்தது பகவத்கீதை. இதுதான் மற்ற ஞான சாஸ்திரங்களுக்கு இல்லாமல் பகவத்கீதைக்கே உள்ள தனிப் பெருமை. அதனால் எல்லாப் புஸ்தகங்களைக் காட்டிலும் இதற்குத் தனிச் சிறப்பு. உண்மையாக ஆசை என்பதை அறவே விட்ட நிலையில் உயிரின்மேல் ஆசை இல்லாமல் உடலின்மேல் ஆசை இல்லாமல் தத்துவம் ஒன்றினிடத்தில் மட்டும் ஆசைகொண்ட சமயத்தில் கீதை உண்டாகியிருக்கிறது. அதனால்தான் அதற்கு இவ்வளவு கியாதி ஏற்பட்டிருக்கிறது என்று நானாக ஊகம் பண்ணிக்கொண்டேன்.

அந்தப் பகவத்கீதைக்குத் தம்பிதான் தீபாவளி என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்? ஞான நூல்களில் எப்படிப் பகவத்கீதை எல்லாவற்றையும்விடத் தனிக்கியாதி அடைந்திருக்கிறதோ அப்படியே தீபாவளி எல்லாப் பண்டிகைகளைக் காட்டிலும் அதிகக் கியாதி அடைந்திருக்கிறது. ஒரு பண்டிகை வடக்கே தெரியும்; தெற்கே தெரியாது. ஒரு சாதிக்காரர் ஒரு பண்டிகை கொண்டாடுவார்கள்; இன்னொரு சாதிக்காரர் கொண்டாடமாட்டார்கள், ஓணம் என்று மிகவும் விசேஷமாக மலையாளத்தில் ஒரு பண்டிகை கொண்டாடுகிறார்கள். நமக்கு அது தெரியாது. விஷு என்று அதே மாதிரி இன்னொரு பண்டிகை அங்கே உண்டு. நமக்கு அதுவும் தெரியாது. வடக்கே

இருக்கிறவர்கள் ஹோலி பண்டிகை கொண்டாடுகிறார்கள். சாயத் தண்ணீரை ஒருத்தர்மேலே ஒருத்தர் வீசிக்கொண்டு கூத்தாடுகிறார்கள். அதைப்பற்றியும் நமக்கு ஒன்றும் தெரியாது. இப்படி ஒவ்வோர் ஊரில் ஒவ்வொரு பண்டிகை முக்கியமாக இருக்கிறது. ஆனால் தீபாவளி ஒன்றுதான் நம் தேசம் முழுவதும் எல்லா ஜாதிக்காரர்களாலும் எல்லா மதக்காரர்களாலும் கொண்டாடப்படுகிறது. பிற தேசத்திலிருந்து வந்த மதங்களைத் தவிர நம் தேசத்திலேயே பிறந்த புத்த ஜைன மதஸ்தர்கள் கூட இந்தப் பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள். ராமேசுவரம் முதல் ஹிமாசலம் வரையில் எல்லாரும் கொண்டாடுகிறார்கள். நாம் எல்லாரும் பட்டாசு வெடிக்கிறோம், வடக்கே தீபஆவளி என்று விளக்குகளை அலங்காரமாக வரிசையாக வைக்கிறார்கள். அதைப் பார்த்துவிட்டுத்தான் நானும் இருபது முப்பது வருஷமாக, தீபாவளி அன்று மடத்தில் விளக்கு நிறைய ஏற்றச் சொல்லி வருகிறேன். வடக்கே இருக்கிறவர்களுக்குக் கார்த்திகை மாதம், பௌர்ணமிக்கு மறுநாள் ஆரம்பம் ஆகிவிடுகிறது. எப்படி இருந்தாலும் வடக்கே இருக்கிறவர்கள், தெற்கே இருக்கிறவர்கள் எல்லாருக்கும் தீபாவளி ஒரே நாளில்தான். 'எத்தனையோ பண்டிகைகள் இருக்கின்றன. கர்மாக்கள் இருக்கின்றன. எல்லாவற்றையும்விட இந்தத் தீபாவளிக்குக் கியாதி, சிரேயஸ் ஏன் ஏற்பட்டன? தீபாவளிக்குப் பெயரீ வந்தது எதனால்?' என்று இதைப் பற்றியும் யோசனை பண்ணிக்கொண்டிருந்தேன்.

அஸ்ஸாம் என்ற தேசத்தில் பிராக்ஜோதிஷம் என்ற நகரத்தில் பௌமன் என்று ஒருத்தன் இருந்தான். அவனுக்குத்தான் நரகாசுரன் என்று பெயர். அவன் ஸ்திரீகள், சாதுக்கள் போன்றவர்களுக்கு அநேக அக்கிரமங்கள் பண்ணிக்கொண்டிருந்தான். அதிகமான தபஸ் பண்ணினவன்தான் என்றாலும் தாமச வரங்களை வாங்கிக்கொண்டு எல்லாரையும் ஹிம்சை பண்ணிக்கொண்டிருந்தான். அக்கினிக்கோட்டை, வாயுக்கோட்டை என்று பல கோட்டைகளைக் கட்டிக்கொண்டு மகா ஹிம்சை செய்து லோக கண்டகனாக இருந்தான். சுவாமியே அவதாரம் பண்ணி, அவன் எத்தனையோ பந்தோபஸ்துகள் செய்துகொண்டு இருந்தாலும் பல யுக்திகளைக்கொண்டு அவனைச் சம்ஹாரம் பண்ணினார்-சம்ஹாரம் பண்ணினபோது அவன் தாயாகிய பூமிதேவி பகவானைப் பிரார்த்தித்துக்கொண்டாளாம்.

புத்திரசோகத்தைக் காட்டிலும் ஸ்திரீகளுக்கு வேறு பெரிய சோகம் ஒன்றும் இல்லை. பர்த்தா மரணமடைகிறான் என்றால், 'நமக்கு இதுவரையிலும் கிடைத்துவந்த சௌகரியம் போகிறதே; இனி நம்மை யார் ரக்ஷிப்பார்கள்? பர்த்தா இல்லாததனாலே பல

காரியங்களை நம்மால் செய்ய முடியாது போகுமே; அபசகுனம் மாதிரி ஆகிவிடுமே' என்ற பல காரணங்களினாலே ஸ்திரீகளுக்கு அதிகமான துக்கம் உண்டாகலாம். அந்தத் துக்கத்திற்குக் கொஞ்சம் சுயநலம் காரணம். ஆனால் புத்திரன் விஷயத்தில் அப்படி இல்லை. எத்தனைக்கு எத்தனை பிள்ளையின் வயசு அதிகமாகிறதோ அத்தனைக்கு அத்தனை அவன் பிரிவினால் மாதாவின் துக்கமும் அதிகமாகிறது. லோகம் முழுக்கச் சக்கரவர்த்தியாக நரகாசுரன் ஆண்டுவந்திருக்கிறான். இப்படி ஏக சக்கராதிபதியாக ராஜ்ய பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்த புத்திரன், பகவானால் சம்ஹாரம் செய்யப்பட்டுவிட்டானே என்ற துக்கம் அந்தத் தாய்க்கு அப்போது உண்டாகவில்லை. புத்திரன் போனான் என்று நினைக்காமல். 'பகவான் கையாலே அவனுக்கு மோக்ஷம் ஏற்பட்டதே. அவனுக்குப் பகவானை நேரில் காணுகின்ற பாக்கியம் கிடைத்ததே; பெரிய தபஸ் பண்ணி அல்லவா பகவானைப் பார்க்க வேண்டும்? தபஸ் ஒன்றும் பண்ணாமலே அவனுக்கு இந்தப் பாக்கியம் கிடைத்ததே' என்று மிகவும் சந்தோஷப்பட்டு உடனே ஒரு பிரார்த்தனை பண்ணிக் கொண்டாள். 'என் பிள்ளை போனது இருக்கட்டும். எனக்குப் பிள்ளை போன துக்கம் ஏற்பட்டாலும் லோகத்தில் இருக்கிறவர்களுக்கு ஒரு துக்கமும் ஏற்படக்கூடாது. என் பிள்ளை போன இன்றைக்கு எல்லாரும் எண்ணெய் தேய்த்துக்கொண்டு, புத்தாடைகளை உடுத்துக்கொண்டு, நல்ல விருந்துச் சாப்பாட்டைச் சந்தோஷமாகச் சாப்பிடவேண்டும்' என்று அவள் பிரார்த்தனை பண்ணிக்கொண்டதாக ஒரு கதை இருக்கிறது. சாகப் போகிற சமயத்தில் பகவானுடைய தரிசனத்தால் ஞானம் பெற்ற நரகாசுரனே. 'இந்த மாதிரி, என் நினைவாக ஜனங்கள் செய்யவேண்டும்' என்று பிரார்த்துத்துக்கொண்டதாகவும் சொல்கிறார்கள், எண்ணெய் தேய்த்துக்கொண்டு வெந்நீரிலே ஸ்நானம் செய்கிறது இருக்கட்டும். 'இப்படி ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குக் கங்கையில் ஸ்நானம் செய்தால் எவ்வளவு புண்ணியமோ அவ்வளவு புண்ணியம் வரவேண்டும், மகாலக்ஷ்மியின் அநுக்கிரகம் பொங்கவேண்டும்' என்றும் வேண்டிக்கொண்டானும்.

ஒவ்வொரு மாசத்திற்கும் ஒரு புராணம் இருக்கிறது; சைத்திர மாஹாத்மியம், வைசாக, மாஹாத்மியம் என்று ஒவ்வொரு மாசத்திற்கும் இருக்கிறது. துலா மாச மாஹாத்மியம் இருக்கிறது. அது முப்பது அத்தியாயம் உள்ளது. முப்பது நாளைக்கும் படிக்கலாம். அதிலே தீபாவளியைப்பற்றிச் சொல்லப்படும் அத்தியாயத்தில்,

तैले लक्ष्मीः जले गङ्गा

தைலே லக்ஷ்மீः ஜலே கங்கா

என்று வருகிறது. கங்கை இல்லாத ஊர்களில் எந்த இடத்தில் அன்றைக்கு எண்ணெய் தேய்த்துக்கொண்டு வெந்நீரிலே ஸ்நானம் செய்தாலும் கங்கா ஸ்நானம் செய்த புண்ணியம் வருகிறது என்று புராணம் சொல்கிறது, எல்லா ஆசிரமக்காரர்களும் வைராக்கியசீலர்களுங்கூட, தீபாவளியன்று ஸ்நானம் செய்யவேண்டும் என்பதாகவும் துலாபுராணத்தில் இருக்கிறது.

அப்யங்கனம். வபனம் எல்லாம் இந்தக் காலத்தில்தான் செய்துகொள்ள வேண்டும் என்று சாஸ்திரம் இருக்கிறது. ஒரு நாளைக்கு ஐந்து காலம்: உதய காலம், சங்கவ காலம், மத்தியான்ன காலம், அபரான்ன காலம், சாயங்காலம் என்று ஐந்து. ஒரு காலத்திற்கு ஆறு நாழிகை. ஒரு நாழிகைக்கு இருபத்து நான்கு நிமிஷம். ஒரு காலத்திற்கு 144 நிமிஷம்; அதாவது இரண்டு மணி 24 நிமிஷம் ஆகிறது. சூரிய உதயத்திலிருந்து 8-24 வரையில் உதய காலம். 8-24-இலிருந்து 10-48 வரையில் சங்கவ காலம். 10-48-இலிருந்து 1-12 வரையில் மாத்யான்ன காலம்; 1-12-இலிருந்து 3-36 வரையில் அபரான்ன காலம், 3-36. லிருந்து 6 வரையில் சாயங்காலம். இன்ன இன்ன காலத்தில் இன்ன இன்ன கர்மாக்களைப் பண்ண வேண்டுமென்று தர்ம சாஸ்திரம் விதிக்கிறது. அப்யங்கனம் உதயகாலத்தில் பண்ணிக் கொள்ளக்கூடாது; பிராயச்சித்தம், காயத்திரி ஜபம் ஆகியவை சங்கவ காலத்தில் பண்ணவேண்டும். உஷத் காலத்தில் எண்ணெய் தேய்த்துக்கொண்டால் கள் போன்றவற்றைத் தேய்த்துக் கொண்ட பாவம் என்று தோஷம் சொல்லியிருக்கிறது; ஆனால் இதற்கு நேர் விபரீதமாகத் தீபாவளி அன்றைக்கு உஷக்காலத்திலேயே எண்ணெய் தேய்த்துக்கொண்டுவிட வேண்டும். யாராக இருந்தாலும் தேய்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லியிருக்கிறது. கொஞ்சங்கூட ஜீவஹிம்சை செய்யக்கூடாது என்று சொல்லிவிட்டு யாகத்தில் தோஷம் இல்லை என்று சொல்லியிருப்பது போல, இது நேர்விரோதமாக இருக்கிறது. 'உஷக் காலத்திலேயே தேய்த்துக்கொள்பவர்களுக்குப் புண்ணியமும் வரவேண்டும்' என்று நரகாசுரனுடைய அம்மா பிரார்த்தித்துக் கொண்டாள். இதைவிட உயர்ந்த மனப்பான்மை இருக்க முடியுமா? யாராவது இறந்தால் எண்ணெய் தேய்த்துக்கொள்வோமா? புதிய ஆடைகளை அன்றைக்கு உடுத்துக்கொள்வோமா? விருந்துதான் சாப்பிட மனசு வருமா? தன் பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டு, 'பகவானே, எனக்கு இருக்கிற துக்கம் இருக்கட்டும். லோகம் துக்கப்படக் கூடாது. இன்றைக்கு எல்லாரும் எண்ணெய் தேய்த்துக்கொண்டு சந்தோஷமாகப் புது ஆடைகளை உடுத்துக்கொண்டு பண்டிகை கொண்டாட வேண்டும். அப்படி எண்ணெய் தேய்த்துக்கொள்கிறவர்களுக்குக்

கங்கையில் ஸ்நானம் செய்கிற புண்ணியம் வரவேண்டும்; மகாலக்ஷ்மியின் கடாக்ஷம் ஏற்பட வேண்டும்' என்று அவன் அம்மா பூமாதேவி பிரார்த்தனை செய்துகொண் டிருக்கிறாள். ரணகளத்திலே பகவான் கீதை உபதேசம் பண்ணினாற்போல இவள் பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டுப் புத்திர சோகத்தால் அழும்போது லோக க்ஷேமத்தை வேண்டிக்கொண் டிருக்கிறாள்!

'ஊரெல்லாம் நன்றாக இருக்கிறதே; ஊரார் பிள்ளை எல்லாரும் நன்றாக இருக்கிறார்களே! நம் பிள்ளை இப்படி இருக்கிறானே!' என்று நமக்குத் தோன்றுமே தவிர, 'நம் பிள்ளை எப்படிப் போனாலும் போகட்டும், ஊர்ப்பிள்ளை எல்லாம் சந்தோஷமாக இருக்கட்டும்' என்ற நினைப்பு வருமா?

நரகாசுரனுடைய தாய்க்கு வந்திருக்கிறது. அதனால்தான் தீபாவளியைக் கொண்டாடுகிறோம். மற்றப் பண்டிகைகளையெல்லாம்விட இதற்கு அதிகக் கியாதி.

ஏதோ புராணக் கதை இது என்று தள்ளிவிடாமல் தலைமுறை தலைமுறையாக இதை ரக்ஷித்துக்கொண்டு இந்தப் பண்டிகையையும் நம் நாட்டவர்கள் கொண்டாடி வந்திருக்கிறார்களே; அதனால் நமக்கு என்ன பயன்? இந்தப் பண்டிகையைக் கொண்டாடுவதால் நாம் அடையக்கூடிய ஆத்மலாபம் என்ன என்று பார்க்கவேண்டும். எதற்கும் மூலத்தைச் சூக்ஷ்மமாக அறிந்துகொண்டால்தான் நிறையப் பலன் கிடைக்கும்.

நமக்கு அநேக துன்பங்கள் இருக்கின்றன. பல தப்புகள் பண்ணுகிறோம். அதற்கு ஏற்ற துக்கத்தை அநுபவிக்கிறோம். 'இந்தத் தப்பைப் பண்ணினோம்; அதனால்தான் இந்தக் கஷ்டம் நமக்கு ஏற்பட்டிருக்கிறது' என்று சில சமயங்களில் நமக்கே தெரிகிறது. இன்னும் சில கஷ்டங்கள் ஏற்படும்போது, 'ஐயோ, நான் ஒரு தப்பும் பண்ணவில்லையே; எனக்குச் சிரமம் உண்டாகியிருக்கிறதே?' என்று வருத்தப்படுகிறோம். காரணம் தெரியும் போது நம்மை நாமே சமாதானப்படுத்திக்கொள்ளப் பார்க்கிறோம். தெரியாதபோது இன்னும் அதிகத் துக்கத்தை உண்டாக்கிக்கொள்கிறோம. எல்லாக் காரியங்களுக்கும் நமக்குக் காரணம் தெரிந்திருக்க வேண்டுமா என்ன? காரணம் தெரியாமல் பல துன்பங்கள் உண்டாகலாம். தெரிந்தும் உண்டாகலாம். எப்படி இருந்தாலும் நமக்கு ஏற்படுகிற துன்பம் ஏற்பட்டே தீரும்; இருக்கிற துன்பம் இருந்துகொண்டுதான் இருக்கும். நாம் துன்பப்படுகிறோமே; என்பதற்காக மற்றவர்களும் துன்பப்படட்டும் லோகமும் துன்பப்படட்டும் என்ற நினைவு நமக்கு வரக்கூடாது. நாம் துன்பப்பட்டாலும் லோகம் க்ஷேமமாக இருக்க வேண்டும் என்ற மனப்பான்மையை வளர்த்துக்கொள்வதுதான் இந்தத் தீபாவளிப் பண்டிகையைக்

கொண்டாடுவதன் பயன்: நாம் அதிலிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய நீதி; இந்தப் பண்டிகை விட்டுப்போகாமல் இவ்வளவு காலமாக இது சம்பந்தப்பட்ட புராணக் கதையையும் இந்தப் பண்டிகையையும் காப்பாற்றி வந்திருப்பதற்குக் காரணம் இதுதான்.

மனிதர்களாகப் பிறந்துவிட்டோம், கஷ்டந்தான் நமக்கு எப்போதும் அதிகமாக இருக்கும். சுகம் எப்போதோ வரும். எவ்வளவுக்கு எவ்வளவு பெரிய மனிதர்களாக இருக்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு பெரிய கஷ்டமாக வரும். மாடியிலிருந்து விழுந்தால் கை கால் மண்டை எல்லாம் நொறுங்கிப் போகின்றன; திண்ணையிலிருந்து விழுந்தால் சிராய்ப்போடு, சுளுக்கோடு நின்றுவிடுகிறது. அதுபோலவே பெரியவர்களுக்கு அதிகத் துன்பம்; சின்னவர்களானால் அவர்களுக்கு ஏற்றபடி சின்னத் துன்பம்; ஒவ்வொருத்தர் வாழ்க்கையிலும் துன்பம் நிறைய வந்துகொணடேதான் இருக்கும். நம்முடைய துன்பத்தையே நாம் பெரிதாக நினைத்துக்கொண்டிருக்கக்கூடாது. நம்முடைய கஷ்டம் பெரிதே அன்று. நம்மாலாவது உலகம் சிறிது க்ஷேமமாக இருக்கும் என்று தெரிந்தால் நம் கஷ்டத்தை மறந்து லோக சுகத்திற்காகப் பாடுபட வேணடும். 'நம் பிள்ளையைச் சம்ஹாரம் செய்யும் காரணத்தினாலாவது பகவானைத் தரிசனம் பண்ணக்கூடிய பாக்கியம் கிடைத்ததே என்பதோடு, 'இந்தச் சமயத்தில் நம் பிள்ளை இறந்துபோய்விட்டான் என்று அழுதுகொண்டிருப்பதில் பயன் இல்லை. இந்த ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு நாம் பகவானிடம் லோகமெல்லாம் க்ஷேமமாக இருக்கவேண்டும் என்றுவது பிரார்த்தித்துக்கொள்ள வேண்டும்' என்ற ஞானம் நரகாசுரனுடைய தாய்க்கு, புத்திர சோகத்திற்கு இடையில் தோன்றியதே! இது ரணகளத்தில் பகவத்கீதை தோன்றியது போலவே இருக்கிறது. ஆகவே தீபாவளிப் பண்டிகை கொண்டாடி, பட்டாசு வெடித்து, விருந்து சாப்பிடுவதோடு நாம் நிற்கக்கூடாது. 'நாம் கஷ்டப்பட்டாலும் படுவோம். நம் கஷ்டம் நம்மோடு இருக்கட்டும். லோகம் எல்லாம் க்ஷேமமாக இருக்க நம்மால் ஏதாவது செய்யமுடியும் என்றால் அதை உடனே செய்ய வேண்டும். நம்மைக் காட்டிலும் லோக க்ஷேமந்தான் பெரிசு' என்ற ஞானம் இன்றைக்கு உண்டாக வேண்டும். இதுதான் பகவானின் சங்கல்பமாக இருக்கும் என்பது ஓர் அபிப்பிராயம்.

வேறு ஓர் அபிப்பிராயமும் உண்டு. மிகவும் பக்தி பண்ணி, தபஸ் பண்ணி பகவானுடைய தரிசனத்தைப் பெறுவது போலவே மிகவும் அக்கிரமங்களும் துவேஷமும் பண்ணிக்கொண்

டிருந்தாலும் பகவான் அவனைச் சங்காரம்பண்ணுகிற வியாஜத்தினாலாவது தன்னுடைய தரிசனத்தை அவனுக்குக் கொடுத்து அவன் பாவங்களைக் கழுவி மோக்ஷத்தைக் கொடுத்துவிடுகிறார் என்பதைத் தெரிந்துகொள்கிறோம். ராவணன், கம்சன், நரகாசுரன் இவர்களுக்கு இப்படித்தான் மோக்ஷம் கிடைத்தது. ஊரில் உள்ளவர்களுக்கும் உலகில் உள்ளவர்களுக்கும் மிகவும் ஹிம்சை பண்ணிக்கொண் டிருந்தான் நரகாசுரன்; ஸ்திரீகள், சாதுக்கள் இவர்களை எல்லாம் அவமானம் செய்துகொண் டிருந்தான். அவ்வளவு பாவியாக, லோககண்டனாக இருந்த அவனுக்குப் பகவானுடைய தரிசனம் கிடைத்த மாத்திரத்தில் ஞானம் உண்டாகி, 'லோகம் க்ஷேமமாக இருக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தான்; அந்தத் தரிசனத்தின் மகிமையினால் மோக்ஷம் அடைந்தான் என்று புராணங்கள் சொல்கின்றன. ஸாக்ஷாத் பகவானே கண்ணால் பார்க்கும்படியாகத் தரிசனம் கொடுத்துவிட்டால் பாப நிவிருத்தி யாகிவிடுகிறது. அவன் எவ்வளவு துவேஷம் உள்ளவனாக இருந்தாலும் முடிவில் மகான்களுக்கும் யோகிகளுக்கும் கிடைக்கிற பலன் அவனுக்கும் கிடைத்துவிடுகிறது.

பவபூதி என்பவர் ஒரு பெரிய கவி. பவன் என்றால் ஈசுவரன்; பூதி என்றால் விபூதி. பவபூதி, விபூதி பூசிக்கொண்டு சதா ஈசுவரனை உபாசனை செய்த பரம பக்தர். அவர் உத்தர ராம சரித்திரம் என்று ஒரு நாடகம் எழுதியிருக்கிறார். அவருடைய நாடகத்திலே ராமன் அரசன். நாலாவது வர்ணத்தைச் சேர்ந்த சம்புகன் என்பவன் ஒருவன். அவன் தன் வர்ணாசிரம தர்மத்திற்கு விரோதமான காரியம் ஒன்றைச் செய்து வந்தானாம்: தபஸ் பண்ணினானாம். அதனால்தான் ஒரு குழந்தை ராஜ்யத்திலே இறந்துவிட்டது என்று எண்ணி, அவனைச் சம்ஹாரம் பண்ணப் போனார் ராமர். கையில் கத்தியை உருவிக்கொண்டு அவனை வெட்டப் போனபோது ராமர் தம் கையைப் பார்த்தே கேட்கிறார்.

रे हस्त दक्षिण मृतस्य शिशोर्द्विजस्य
जीवातवे विसृज शूद्रमुनौ कृपाणम् ।
रामस्य बाहुरसि दुर्वहगर्भखिन्न
सीताविवासनपटोः करुणा कुतस्ते ॥

ரே ஹஸ்த தக்ஷிண ம்ருதஸ்ய ஶிஶோர்த்விஜஸ்ய
ஜீவாதவே விஸ்ருஜ ஶூத்ரமுனௌ க்ருபாணம் |
ராமஸ்ய பாஹுரஸி துர்வஹகர்ப்பகிந்ந-
ஸீதாவிவாஸநபடோ: கருணா குதஸ்தே ||

'கத்தியை எடுத்துக்கொண்டு அவனை வெட்ட, அவன் என்ன தப்புப் பண்ணினான்? ஏ கையே, நீ ஏன் அவனை வெட்டப் போகிறாய்?' என்று கேட்கிறார்,

கவி, ராமன் வாக்காகவே இதைச் சொல்கிறார். 'ஏ, கையே அவனை ஏன் வெட்டப்போகிறாய்' உனக்கு ஈவு இருக்கிறதா? இரக்கம் இருக்கிறதா? நியாயம் இருக்கிறதா? ஒன்றுமே இல்லாமல் முனியாகிய அவனை வெட்டப்போகிறாயே; வெட்டு, வெட்டு! இது ராமன் கை அல்லவா? அவன் கைக்கு ஈவு இரக்கம் என்பது ஏது? பூர்ண கர்ப்பிணியாக இருந்த சீதையை யாரோ வண்ணான் சொன்னான் என்பதற்காகக் கொஞ்சங்கூட இரக்கம் இல்லாமல் காட்டுக்குப் போ என்று காட்டின கை அல்லவா இது? அதனால் தான் உனக்குக் கருணை இல்லை. வர்ணாசிரம தர்மத்திற்கு விரோதமாக நடந்தான் என்று அவனை வெட்டப் போகிறாய்? ஒரு பாவமும் பண்ணாத அவனை வெட்டு வெட்டு! உனக்குத்தான் இரக்கம் இல்லையே!' என்று தம் கையைப் பார்த்துச் சொல்கிறார் ராமர். அப்போது சம்புகன் ராமரைப் பார்த்து, "ராமா, நான் தவம் பண்ணினது தப்பு என்றுதானே என்னை வெட்ட வந்திருக்கிறாய்? என்னை வெட்டு. ஆனால் நான் பண்ணினது தப்பு என்று சொல்லாதே. எதற்காகத் தவத்தைப் பண்ணினேனோ அது எனக்குப் பலிதமாகிவிட்டது. நான் பண்ணின காரியம் தப்பு என்றால் உன் தரிசனம் கிடைக்குமா? உன்னைப் பார்க்கத் தவம் பண்ணினேன். பார்த்துவிட்டேன். அப்போது என் தவம் எப்படித் தப்பாகும்? எல்லாரும் உன் தரிசனத்திற்காகத்தானே தவம் பண்ணுகிறார்கள்? எனக்கு அது கிடைத்துவிட்டது' என்று சொன்னானாம்.

'இப்படித் தப்புப் பண்ணினவர்களுக்கும் பகவானுடைய தரிசனம் கிடைக்கிறது. பக்தி பண்ணுகிறவர்களுக்கும் கிடைக்கிறது. இது என்ன?' என்ற கேள்விக்குச் சமாதானமாக ஒன்று சொல்வார்கள். தபஸ் பண்ணிக்கொண்டிருக்கிறவனுக்கு ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஆனாலுங்கூட இறைவனுடைய நினைவு பூர்ணமாக வருவதில்லை. எவன் பகவானை வைது கொண்டே இருக்கிறானோ அவனுக்குப் பகவானுடைய நினைவு சதா இருந்துகொண்டே இருக்கிறது. 'பகவான் இல்லை, பகவான் இல்லை' என்றாலும் பகவானின் நினைவு வந்துவிடுகிறதல்லவா? அதனால்தான் பக்தனைக் காட்டிலும் துவேஷிக்குப் பகவான் தரிசனம் சீக்கிரம் கிடைத்துவிடுகிறது என்பார்கள்.

பக்தியினாலேயும் பகவான் நினைவு வரும். துவேஷத்தினாலும் நினைவு வரும். பக்தியைக் காட்டிலும் துவேஷத்தில் நினைவு மிகவும் ஆழ்ந்ததாக இருக்கிறது.

இன்னொன்று: பக்தியும் இல்லை; பயமோ துவேஷமோ இல்லை. வேறு ஒன்றினால் பகவான் நினைவு வருகிறது. பக்தி, துவேஷம் ஆகிய இரண்டினால் தெய்வ அநுக்கிரகம் கிடைப்பது பற்றித்தான் சரித்திரம் நிறைய இருக்கிறது. அது இரண்டும் இல்லாத இன்னொன்று உண்டு:

ஆதி ஆசாரியரவர்களைப் பற்றிய சரித்திரத்தில் சில விஜயங்களில் ஒரு கதை போட்டிருக்கிறது:

ஒரு கபாலிகன்; க்ரகசன் என்று பெயர். காபாலிகர்களுடைய ஆசாரமே ஒரு விதமாக இருக்கும். 'ஈசுவரன் எப்படி எலும்பினால் மாலை போட்டுக்கொண்டிருக்கிறானோ அப்படித் நாமும் எலும்பு மாலை போட்டுக்கொள்ள வேண்டும். அவன் எப்படி மயானச் சாம்பலைப் பூசிக்கொண்டிருக்கிறானோ அப்படி உடம்பெல்லாம் மயானச் சாம்பலைப் பூசிக்கொள்ள வேண்டும். மண்டை ஓட்டை எடுத்துக்கொண்டுதான் பிச்சை வாங்க வேண்டும். அந்தப் பிச்சைகூட மாமிசப் பிச்சையாக இருக்க வேண்டும். கிடைக்கவில்லை என்றால் ஸ்மசானத்திற்குப் போய் வெந்துகொண்டிருக்கிற பிணத்தின் நர மாமிசத்தை அங்கே இருக்கிறவனிடம் யாசிக்கவேண்டும்' என்பவை அவர்களுடைய ஆசராங்கள். பாசுபதர், லகுலீசர் போன்றவர்கள் அப்படிப் பட்டவர்கள் என்பது கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது.

இது மாதிரியான ஆசாரக்காரர்கள் இருந்திருப்பதனால்தான் சிறுத்தொண்டர்கூடப் பிள்ளைக் கறி படைத்தார் என்று தோன்றுகிறது. சிறுத்தொண்டர், பல்லவ அரசனிடம் சேனாதிபதியாக இருந்து வடக்கே போய்விட்டு, அங்கே இருந்த காபாலிகனைப் பார்த்து வந்திருப்பார்போல் இருக்கிறது. அதனால்தான் பிள்ளைக் கறி படைத்தார்போல் இருக்கிறது.

ஆசாரியரவர்கள் காலத்தில் ஒரு பெரிய காபாலிகன் இருந்தான். அவன் பேர்தான் க்ரகசன். ஆசாரியரவர்கள் அந்தக் காலத்தில், 'வேதத்தைப் பின்பற்றி, சாமான்ய தர்மங்கள், ஆசாரங்கள் இவற்றை அநுசரித்து இருந்தால் போதும். மிகக் கஷ்டமான தாந்திரிக மார்க்கங்களை அநுசரிக்க வேண்டாம்; மதுபானம், ஊன் இவை வேண்டாம்' என்று சொல்லி வந்தார்.

ஆகவே அந்தக் காபாலிகனாகிய க்ரகசன், எப்படியாவது ஆசாரியரவர்களைத் தீர்த்துக்கட்டினால்தான் நம் மதம் பிழைக்கும் என்று அபிப்பிராயப்பட்டான். ஆசாரியரவர்களோ எப்போது பார்த்தாலும் ஆறாயிரம் சிஷ்யர்களோடே சஞ்சாரம் செய்தார். ராஜாதி ராஜாக்கள் எல்லாரும் பின்னே சுற்றிக் கொண்டே இருப்பார்கள். 'அவரை எப்படிச் சம்ஹாரம்

பண்ணுவது?' என்று காபாலிகன் யோசித்தான். அவன் மிகவும் புத்திசாலி.

ஒருநாள் சமயம் பார்த்து ஆசாரியரவர்களிடம் வந்தான். "நான் வெகு நாளாக இந்தத் தாந்திரிகமான மார்க்கத்தில் உபாசனை பண்ணிக்கொண்டு வருகிறேன். பெரிய ஹோமம் ஒன்று பண்ணவேண்டும். அந்த ஹோமத்திற்கு ஒரு நரபலி கொடுக்க வேண்டும். ஆனால் அந்தச் சிரஸ் யாருடையதாக இருக்கவேண்டும் தெரியுமா? பெரிய சக்கரவர்த்தியினுடைய தலையாக இருக்கவேண்டும். சக்கரவர்த்தியின் தலையைக் கேட்டால் என் தலையே போய்விடும். ஆகையால் அது முடியாது. ஆனால் அதற்குப் பதிலாக ஒரு பெரிய ஆசாரியருடைய தலையைக் கொடுத்தாலும் என் தபஸ் சித்தியாகும். நீங்களே உதவி செய்யவேண்டும். நீங்கள் சந்நியாசி; உங்களுக்கு எந்த ஆசையும் இல்லை' என்று சொன்னான்.

உடனே ஆசாரியரவர்களுக்கு வெகு சந்தோஷம் உண்டாகிவிட்டதாம். 'அப்படியா! என் உடம்பு, எலும்பு ஒன்றும் உபயோகம் இல்லை என்று எண்ணினேன். அதற்கும் உபயோகம் இருக்குமென்றால் அதைவிட எனக்கு மகிழ்ச்சி என்ன இருக்கிறது? நாளைக்குச் சாயந்தரம் ஆற்றங்கரைக்கு வா. நான் தனியாக இருப்பேன். சமாதியில் இருக்கும்போது தலையை எடுத்துக்கொண்டு போ' என்று சொல்லிவிட்டார்.

அவ்வாறே அவன் ரகசியமாக மறுநாள் ஆற்றங்கரைக்குப் போனான். அங்கே ஆசாரிய சுவாமிகள் தாம் சொன்னபடியே சமாதியில் உட்கார்ந்திருந்தாராம். யாருமே அங்கே இல்லை. காபாலிகன் கத்தியை எடுத்துக்கொண்டு வெட்டப்போனபோது திடீரென்று அங்கே பத்மபாதர் வந்துவிட்டாராம். ஆசாரியரவர்களுடைய பரம சிஷ்யர் அவர். அவருடை குருபக்தியினால் தான் அவருக்குப் பத்மபாதர் என்ற பெயரே ஏற்பட்டது.

பத்மபாதருக்கு ஆசாரிய சுவாமிகள், கபாலிகனுக்குச் சொல்லியிருந்த விஷயம் தெரியாது. திடீரென்று அவருக்கு ஆவேசம் வந்துவிட்டது. 'ஹோ, ஹோ!' என்று கத்திக் கொண்டே ஒரே பாய்ச்சலில் காபாலிகன் மேலே பாய்ந்து அவன் மார்பைக் கிழித்துப் போட்டுவிட்டு, 'ஹா, ஹா!' என்று சிம்மம் மாதிரி அட்டகாசம் பண்ணிக்கொண் டிருந்தாராம். ஆசாரியரவர்கள் சமாதியில் இருந்தவர் இந்த நரசிம்ம அட்டகாசத்தைக் கேட்டவுடன் தெய்விக சப்தத்தினால் கண்ணை விழித்துப் பார்த்தாராம்.

காபாலிகன் செத்துக் கிடந்தான்; பத்மபாதர் கையில் ஒரே ரத்தம். ஆசாரிய சுவாமிகள் விழித்தவுடன் பத்மபாதருடைய ஆவேசம் தணிந்து போகவே அவர் ஆசாரியரவர்களின்

காலில் போய் விழுந்தாராம். ''என்னப்பா இது?'' என்று கேட்டார் ஆசாரியரவர்கள். ''எனக்கு ஒன்றுமே தெரியாது'' என்று பத்மபாதர் சொன்னாராம். அப்போது ஆசாரியரவர்கள், ''உனக்கு ஏதாவது நரசிம்ம உபாசனை உண்டோ?'' என்று கேட்டாராம்.

''சின்ன வயசில் யாரோ ஒருவர் நரசிம்ம மந்திரத்தை உபதேசம் பண்ணினார். அது சித்தியாக வேண்டும் என்றால் புரச்சரணம் பண்ணிக்கொண்டு வரவேண்டும் என்று சொன்னார். அதற்காக அஹோபிலம் என்ற மலைக்குப் போனேன். அங்கே உட்கார்ந்துகொண்டு ஜபம் பண்ணுகிறபோது ஒரு நாள் வேடன் ஒருவன் வந்தான். 'ஏன் இங்கே உட்கார்ந்திருக்கிறாய்? இங்கே உனக்குச் சோறுகூடக் கிடைக்காதே' என்று சொன்னான். 'நான் நரசிங்கத்தைப் பிரத்யக்ஷமாகக் காணவேண்டி இங்கே தவம் செய்ய வந்தேன்' என்று சொன்னேன். அப்புறம் அவனிடம் தியான சுலோகத்தில் சொல்லியபடி சிம்மத்தின் அங்க அவயவ ரூபத்தைச் சொன்னவுடன், 'நீ பொய் சொல்ல மாட்டாய். நீ சொல்கிற மாதிரியான சிங்கத்தை நான் இது வரையில் பார்த்ததில்லை. ஆனால் அந்த மாதிரிச் சிங்கம் இந்த மலையில் இருக்கிறது என்று நீ சொல்வதனால் நாளைக்குச் சூரியாஸ்தமனத்திற்குள் உன் முன்னாடி அதைச் சத்தியமாகக் கொண்டுவந்து கட்டிவிடுகிறேன்' என்று சொல்லிப் போய்விட்டான்.

''உடனே அந்தச் சிங்கத்தைத் தேடி மலை முழுக்க அலைய ஆரம்பித்துவிட்டான். இரவெல்லாம் தேடினான். பசி, தாகம் ஒன்றும் தெரியாமல், சிங்கம் சிங்கம் என்ற ஒரே நினைவாக, தியான சுலோகத்தில் சொன்னபடியான ஓர் உருவத்தையே சதா நினைத்துக்கொண்டு அலைந்தான். மறுநாள் சூரியாஸ்தமன சமயம் வந்தது. சிங்கம் அவன் கண்ணில் அகப்படவில்லை. சொன்ன காரியத்தை நிறைவேற்ற முடியவில்லையே என்று துக்கம் உண்டாயிற்று. உடனே ஒரு கொடியை ஒரு மரத்தில் கட்டி, 'ஏ சிங்கமே, நீ எப்படியோ என் கண்ணில் அகப்படாமல் சுற்றுகிறாய். நீ இல்லை என்று நினைக்கலாம் என்றாலோ அவர் நீ இருக்கிறாய் என்று சொல்லியிருக்கிறார். அந்தப் பிராம்மணர் பொய் சொல்ல மாட்டார் என்பது அவரைப் பார்த்தவுடனேயே எனக்குத் தோன்றிவிட்டது. 'உன் கண்ணில் அது அகப்படாதே' என்று அவர் சொன்னதுதான் நிஜமாகப் போய் விட்டது. உன்னைச் சூரியாஸ்தமனத்திற்குள் கட்டிக்கொண்டு வருகிறேன் என்று சத்தியம் பண்ணிவிட்டேன். நீயோ கண்ணில் படமாட்டேன் என்கிறாய். சத்தியம் பொய்யாகப் போக நான் ஏன் உயிரோடு இருக்கவேண்டும்? நீதானே என் சத்தியத்தைப்

பொய்யாகப் பண்ணினாய்? உனக்காக என் உயிரையே விட்டு விடுகிறேன்' என்று சத்தியத்திற்காகப் பிராணத் தியாகம் செய்யச் சுருக்குப் போட்டுக்கொண்டானாம்.

''உடனே நரசிம்மமூர்த்தி ஹுங்காரம் பண்ணிக்கொண்டு சிம்ம ரூபமாக அவன் முன்னே வரவே, கயிறு அறுந்துபோயிற்று. ''ஏ சிங்கமே, இப்போதாவது வந்தாயா? வா. உன்னைக் கொண்டுபோய் அவரிடம் நிறுத்துகிறேன்'' என்று அந்தக் கொடியையே போட்டு அதைக் கட்டி இழுத்துக்கொண்டு வந்துவிட்டான்.

சிம்ம கர்ஜனை கேட்டது. அவன் இழுத்து வருவது தெரிந்தது. கட்டியிருக்கும் கொடியும் தெரிந்தது. ஆனால் சிம்மம் தெரியவில்லை. ''எனக்குத் தெரியவில்லையே! உனக்குத் தெரிகிறதே. நீதான் அப்பா, என் குரு'' என்று வேடன் காலில் வீழ்ந்து பிரார்த்தித்தேன்.

சப்த ரூபமாக ஸ்வாமி எனக்கு அநுக்கிரகம் பண்ணினார். ''லோகத்திற்கே பெரிய உபகாரம் செய்யும்படியான சந்தர்ப்பம் உனக்கு வரப்போகிறது. அப்போது உன் ரூபமாக நான் வெளிப்படுகிறேன்'' என்று சொன்னார். அதுதான் தெரியும். வேறு ஒன்றும் எனக்குத் தெரியவில்லையே! என்று பத்மபாதர் சொன்னதாகச் சில சங்கர விஜயங்களில் கதை இருக்கிறது.

இதை எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால் வேடன், பக்தியும் பண்ணவில்லை. துவேஷமும் பண்ணவில்லை. சத்தியத்திற்காக உயிரையே அர்ப்பணம் பண்ணினான். அப்போது பகவான் அவனுக்குத் தரிசனம் கொடுத்தார் என்பதைச் சொல்ல வந்தேன்.

பக்தியைக் காட்டிலும் துவேஷம் பெரிது; அதைக் காட்டிலும் பெரிது லட்சியம், சத்தியம்,-சத்தியம் ஒன்றை உயிரைவிட மேலான கொள்கையாகக் கொண்டு, அதையும் ஈசுவரனுக்கே அர்ப்பணம் செய்துவிட்டால் ஈசுவர அநுக்கிரகம் வெகு சீக்கிரம் கிடைக்கும்.

நம்முடைய சுக துக்கங்கள் எல்லாம் என்றைக்கும் இருக்கிறவை. இவற்றையே பெரிதாக நினைத்துக்கொண்டிருக்காமல் நம்மால் இந்த உலகத்திற்குச் சிறிதாவது சந்தோஷம், சுகம் உண்டாகும் என்றால் அதையே பிரார்த்தித்துக்கொள்கிற மனோபாவமுள்ள கொள்கைதான் மிகச் சிறந்தது. தீபாவளி போன்ற பண்டிகைகளின் மூலமான கருத்து இதுதான். 'நமக்குக் கஷ்டம், நமக்குத் துக்கம்' என்பதைப் பாராட்டாமல் லோகம் எல்லாம் க்ஷேமமாக இருக்கவேண்டும் என்று நாம் எல்லாரும் பிரார்த்தித்துக்கொள்வோமாக.

15

# அஹிம்சை

எல்லாரிடத்திலும் நாம் மிகவும் அன்பாக இருக்கவேண்டும். உலகத்தில் நாம் பிறவி எடுத்திருப்பதற்குப் பிரயோசனம் பிரேமை உடையவராக இருப்பதே. அந்தப் பிரேமை நிறைந்து போய்விட்டால் நமக்குக் கஷ்டமே இராது. சர்வ கஷ்டங்களையும் நிவிருத்தி பண்ணுவதற்காகப் பரிபூர்ணமான பிரேமை வேண்டும்.

ஸ்வாமி, எல்லாவற்றையும், பார்த்துக்கொண்டு, எல்லாவற்றையும் நடத்திக்கொண்டு, எல்லாரையும் ரக்ஷித்துக்கொண்டிருக்கிறார்; ஏதோ ஒரு வழியை அவரவர்களுக்குக் காட்டிக் கொண்டிருக்கிறார். எல்லா வஸ்துக்களும் உண்டாகி உண்டாகி அழிவதற்கும் ஆதாரமாக இருந்துகொண்டிருக்கிறார்.

மரங்கள் முளைத்து வளர்வதற்கு ஆதாரமாக இருப்பது மண். நாற்பது வருஷம், நூறு வருஷம் என்று அந்த மரங்கள் இருந்தாலும் முடிவில் மடிந்துபோகின்றன. அப்படி மடியும் போதும் ஆதாரமாக இருப்பது பூமி. பூமியிலிருந்து உண்டாகிப் பூமியிலேயே அனைத்தும் மடிந்துபோகின்றன. 'இந்தப் பூமியும் ஒரு சமயம் அழிந்துபோய்விடும்; சூரியன் அழிந்து போகும்' என்றால் இவை எல்லாவற்றையும் உண்டாக்கி அழிக்க ஆதாரமான வஸ்து ஒன்று வேண்டும். அது என்றைக்கும் அழிவில்லாத வஸ்துவாக இருந்தால்தான் திரும்பவும் உண்டாக்கி ரக்ஷித்து, தன்னோடு திரும்பவும் ஐக்கியம் பண்ணிக்கொள்ள அதற்குச் சக்தி இருக்கும்.

மண்தான் மரமாகிறது; மரம் மடிந்தாலும் மண் ஆகிறது. மரம் உண்டாவதற்கும் மண்தான் காரணம்; அது உயிர் வாழ்ந்து கட்டையாவதற்கும் அதுதான் காரணம்; கடைசியில் விழுந்து தன்மயமாவதற்கும் அதுதான் காரணமாக இருக்கிறது. அப்படியே எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கும்படியான ஒரு வஸ்துவுக்குத்தான் ஸ்வாமி என்று பெயர்.

நாம் ஆலோசனை பண்ணுவதற்கும் காரியங்களைச் செய்வதற்கும் நம்மிடம் ஒரு சக்தி இருக்கிறது. ஒரு சமயம் அது

நிறைய உண்டாகிறது. ஒரு சமயம் மழுங்கிப் போகிறது. சரீரம் போய்விட்டால் யோசனை பண்ணுவதற்கும் இல்லாமல் போய்விடுகிறது. சர்வக்ஞனாக இருக்கும் எந்த வஸ்துவினிடத்தி லிருந்து நமக்கு அந்தச் சக்தி வந்ததோ அதோடு முடிவில் அந்தச் சக்தி தன்மயம் ஆகிவிடுகிறது. இப்படி ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு சக்தியும் உண்டாகி உண்டாகி அழிந்து போவதற்கு ஆதாரமாக இருக்கக்கூடிய சாசுவதமான வஸ்து ஒன்றுதான் ஸ்வாமி; அதற்குப் பெயர் எப்படி இருந்தாலும் இருக்கட்டும்.

பிரேமை-பிரியம் - என்பது நமக்கு இல்லாததால்தான் பல விதமான சண்டைகள் உண்டாகின்றன. சாதிச் சண்டை, தேசச் சண்டை, இன்னும் எத்தனையோ மனஸ்தாபங்கள்; ஒவ்வொரு சமயத்தில் சிலரிடம் மிகவும் பிரியமாக இருக் கிறோம்; அப்புறம் மனஸ்தாபம் உண்டாகிவிடுகிறது, அதனால் துக்கம் உண்டாகிறது. இருந்தாலும் கொஞ்சநாள் பிரியமாக இருக்தோமே, அந்தக் காலம் மிக உயர்ந்ததாகத் தோன்று கிறது. குழந்தையாக இருக்கிறபோது எல்லாரிடத்திலும் பிரியம் அதிகம். பெரியவர்களாகப் போன பிறகுதான் சண்டை, சச்சரவு எல்லாம் பண்ண ஆரம்பித்துவிட்டோம், நாம் குழந்தை யாகவே இருக்கக்கூடாதா என்று இப்போது தோன்றுகிறது.

அநேகமாகக் குழந்தைகளிடம் தாய்க்கு இருக்கிற பிரியம் அதிகம். தனக்கு அவன் தப்புப் பண்ணினாலும் உபத்திரவம் பண்ணினாலும் அவன் நன்றாக இருக்க வேண்டும் என்று அவள் நினைக்கிறாள். அவன் கஷ்டப்பட்டால் அவள் மனம் மிகவும் துக்கப்படுகிறது. 'பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்றுகூட ஒரு வசனம் சொல்லுவது உண்டு. இதைத்தான்,

कुपुत्रो जायेत क्वचिदपि कुमाता न भवति ।

குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா ந பவதி |

என்று சம்ஸ்கிருதத்தில் சொல்வார்கள். குழந்தை எப்படி நடந்துகொண்டாலும் தாய் அதனிடத்தில் எப்போதும் வாத்சல் யத்தோடு பிரியத்தோடு நடந்துகொள்கிறாள். இதுபோல நமக்கு யாரிடமாவது ஒரு மனுஷ்யர்மேல் பிரியம் இருந்தால் அந்தப் பிரியம் ஒன்றைத் தவிர இந்த லோகத்தில் நாம் வாழ்வு தற்கு உபயோகமாவது எதுவுமில்லை. நம்முடைய சுக துக்கத்தைக் காட்டிலும் நாம் பிரியம் வைக்கிற ஒன்றின் சுகதுக்கமே பெரிது என்று நினைத்து அன்பு செய்ய ஆரம்பித்து விட்டால் அதுதான் மிகவும் உயர்வு. இப்படி யாரிடமும் பிரியம் வைக்காமல் நாம்தான் என்று இருந்துவிட்டால் அந்த வாழ்க்கை வீண். வாழ்க்கையில் எப்போதும் சந்தோஷம் வேண்டுமென்

ருல் யாராவது ஒருத்தரிடம் நமக்குப் பிரியம் இருக்கவேண்டும், அதற்குப் பிறகு எல்லாரிடமும் அந்த மாதிரிப் பிரியம் இருக்க வேண்டும். கடைசியில் சகல ஜீவர்களிடத்திலும் நமக்குத் துவேஷமே இல்லாமல் பிரியம் உண்டாகிவிட்டால் அதுதான் மிகவும் உயர்வு.

ஆனுல் சில சமயங்களில் நாம் ஒன்றினிடத்தில் வைக்கிற அதிகமான பிரியமே நம்முடைய துக்கத்திற்குக் காரணமாகி விடுகிறதேயென்றுல் அதுவும் உண்டு. அதிகமான பிரியம் அதிகமான துக்கத்தில்தான் முடிகிறது. நமக்குத் துக்கத்தை ஏற்படுத்துவதற்கே அநேக சோதனைகள் உண்டாகின்றன. தாய்க்குத் தான் பெற்ற பிள்ளையிடத்தில் அதிகப் பிரியம் இருக்கும். பையனுக்குக் கல்யாணம் ஆகி அதற்குப் பிறகு அந்தப் பையன் அவளைக் கவனிக்காவிட்டால் அந்தச் சமயத்தில் பிள்ளையிடத்தில் சிறிது மனஸ்தாபம், துக்கம் எல்லாம் அவளுக்கு வந்துவிடுகின்றன. அவள் வைக்கிற பிரியம் நிரந்தரமாக இருப்பதில்லை. இதனுல்தான்-ஏதோ ஒன்றிரண்டு-பிள்ளை பேரில் தாய் வியாஜ்யம் போடுகிறது, தாயார்மேல் பிள்ளை வியாஜ்யம் போடுகிறது என்று நடந்துகொண்டு வருகிறது.

ஒருவர் இன்னெருவர்மேல் மிகவும் பிரியம் வைக்கிருர். இரண்டு பேரும் ஒருவருக்கொருவர் அதிகப் பிரியமாகவே இருக் கிருர்கள். என்றுலும் யாராவது ஒருவர் முன்னுல் காலமாகி மற்றவர் தங்கினுல் இவருக்கு மிகவும் துக்கம் வந்துவிடுகிறது. இரண்டு பேரும் பிரியம் வைத்து வாழ வேண்டும். இரண்டு பேரும் ஒரே சமயத்தில் இறந்தால் ஒருவர் போய் ஒருவர் தங்கி அநுபவிக்கும் துக்கம் யாருக்கும் உண்டாகாது. இப்படி நடப்பது நம்முடைய கையில் இல்லை. இப்படி எத்தனை பிரியம் வைக்கிறேமோ அத்தனைக்கு அத்தனை துக்கமாகத்தான் முடிகிறது.

பாங்கு, வெகு பேருக்கு உபகாரம் பண்ணுகிறது. தன் னிடம் யார் யார் பணம் போட்டு வைக்கிருர்களோ அவர் களுடைய பணத்தைப் பத்திரமாகப் பாதுகாக்கிறது. யாருக் காவது பணம் வேண்டுமானுல் கொடுத்து உதவுகிறது; அதற்கு உரிய வட்டியை எடுத்துக்கொள்கிறது. இப்படித் துக்க காலத்தில் பலருக்கு அவர்களுடைய துக்க நிவிருத்திக்கு மிகவும் உபயோகப்படுகிறது என்று சொல்கிருர்கள், எந்த வஸ்துவாக இருந்தாலும் அதற்கு ஒரு முடிவு உண்டல்லவா? பாங்கு முறிகிற போது அதில் பணம் போட்டிருப்பவர்கள் தலையில் கை வைத்துக்கொண்டு துக்கப்படுவார்கள். அப்போது யார் யார், 'ஐயோ, என் பணம் போயிற்றே!' என்று அழுகிருர்களோ! இவர்களுடைய துக்கத்தை எல்லாம் பின்னே வைத்துக்

கொண்டுதான் இத்தனை காலமும் பலருக்கு அந்தப் பாங்கு உதவி செய்திருக்கிறது. இவர்கள் அழுகையை வைத்துக் கொண்டு அது வாழ்கிறது.

அந்த மாதிரியானதுதான் ஒருவரிடத்தில் நாம் பிரியம் வைப்பதும். அதிகமான பிரியத்தை ஒருத்தரிடம் வைத்துவிட்டால் முடிவில் இரண்டு பேருக்கும் சண்டை வந்துவிட்டாலும் இரண்டு பேரில் ஒருவர் முந்திக் காலமாகிவிட்டாலும் துக்கம் மிகவும் அதிகமாகிவிடுகிறது. அதனாலே எத்தனைக்கு எத்தனை பிரியம் வைத்தோமோ அத்தனைக்கு அத்தனை இனிமேல் யார் பேரிலும் பிரியம் வைக்கிறதே தப்பு என்று தோன்றும்.

யார் பேரிலும் பிரியம் வைக்காமல் தான்தான் என்று இருந்தால் அந்த ஜன்மமே வீணாகப் போகிறது என்றும் நமக்குத் தெரிகிறது. எத்தனை பிரியம் ஒருத்தரிடம் வைக்கிறோமோ அதனால் கஷ்டம், துக்கம் இவைகள்தாம் வருகின்றன. ஆகவே இனிமேல் யார்பேரிலும் பிரியமே வைக்கக்கூடாது என்றும் நமக்கு அநுபவத்தால் தோன்றுகிறது. ஆகவே இதில் எது சரி, எது தப்பு என்று நமக்குப் புரியவில்லை.

பிறவி எடுத்திருப்பதன் பிரயோஜனமே யாரிடயாவது ஒருத்தரிடம் மாறாத பிரியம் வைப்பதுதான். ஆனால் நாம் பிரியம் வைக்கிற பொருள் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும்? நம்மோடு எத்தக் காலத்திலும் சண்டைக்கு வராத தாக இருக்கவேண்டும்-நம்மை விட்டு எந்தக் காலத்திலும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அழியாத வஸ்துவினிடத்தில் பிரியம் வைத்தால் அந்தப் பிரியம் அழியாமல் இருக்கும். நம்மைவிட்டு அது போகக்கூடாது, அதை வீட்டு நாமும் போகக்கூடாது. அப்படிப்பட்ட வஸ்துவினிடத்தில் பிரியம் வைத்தால்தான் நம்முடைய ஜன்மம் பிரயோஜனம் உடையதாகும். பிரியம் இல்லாமல் ஒரு ஜன்மம் இருந்தால் அது வீண்.

நம்மைக் காட்டிலும் சில மிருகங்கள் ஒன்றோடொன்று அதிகப் பிரியமாக வாழ்கின்றன, பிராணிகளிடம்தான் குழந்தையிடத்தில் தாய்க்கு உள்ள பிரியம் அதிகமாக இருக்கிறது. அந்த மாதிரிப் பிரியம் நமக்கு வேண்டியதுதான். நாம் என்றைக்கும் மாறாத பிரியம் ஒரு வஸ்துவினிடத்தில் வைக்கவேண்டும் என்பது அவசியமானால் அந்த வஸ்து எப்படி இருக்கவேண்டும்? நாம் எல்லாரும் எந்த வஸ்துவினிடத்திலிருந்து உண்டாகி எந்த வஸ்துவினோடு முடிவில் ஐக்கியமாகிவிடுகிறோமோ அந்த வஸ்துவினிடத்தில் வைக்கிற பிரியந்தான் சாசுவதமானது. அந்த வஸ்துவைத்தான் ஸ்வாமி என்கிறோம். நம்மை எல்லாம் உண்டாக்கி, ரட்சித்து, முடிவில் தம்மோடு

ஐக்கியம் செய்துகொள்பவர் ஸ்வாமிதான். அந்த ஈசுவரனிடத்தில் வைக்கிற பக்தி, பிரியமே நம்முடைய ஜன்மாவைப் பலனுடையதாகச் செய்கிறது. மற்றவர்களிடத்தில் வைக்கிற பிரியம் ஒரு காலம் இல்லாவிட்டால் ஒரு காலத்தில் நமக்கு உபத்திரவமாகத்தான் முடிகிறது.

'பகவானிடத்தில் மாத்திரம் அன்பு வைத்துக்கொண்டு மற்றவர்களிடத்தில் துவேஷம் பாராட்டலாமா?' என்பது அடுத்த கேள்வி.

ஸ்வாமி யார்? அவர்தாம் எல்லாமாக இருக்கிறார் என்ற ஞானம் நமக்கு உண்டாக வேண்டும். மண்தான் மரம். வேரின் மூலமாக மண்ணும் எருவும் சென்று அது பெரிய கட்டையாகிறது. திரும்பவும் அது மட்கிப்போகும்போது மண்ணாகவே ஆகிறது. இது தெரிந்தால் மூலமான மண்ணின்மேல் பிரியம் ஏற்படும்போது மண்ணிலிருந்து உண்டாகி மண்ணிலேயே தன்மயமாகப் போகிற எல்லாவற்றினிடமும் பிரியம் தானே உண்டாகும். காரணம், இது ஒன்றுதான் அப்படி எல்லாமாக இருக்கிறது என்ற அறிவு. எல்லாமும் முடிவில் இது ஒன்றாகவே ஆகிவிடப் போகின்றன. இது ஒன்றினிடத்தில் வைக்கிற அன்பு உண்மையானால் இதிலிருந்து உண்டாகி இதாகவே கடைசியில் தன்மயமாகப் போகிற எவற்றின் மேலும் துவேஷம் ஏற்படக் காரணம் இல்லை. ஸ்வாமி ஒருவரிடம் பிரியம் வைத்தால்-அது உண்மையான பிரியமாகவும் இருந்தால்-அது எல்லாரிடமும் வைக்கிற பிரியமாக ஆகிறது. ஈசுவரன்தான் எல்லாரிடத்தும் இருக்கிறான். மாயை என்ற கூட்டைப் போட்டுக்கொண்டு மாடு, மனிதன், குழந்தை என்று பலவாக இருக்கிறான். ஈசுவர ஸ்வரூபம் இல்லாமல் ஓர் உருவமும் உண்டாகாது. ஒடுங்குகிறபோதும் எல்லாம் அந்த ஒன்றினிடத்தில்தான் ஒடுங்குகிறது. ஒன்றை ஆராய்கிற சக்தி, ஒன்றை அறிகிற சக்தி, ஒரு காரியம் செய்கிற சக்தி எல்லாம் அந்த ஈசுவர சக்தியிலிருந்து கொஞ்சம் கொஞ்சம் பிரகாசிக்கின்றன.

சூரியன் இருக்கிறான்; எங்கே பார்த்தாலும் வெயில் வீசுகிறான். அந்தச் சூரியனுக்கு நேரில் ஒரு கண்ணாடியை வைத்தால் அந்தக் கண்ணாடிக்குச் சூரியனுடைய சக்தி கொஞ்சம் உண்டாகிறது. இருட்டைப் போக்கி உள்ளேயிருக்கிற பொருளைக் காட்டும் சக்தி சூரியனுக்கு இருக்கிறது. கண்ணாடிக்குச் சுயமாக அந்தச் சக்தி இல்லை. ஆனால் அதிக இருள் அடைந்த அறைக்குள் இருப்பவற்றைத் தெரிந்துகொள்ள ஒரு கண்ணாடியைச் சூரியனுக்கு எதிரில் வைத்தால் அந்தக் கண்ணாடிக்குங் கூடச் சூரியனது சக்தியிலிருந்து சிறிது சக்தி வந்துவிடுகிறது. சுயமாகப் பிரகாசிக்கவும் இருட்டைப் போக்கவும் சக்தி இல்லாத

கண்ணாடிக்குங்கூடச் சூரியனது சக்தியிலிருந்து ஒளியை வாங்கிக் கொண்டு இருளைப் போக்கும் சக்தி கொஞ்சம் வந்துவிடுகிறது. அந்த மாதிரி, ஜீவன்கள் என்றாலும் அவை பரமாத்ம ஸ்வரூபத்தோடு கலக்கிறபோது அதனுடைய அநுக்கிரகத்தினால் அதனுடைய சக்தி, இவைகளுக்கும் கொஞ்சம் வந்துவிடுகிறது. அன்பு, பிரியம், கருணை, ஞானம் எல்லாம் பூர்ணமாக நிரம்பி இருக்கிற அந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தின் சக்தியினால்தான், அதனுடைய சோதியினால்தான், நம்மிடத்தில் கொஞ்சம் அன்பு, பிரியம், கருணை, ஞானம் என்பவை பிரகாசிக்கின்றன.

அந்தப் பரம்பொருளிடத்தில் நாம் பூர்ணமான அன்பை வைத்துவிட்டால் உலகத்தில் இருப்பவர்களிடம் எல்லாம் நமக்கு நிறைந்த அன்பு உண்டாகிவிடும். அப்போது அந்த அன்புக்கு அழிவு இருக்காது. ஏன் தெரியுமா? நாம் அன்பு வைக்கிற ஒன்று போய்விட்டது என்றால் அது எங்கே போய் விடும்? எந்த வஸ்துவினிடத்திலிருந்து உண்டாயிற்றோ அந்த வஸ்துவோடு ஒன்றுபட்டுவிடும். அந்த வஸ்துதான், சாசுவதமாக இருக்கிறதே! அப்போது இது போய்விட்டது என்று எப்படிச் சொல்ல முடியும்? எப்போதும் ஸ்வாமி இருக்கிறார். நமக்கு அடுத்த பிறவி வந்தாலும் அந்தப் பிறவியை எடுப்பதற்கும் அவரே காரணமாக இருக்கிறார். நம்முடைய பிரியத்தை வைக்க எப்போதும் அவர் இருந்து நம்மை ரக்ஷித்துக்கொண்டிருக்கிறார். எல்லாப் பிறவிகளிலும் தொடர்ந்து ஜீவனுக்குப் பிரியமானவராக இருக்கும்போது நாம் அவரிடத்தில்தான் எப்போதும் அன்பு செய்யவேண்டும். அந்த அன்பு சாசுவதமான அன்பு. அவரிடத்தில் அன்பு செய்தால் எல்லா உயிர்களிடத்திலும் நமக்குப் பிரியம் உண்டாகிவிடும். ஈசுவர பக்தியே சகலப் பிராணிகளிடத்தும் இருக்கிற அன்பாக விளையும். அந்த அன்புக்கு அறிகுறிதான் பூர்ணமான அஹிம்சை; ஒரு பிராணிக்கும் ஹிம்சை செய்யாமல் வாழ்வது.

அஹிம்சை அஹிம்சை என்பதை இப்போது கதையாகப் பேசுகிறோம். வார்த்தையில்தான் சொல்லவேண்டி இருக்கிறது. ஒருவன் அடிக்க வருகிறபோது வெறுமனே இருக்க முடிகிறதா? அஹிம்சை அஹிம்சை என்று சொல்லித்தான் பாகிஸ்தான் உண்டாகிவிட்டது. 'பாகிஸ்தான் ஆக்கிரமித்தால் அதை ராணுவத்தைக்கொண்டு எதிர்க்கத்தான் வேண்டும். அஹிம்சை நமது கொள்கை என்று சும்மா இருக்க முடியாது. காந்தியிடமே உத்தரவு வாங்கி வைத்திருக்கிறேன்' என்று நேரு சொல்லிக் கொண்டிருந்தார்.

அநுபவத்தில் அஹிம்சை என்பது முடியவில்லை. மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றினாலும் எந்த உயிருக்கும்

ஹிம்சை பண்ணுமல் இருக்கவேண்டும் என்பதுதான் பௌத்த மதக் கொள்கை. சொல்வதற்கு நன்ருக இருக்கிறது இது.

ஆனுல் இன்றைக்கு எந்த எந்தத் தேசங்களில் பௌத்தர்கள் அதிகமாக இருக்கிருர்களோ அங்கெல்லாந்தான் தவளை, பாம்பு முதலியவற்றைக்கூடப் பிடித்துச் சாப்பிடுகிருர்கள். சீனு, ஜப்பான் முதலிய இடங்களில் இப்படித்தான் செய்கிருர்கள். யாகம் பண்ணுவது தப்பு; அதில் ஜீவஹிம்சை இருக்கிறது என்று சொல்லி, வேத மதத்திற்கு எதிராகப் புத்த மதம் உண்டாயிற்று. வேதமதத்தை அநுசரிக்கிறவர்களில் கொஞ்சமாவது மாமிசம் சாப்பிடாதவர்கள் இருக்கிருர்கள். ஆனுல் புத்த மதத்தைச் சேர்ந்தவர்களில் சந்நியாசிகள்கூடப் பிச்சை எடுத்து மாமிசம் சாப்பிடுகிருர்கள்.

ஏன் இப்படிச் செய்கிறீர்கள் என்று அவர்களைக் கேட்டால், 'ஜீவஹிம்சை நாம் செய்யக்கூடாது. எவனே அடித்துக் கொன்றுவிட்டான். அது வீணுகத்தானே போகிறது. நாமாக அடித்துச் சாப்பிடக்கூடாதே தவிர அடித்ததைச் சாப்பிடுவதில் குற்றம் இல்லை' என்று நியாயம் சொல்கிருர்கள். இதனுல்தான் நம் தேசத்தில் இருக்கும்படியான முஸ்லிம்களுக்குப் பௌத்த தேசங்களில் அதிக அநுகூலம் ஏற்பட்டது. ராமநாதபுரம் கீழக் கரையிலிருந்து தஞ்சாவூர், நாகப்பட்டினம் வரையில் கடற்கரை ஓரமாக இருக்கிற முஸ்லிம்கள் அதிகமாகப் பௌத்தமதம் உள்ள பர்மா, சிலோன், மலேயா முதலிய இடங்களுக்குச் சென்று கசாப்புக் கடை வைத்தார்கள். அவர்கள் ஆடுமாடுகளை அடித்தார்கள். பௌத்தர்கள் நிறைய வாங்கிச் சாப்பிட்டார்கள். அடிப்பது குற்றமே தவிர, அடித்ததை வாங்கிச் சாப்பிடுவது அவர்களுக்குக் குற்றமில்லை. ஆகவேதான் இங்கிருந்து பல முஸ்லிம்கள் அந்தத் தேசங்களில் முதலில் கசாப்புக் கடை வைக்கப் போனுர்கள். பெரிய பெரிய பணக்காரர்களாகத் திரும்பி வந்தார்கள். இவர்களைப் பார்த்துக்கொண்டுதான் நகரத்தார்கள்-ராமநாதபுரம் கீழ்க்கரைக்குப் பக்கத்தில் உள்ளவர்கள்-முதலில் வட்டிக்கடை வைக்கப் போனுர்கள்.

இவற்றையெல்லாம் எதற்காகச் சொல்லுகிறேன் என்ருல் ஒரு பிராணிக்கும் ஹிம்சை பண்ணக்கூடாது என்ற லட்சியம் மிகவும் நன்ருக இருக்கிறது. ஆனுல் எல்லாரும் பின்பற்ற வேண்டுமென்ருல் அது சாத்தியம் இல்லாமல் போகிறது என்பதற்காகத்தான் சொல்கிறேன். புத்த மதத்தினர் சொல்கிருர்களே: 'நாம் அடிக்கப்படாது; அடித்ததை வாங்கிச் சாப்பிட்டால் தோஷமில்லை' என்று; இதைப்பற்றி இந்த நாட்டிலேயுங்கூட இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே தர்க்கம்

எல்லாம் நடந்திருக்கிறது, திருக்குறளில் இதைப் பற்றி வள்ளுவர் ஒரு குறள் எழுதியிருக்கிறார்;

'தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.'

'நாம் சாப்பிடாமற் போனால் அவன் இப்படி அநேகம் பிராணிகளைக் கொலை பண்ணுவானா? ஆகவே நாம் அடிக்கா விட்டாலும் அடித்துவிட்டதைச் சாப்பிடலாம் என்பது பாவந் தான். சாப்பிடுவதனால்தான் அடிக்கிறான். ஆகவே கொன்றாலும் பாவந்தான்: யாரோ கொன்றான் என்று சொல்லி அதை வாங்கிச் சாப்பிட்டாலும் பாவந்தான்' என்று இரண்டாயிரம் வருஷங்களுக்கு முந்தியே திருவள்ளுவர் எழுதியிருக்கிறார்.

புத்தரைப் பற்றியே ஒரு கதை உண்டு. கடைசிக் காலத்தில் அவர் ஒரு வீட்டுக்குப் போயிருந்தாராம். அங்கே புத்தருக்காகப் பன்றி மாமிசத்தைச் சமையல் பண்ணி வைத்திருந்தார்களாம். அதைப் புத்தர் சாப்பிட்டதனால் அதிசார ரோகம் வந்தது. அதனால் அவர் காலமானதாக எழுதியிருக்கிறார்கள். அந்தக் கதை தவறு சரியா என்பது சர்ச்சைக்குரிய விஷயமாக இருக்கலாம். அதைப்பற்றிப் பௌத்தர்கள் வேறுவிதமாகவும் சொல்லிக்கொள்ளலாம். ஆனால் இந்த மாதிரியாக ஒரு கதை இருப்பது உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும் என்றே நினைக்கிறேன். வள்ளுவர், பௌத்தர்களைக் கண்டிக்கத்தான் இப்படி ஒரு குறளை எழுதினாரோ என்னவோ அதுவும் தெரியாது. புத்தர், காந்தி இவர்கள்தாம் அஹிம்சையைப்பற்றி அதிகமாகப் பிரசாரம் செய்தார்கள். எல்லாரும் ஓர் உயிருக்குக் கூட ஹிம்சை செய்யாமல் வாழவேண்டும் என்று அதிகாரி பேதம் இல்லாமல் இந்த லட்சியத்தை உபதேசம் செய்தார்கள்.

காந்தியே ஒரு சமயம் ஒரு பசுவின் கன்றை மருந்து கொடுத்துக் கொன்றார்; அவர் அப்படிச் செய்தது தப்பு என்று சிலர் கண்டித்தார்கள். 'அது கஷ்டப்பட்டது. அதனுடைய கஷ்டத்தை நிவிருத்தி செய்ய நான் கொன்றேன்' என்று காந்தியே சொன்னார். ஹிம்சையை நிவிருத்திக்க அங்கே ஒரு ஹிம்சை.

ஒரு சமயம் ஒரே பஞ்சம் வந்தபோது கடற்பகுதி கொஞ்சங் கூட இல்லாத மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம் போன்ற பல ராஜ்யங்கள் மத்திய அரசாங்கத்திலிருந்து அதிக உணவு உதவி வேண்டும் என்று கேட்டுக்கொண்டன. ஓர் ஆலோசனைக் கூட்டம் நடந்தது. அதில் காந்தியும் ஆலோசகராகக் கலந்து கொள்ளும்படி ஏற்பட்டது. சென்னையிலிருந்து போனவர்கள் தங்களுக்கும் அதிக உணவு உதவி வேண்டும் என்று கேட்ட

போது காந்தி சொன்னார். 'சமுத்திரமே சுற்றி இல்லாத ராஜ்யங்களைச் சேர்ந்தவர்கள்தாம் ஒரே அழுகையாக அழுகிறார்கள், மூன்று பக்கமும் கடலால் சூழப்பட்டிருக்கும் உங்களுக்குமா பஞ்சம்? நீங்களும் அழுகிறீர்களே? அரபிக்கடல், இந்து மாகா சமுத்திரம், வங்களாக் குடாக்கடல் ஆகிய மூன்றும் உங்கள் பிரதேசத்தைச் சுற்றி இருக்கும்போது உங்களுக்கு என்ன பஞ்சம்?' என்று கேட்டாராம். அதாவது, 'நிறைய மீன்கள் அந்தக் கடல்களில் கிடைக்குமே. பிடித்துச் சாப்பிடக்கூடாதா?' என்பது அவர் யோசனை. இப்போது, பாகிஸ்தான் ஆக்கிரமித்தால் நாம் அவர்கள்பேல் படையெடுப்பதற்குக் காந்தியிடமிருந்தே உத்தரவு வாங்கி வைத்திருக்கிறேன்' என்று நேரு சொன்னார்.

இவற்றையெல்லாம் யோசிக்கும்போது அஹிம்சை என்பது கொள்கையளவில் பேச்சளவில் நன்றாக இருக்கிறதே தவிர, காரியத்தில் வரும்போது மிகவும் சிரமம் என்று தெரிகிறது. அநுஷ்டிக்க முடியவில்லை. அதைப்பற்றி நிறையப் பிரசாரம் செய்கிறவர்களே பல விலக்குகள் செய்யவேண்டியிருக்கின்றன என்பதற்காக இவற்றைச் சொல்ல வந்தேன். வேறு யாராவது ஒரு தனி மனிதரைப் பற்றிச் சொன்னால் அவரைப் பல பேர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். காந்தி, புத்தர் இவர்களைப்பற்றித் தெரியாதவர்களே இருக்க முடியாது. நிறையப் பத்திரிகைகளிலும் வந்திருப்பதால் எல்லாருக்கும் தெரிந்திருக்கும். அதனால்தான் அவர்களைப்பற்றிச் சொன்னேன். அவர்கள் பண்ணினது தப்பா சரியா என்று முடிவு கட்டுவதற்காகச் சொல்லவில்லை. சரி, தப்பு என்றால் அப்புறம் நான் சொல்வது தப்பா சரியா என்று சர்ச்சை செய்யவேண்டி வரும். ஆகவே அதைப்பற்றி இப்போது பேச்சில்லை. அஹிம்சை என்பது நல்லதுதான்; ஆனால் அநுஷ்டானத்தில் இந்தக் கொள்கை எல்லாருக்கும் பொருந்தாது. எல்லாராலும் அநுசரிக்கமுடியாது. எல்லாரும் அநுசரிக்க வேண்டுமென்றால் அநேக விலக்குகள் ஏற்படும். அப்புறம் மூலக் கொள்கைக்கே ஆபத்து. புத்தர் அவதாரந்தான் காந்தி என்கிறார்கள். புத்தர், காந்தி இவர்களாலேயே அந்தக் கொள்கையைப் பூர்ணமாகச் சாதிக்க முடியவில்லை என்பதற்காகத்தான் சொன்னேன்.

ஜைனர்களுக்கு அப்படி இல்லை. அவர்கள் எல்லாரும் தட்சிண தேசத்துப் பிராமணர்களைப் போலவும் சைவர்களைப் போலவும் உள்ளவர்கள். வடதேசத்திலுங்கூட மார்வாடிகளும் குஜராத்திக்காரர்களும் அநேகமாக மாமிசம் சாப்பிடமாட்டார்கள். குஜராத்திக்காரர்கள் வெள்ளைக் கல்கண்டுகூடச் சாப்பிடமாட்டார்கள்.

கோரக்பூரிலிருந்து கல்யாண கல்பதரு என்ற பத்திரிகை வருகிறது. எண்ணூறு பக்கத்திற்குமேல் உள்ள மலர்கள் ஒரு லட்சம் பிரதிகளுக்குமேல் போடுகிறார்கள். அதில் ஒரு விளம்பரங்கூட இராது. வண்ணப்படங்கள் பல இருக்கும். முழுக்க முழுக்கப் பக்தியைப் பற்றியே அதில் எழுதுகிறார்கள். நம் மடத்திற்கு மிகவும் சுவாதீனமானவர்கள்தான். ஆனால் மடத்து விஷயம் ஏதாவது கொடுத்தால் போட மாட்டார்கள். அப்படிப் பத்திரிகை முழுக்க ஒரே விஷயமாக இருக்கும்.

ஒரு சமயம் அந்தக் கீதா பிரஸ் சொந்தக்காரரும் வேறு பலரும் நானூறு பேர்களுக்குமேல் காஞ்சீபுரம் வந்திருந்தார்கள். அன்றைக்கு எனக்கு மௌன தினம். இருந்தாலும் மாமரத் தடிக்குச் சென்று அவர்களை வரவழைத்துச் சந்தித்தேன். யாரோ கல்கண்டு வாங்கி வந்தார். அதை எடுத்து அவர்களுக்குப் பிரசாதமாகக் கொடுத்தேன். அவர்கள் கல்கண்டை உபயோகப்படுத்தமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். (நான்கூட வடக்கே போய்விட்டு வந்த பிறகு சில வருஷங்கள் மடத்தில் கல்கண்டே உபயோகப்படுத்தக் கூடாது என்று வைத்திருந்தேன். கரும்புச் சாற்றைச் சுத்தமாக்கிக் கல்கண்டாக்க மாட்டு எலும்புகளை உபயோகப்படுத்துகிறார்கள். அதை உபயோகப்படுத்திச் சுவாமி நிவேதனத்திற்குப் பாயசம் பண்ணலாமா என்பதுதான் காரணம். அப்புறம் இப்போது சமீப காலத்தில் மாட்டு எலும்பே உபயோகப்படுத்துவதில்லை என்று சர்க்கரை ஆலை நிபுணர்களில் சிலர் என்னிடம் சொன்ன பிறகு உபயோகப்படுத்த ஆரம்பித்தேன்.) நான் கல்கண்டு கொடுத்த போது சிலர், 'சுவாமிகள் கொடுக்கிறாரே, வேண்டாம் என்று எப்படிச் சொல்வது?' என்று தயங்கித் தயங்கி வாங்கிக்கொண்டார்கள். ஒரு பெண் நான் கல்கண்டு கொடுத்தவுடன் சடடென்று, 'यह काम में नहीं आता । कोई दूसरा प्रसाद दीजिये ।' என்று சொல்லிவிட்டாள். 'இது ஒரு காரியத்திற்கும் உபயோகப்படாதே; வேறு பிரசாதம் ஏதாவது தரவேண்டும்' என்று கேட்டுவிட்டாள். அவர்கள் எல்லாரும் இன்னும் பூர்ணமாக ஆகாரசுத்தத்தோடு இருக்கிறார்கள். நம் தேசத்திலும் சைவர்களில் சிலரும் பிராமணர்களில் அநேகரும் ஆகார சுத்தியோடு இருக்கிறார்கள். ஆனால் வடக்கே முதலில் எங்கெங்கே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு புத்த மதம் இருந்ததோ அங்கெல்லாம் உள்ளவர்கள் - பிராமணர்கள் உட்பட - மாமிசம் சாப்பிட்டுக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

இயேசு கிறிஸ்து என்ன சொன்னார்? ஒரு கன்னத்தில் அடித்தால் இன்னொரு கன்னத்தைக் காட்டச் சொன்னார். அவர் தம்முடைய வாழ்வில் பூர்ணமாக அஹிம்சை முறையை அநுஷ்

டித்திருக்கலாம். ஆனால் இன்றைக்குக் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர்களிடம், 'ரஷியாக்காரன் அடித்தால் அடிக்கட்டும்; நீங்கள் இன்னொரு கன்னத்தையும் காட்டுங்கள்' என்று கிறிஸ்துவே நேரில் வந்து ஒருவேளை சொன்னாலும் அவர்கள் கேட்பார்களா?

எல்லாரும் பூர்ண அஹிம்சையைப் பின்பற்ற வேண்டும் என்பது முடியாததாக இருக்கிறது. சில சமயங்களில் ஹிம்சை அவசியமாகவும் ஆகிறது என்பதற்காகத்தான் இத்தனையும் சொன்னேன். முதலில் நாம் யாரிடமாவது பிரியமாக இருக்க வேண்டும், யாரிடமாவது பிரியம் வைத்தால் முடிவில் துக்கந் தான் வரும். ஆகவே என்றைக்கும் நமக்குத் துக்கத்தைக் கொடுக்காமல் ஆனந்தத்தையே கொடுத்துக்கொண்டிருக்கும் ஈசுவரனிடத்தில் பிரியத்தை வைக்கவேண்டும் என்றேன். ஈசுவரனிடத்தில் பிரியம் வைத்தால் உலகத்திலுள்ள வேறு ஒன்றினிடத்திலும் பிரியம் வைக்கவேண்டாமா என்ற கேள்வியைக் கேட்டுக்கொண்டேன். ஈசுவரன் வேறு, உலகிலுள்ள மற்றவை எல்லாம் வேறு என்ற மித்யா ஞானம் இருக்கிற வரைக்குந்தான் இந்தப் பேதம் தோன்றும். ஈசுவரனே எல்லாமாக இருக்கிறான் என்ற ஞானம் வந்துவிட்டால் நமக்கு ஈசுவரனிடத்தில் இருக்கிற பிரேமை, பிரியம் எல்லாம் உலகத்திலுள்ள எல்லாரிடத்திலும் உண்டாகிவிடும். யாரிடமும் நமக்குத் துவேஷமோ வெறுப்போ இராது என்ற பதிலும் சொன்னேன். இப்போது ஈசுவரனிடத்தில் வைக்கிற பிரேமை, எல்லாரிடத்திலும் வைக்கிற பிரேமை ஆகிறது என்பதற்கு அறிகுறியே அஹிம்சை. ஒரு ஜீவராசிக்கும் ஹிம்சை செய்யாமல் இருப்பது என்பது அநுஷ்டானத்தில் சாத்தியமாகாமல் இருக்கிறது என்பதற்குத்தான் இத்தனை உதாரணங்களையும் சொன்னேன். அஹிம்சை என்பது நல்லதுதான். ஆனால் எல்லாராலும் அதைப் பின்பற்ற முடியாது. அஹிம்சை, அஹிம்சை என்று சதா உபதேசம் செய்துகொண்டிருந்தவர்களுங்கூட உலக இயலை ஒட்டிப் பல காரியங்களைச் செய்ய முற்படும்போது அதற்குப் பல விலக்குகளைக் கொண்டுவரும்படி நேரிட்டிருக்கிறது என்பதற்குச் சில திருஷ்டாந்தங்களையும் காட்டினேன்.

இந்த விஷயத்தில்தான் நம்முடைய மதத்திற்கும் வேறு மதத்திற்கும் முக்கியமான வேறுபாடு இருக்கிறது. அந்த வேறுபாடு எதற்காக என்பதைப் பார்க்கவேண்டும். அஹிம்சை என்பது நம்முடைய மதத்திலும் பிரதானமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் காந்தியைப்போலவோ புத்தரைப்போலவோ எல்லாரும் அதைப் பின்பற்றவேண்டும் என்று உபதேசம் செய்யவில்லை. அப்படிச் சொன்னாலும் அதை எல்லாராலும் பின்பற்ற

முடியாது. அதனால் அந்த லட்சியமே பொய் என்று ஆகிவிடும் என்றுதான் எல்லாருக்கும் அதைச் சொல்லவில்லை. இன்ன இன்ன தர்மங்களை இன்ன இன்ன ஆசிரமத்தார்கள் அநுஷ்டிக்க வேண்டும் என்று அதிகாரி பேதம் பண்ணிவைத்தார்கள்.

வேதாகமங்களுக்கு அதிகாரியாக இருக்கிறவர்கள் சந்நியாசிகள், இன்னும் அவர்களைப் போன்ற சில பேர்கள், யோகிகள், இவர்கள் முக்கியமாக மாமிசம் சாப்பிடக்கூடாது; ஒரு ஜீவனுக்கும் ஹிம்சை பண்ணக் கூடாது என்று நம் மதத்தில் வைத்துக்கொண்டிருக்கிறோம். இதைப் பார்த்துக் சகல சாதிக்காரர்களும் கொஞ்சம் வயசானவுடன் மாமிசம் சாப்பிடுவதை நிறுத்திவிடுகிறார்கள். 'நாங்கள் சுத்த சைவந்தான். இரண்டு தலைமுறையாக அப்படி இருக்கிறோம்' என்று சிலர் சொல்வதைக் கேட்கிறோம். இன்னும் சிலர், 'வீட்டில் சாப்பிடுவார்கள். ஆனால் என்கிட்டவே அந்த வாடை வரக்கூடாது' என்று சொல்கிறார்கள். இப்படி ஓர் உயர்ந்த கொள்கையைச் சிலர் விடாமல் அநுஷ்டானத்தில் கடைப்பிடித்து வந்தால் மற்றப் பேர்களும் மனப் பக்குவம் வந்தவுடன் அந்த நிலைக்கு உயர்வதற்கு நம் மதத்தில் வசதி இருக்கிறது. அதனால்தான் எல்லாருக்கும் ஒரு கொள்கை என்று இராமல் சில சில நல்ல கொள்கைகளை, அநுஷ்டானங்களைச் சில சில சாதியார்கள் கண்டிப்பாக அநுஷ்டிக்கவேண்டும் என்று வைத்துக்கொண்டிருக்கிறோம். அதிகாரி பேதம் வைத்துக்கொண்டிருக்கிறோம். அதனால்தான் நம்முடைய மதக் கொள்கைகள் அழிந்து போய் விட்டன என்ற சொல் வராமல் இன்றுவரைக்கும் ஏதோ கொஞ்சமாவது காப்பாற்றிக்கொண்டு வந்திருக்கிறோம்.

நம் ராஜ்யத்தைக் காட்டிலும் பிற ராஜ்யங்களில் எத்தனையோ பங்கு உயர்ந்த அநுஷ்டானங்கள் இருக்கின்றன. வங்காள தேசத்தவர்கள் மீன் சாப்பிடுகிறார்கள் என்று பொதுவாகச் சொல்லலாம். ஆனால் வங்காள தேசத்து விதவைகள், தாமே சமையல் பண்ணிச் சுத்தமான ஆகாரத்தைத்தான் சாப்பிடுவார்கள். மாமிசமே சாப்பிடமாட்டார்கள். ஏகாதசி அன்றைக்கு வாயில் ஒரு சொட்டுப் பச்சைத் தண்ணீர்கூட விடமாட்டார்கள்.

பல இடங்களில் இருப்பதுபோல வங்காள தேசத்தவர்களும் பம்பாய், குஜராத், உத்தரப்பிரதேசம், டெல்லி எல்லா இடங்களிலும் நிறைய இருக்கிறார்கள். சென்னைக்குத்தான் வங்காளிகள் மிகுதியாக வரவில்லை.

டெல்லியில் உஷ்ணம் அதிகம். வெயில் தாங்க முடியாது; நினைத்தாலே கஷ்டமாக இருக்கும். கோட்டை அடுப்பிலிருந்து

காற்று, வந்தால் எப்படியோ அப்படி ஊர் முழுக்க நெருப்புக் காற்று, மாசி மாதம் ஆரம்பித்தால் ஆனிமாதம் வரைக்கும். அடிக்கும். அங்கே இருப்பவர்களுக்குத்தான் அந்தக் கஷ்டம் தெரியும்.

ஏகாதசிக்குப் பச்சைத்தண்ணீர்கூடக் குடிக்காமல் இருக்கும் அநேக வங்காள தேசத்து விதைகள், உஷ்ணம் தாங்காமல் செத்துக்கொண் டிருந்தார்கள். அப்புறந்தான் பண்டிதர்களை எல்லாம் கூட்டி ஒரு சபையில் இதற்குச் சாஸ்திரப்படி என்ன செய்வது என்று ஆலோசித்தார்கள். 'அவர்கள் ஏகாதசி அன்றைக்கு வாயில் தண்ணீர் விடக்கூடாதுதான். காதில் வேண்டுமானால் கொஞ்சம் தண்ணீர் விட்டுக்கொள்ளட்டும். அதனால் இரண்டொருவர் பிழைத்தால் பிழைக்கட்டும்' என்று தீர்மானம் செய்தார்களாம். அத்தனை கடுமையான அநுஷ்டானம் அங்கே இருக்கிறது.

பிராமணர்களிலோ வைசியர்களிலோ வைதவ்யம் அடைந்த பெண்கள், 'புருஷனுக்குப் பிறகு அலங்காரம் என்ன வேண்டியிருக்கிறது!' என்று தலைமயிரை எடுத்துவிடுகிறார்கள். தென்கலை வைஷ்ணவர்கள் அது கூடாது என்று இருக்கிறார்கள். இப்போது மற்றவர்களிலும் அநேகம் பேர், 'தலைமயிரை எடுப்பானேன்?' என்று இருக்கிறார்கள். ஆனால் வங்காளத்தில் இருக்கிறவர்கள் எந்தச் சாதிக்காரர்களாக இருந்தாலும் தலைமயிர் வைத்துக்கொண் டிருக்க மாட்டார்கள். புருஷன் போய்விட்டான் என்றால் உடனே தலைமயிரை எல்லாச் சாதிக்காரர்களும் இன்றுங்கூட எடுத்துவிடுகிறார்கள்.

நம் தேசத்திலும் புருஷர்கள் ஊருக்குப் போயிருக்கிற போது பெண்கள் பூண்டுரசம் வைத்துச் சாப்பிடுவார்கள். அப்படி வங்காள தேசத்துப் பெண்கள், புருஷர்கள் வெளியூர் போயிருக்கும்போதுதான் மச்சம் சமைப்பார்கள். அது சாப்பிட வேண்டும் என்ற ஆசையைவிட, சாப்பிடாவிட்டால் தங்களுக்கு எங்கே வைதவ்யம் வந்துவிடுமோ என்ற பயந்தான் அவர்களுக்கு அதிகம்.

இப்படி அநேக ஆசாரங்கள் நம் தேசத்தில் பல பல வகையாக அநுஷ்டிக்கப்படுகின்றன. ஒவ்வொருவரிடமும் ஒவ்வோர் உயர்ந்த குணம் இருக்கிறது. எப்போதுமே எந்த உயர்ந்த குணமாக இருந்தாலும் அதை எல்லாரும் அநுஷ்டிக்க வேண்டும் என்றால் முடியாது போகும். அதற்காகத்தான் அதிகாரி பேதம் செய்து, பல வர்ணாசிரமங்களை ஏற்படுத்தினார்கள். இன்னார் இன்னாருக்கு இன்ன இன்ன தர்மம், அவற்றை அவர்கள் காப்பாற்ற வேண்டும் என்று செய்தார்கள். எல்லாரும் எல்லாவற்றையும் பின்பற்றுவது என்றால் ஒன்றுமே நடக்காது.

நாங்கள் ஒரு சமயம் வடநாட்டுக்கு யாத்திரை போயிருந்த போது வங்காளத்துக்குப் போனோம். அங்கே இருந்தவர்கள் எங்களுக்கு வேண்டிய ஆகார வசதிகளை ஏற்பாடு செய்திருந் தார்கள். நானூறு பேர் சமைத்துச் சாப்பிடுவதற்கு வேண்டிய சாமான்களைக் கொண்டுவந்து வைத்திருந்தார்கள். அதில் புளி இல்லை. அவர்களுக்குப் புளியே வேண்டாம். சப்பாத்தி, ரொட்டி, பருப்பு, இவைகளே அவர்கள் ஆகாரம். நாங்கள் புளி வேண்டும் என்று கேட்டவுடன் எங்கேயோ நாலைந்து மைல் போய் ஒரு புளிய மரத்திலிருந்து கொஞ்சம் பச்சைக் காய்களைப் பறித்துக் கொண்டுவந்து கொடுத்தார்கள். 'இதை என்ன பண்ண முடியும்? 'நிறையப் புளி வேண்டுமே' என்று சொன்ன போது, **'क्या आप इमली खाते हैं या चावल खाते हैं?'** 'நீங்கள் புளியைச் சாப்பிடுகிறீர்களா? அல்லது அரிசியைச் சாப்பிடுகிறீர் களா?' என்று கேட்டார்கள்,

ஒவ்வொரு பக்கத்தில் ஒவ்வோர் ஆசாரம் இருக்கிறது; ஒவ்வொரு பழக்கம் இருக்கிறது. இதில், 'ஒன்று உயர்ந்தது, ஒன்று தாழ்ந்தது, எல்லாரும் ஒன்றையே கடைப்பிடிக்க வேண்டும்' என்று நினைப்பது தப்பு; அது முடியாது.

நம் தேசத்தில் உள்ளவர்களே சுவாதீனமாகப் பிராம்மணப் பிள்ளைகளைப் பார்த்தால், 'பருப்புத் தின்னிப் பார்ப்பான்' என்று பரிகாசம் செய்வர்கள். இது இவர்கள் சுவாதீனத்தோடு சொல்வது. வெளி தேசத்தவர்கள் நம்மைக் கொஞ்சம் பரிகாச மாகவே, 'நீங்கள் என்ன, காய்கறிகளைத் தின்றுகொண் டிருக்கிறீர்கள்! எவ்வளவு மாமிசம் உங்கள் தேசத்தில் கிடைக்கும்? அது எல்லாம் வீண்தானே?' என்று அங்கே போகும்போது கேட்கிறார்கள். மாமிசம் சாப்பிடாததனால் அவர்களுக்கு மிகவும் மட்டம் போலத் தோன்றுகிறது: அவர் களை ஒரு கேள்வி கேட்டால் என்ன என்று நான் சில சமயம் நினைப்பது உண்டு. 'நீங்கள் மாமிசம் சாப்பிடுகிறீர்கள். இன்னும் சிலர் நரமாமிசத்தையே சாப்பிடுகிறார்கள். அவர்களை நீங்கள் உங்களைவிட மிகவும் மட்டமானவர்களாக நினைத்து, 'கானிபால் (Cannibal)' என்று பரிகாசம் செய்கிறீர்கள். நர மாமிசம் சாப்பிடுகிற கானிபாலைவிட உயர்ந்தவர்கள் நீங்கள் என்றால் உங்களைவிட எந்தப் பிராணியினுடைய மாமிசத்தையும் சாப்பிடாத நாங்கள் உயர்ந்தவர்கள் அல்லவா?' என்று கேட்க லாம் என்று தோன்றும்.

செத்தவுடனே மனிதர்களையும் உபயோகமில்லாத வயதான மனிதர்களையும் சரிப்படுத்திப் பக்குவம் செய்து ஆகாரத்திற்கு உபயோகப்படுத்தி விட்டால் உணவுப்ப்ரச்னை வெகுதூரம் தீர்ந்துவிடும் அல்லவா?

ஜர்மன் தேசத்தவர்கள் யுத்த காலத்தில் குதிரை மாமிசம் சாப்பிட்டார்கள் என்று அவர்கள் பேரில் தூஷணம் சொன்னார்கள். மாட்டு மாமிசத்தை அவர்கள் தின்கிறார்கள். குதிரை மாமிசம் தின்றவனைப் பரிகாசம் செய்கிறார்கள். ஆக இவர்கள் எல்லாரையும்விட எந்த ஜீவனையும் கொன்று, அதன் மாமிசத்தைச் சாப்பிடாமல் இருப்பவர்கள் மிக மிக உயர்ந்தவர்கள். ஆனால் இது எல்லாருக்கும் அநுஷ்டானத்தில் சாத்தியம் இல்லை? அதனால்தான் இன்ன இன்ன வர்ணத்தாருக்கு இது இது தர்மம் என்று நம் மதத்தில் பாகுபாடு செய்து வைத்தார்கள்.

நம் மதப் பிரகாரம் சந்நியாசிகள், தானியங்களைச் சாப்பிடுவதுகூடத் தப்பு. தானியத்தில் கரு இருக்கிறது, முளைக்கிறது. அதைச் சாப்பிடுவதும் கர்ப்பத்தைச் சேதம் பண்ணுவது போன்றதுதான். ஆகவே, பழங்கள், மரத்திலிருந்து தாமே உதிர்ந்த சருகுகள் இவற்றைச் சாப்பிடவேண்டும் என்று விதித்தார்கள்.

जीर्णपर्णाशिनः क्वचित् ।

ஜீர்ணபர்ணாசிந: க்வசித் ।

உதிர்ந்துபோன இலைகளைச் சாப்பிடவேண்டும்; சாத்துக்குடி, மாம்பழம் இவற்றின் விதைகளை நீக்கிச் சாப்பிடவேண்டும். சுத்தமான பழ ஆகாரங்களையே மகரிஷிகள் சாப்பிட்டு வந்திருக்கிறார்கள். பழ உணவே, 'பல ஆஹாரம்'; அதுதான் பலஹாரம் என்று வந்துவிட்டது. இப்படிச் சாப்பிட்டால் சாந்தம் இருக்கும்; காமம் மிகுதியாகாது; குடும்பக் கட்டுப்பாட்டுக்கு அவசியம் இராது.

மிருகங்களிலும் சில, மாமிசமே சாப்பிடுவதில்லை. சில, மாமிசத்தைத் தவிர வேறு ஒன்றும் சாப்பிடுவதிலை. மனிதன் மாமிசத்தையும் சாப்பிட்டு ஜரித்துக்கொள்கிறான்; மற்றப் பொருள்களையும் சாப்பிட்டு ஜரித்துக்கொள்கிறான். இருந்தாலும் மிருகங்களுக்கு இல்லாத ஒரு சக்தி, அறிவு இவனுக்கு இருப்பதனால் எதை விலக்கி எதைக் கொள்ளவேண்டும் என்று ஆராய்ந்து சாப்பிட முடியும்.

மாமிசம் சாப்பிட்டால்தான் பலம் என்று சிலர் நினைக்கிறார்கள். பலத்திற்கு எப்போதும் யானையை உபமானமாகச் சொல்கிறோம். 'யானைப் பலம்' என்கிறோம். மற்றப் பிராணிகளுக்கு இல்லாத பலம் அதற்கு இருக்கிறது. ஆனால் அந்தச் சக்தி, மாமிசம் சாப்பிடுவதனாலா அதற்கு வருகிறது? யானை கொஞ்சமாவது மாமிசம் சாப்பிடுமா?

शुष्कैस्तृणैर्वनगजा बलिनो भवन्ति ।

ஶுஷ்கைஸ்த்ருணைர்வநகஜா பலினோ பவந்தி !

வெறும் புல், தேங்காய்மட்டை முதலியவற்றைத் தின்கிற யானைக்குப் பலமா இல்லை? அவ்வளவு பலம் இருந்தும் அது புலி, சிங்கம் மாதிரிப் பாயாமல் சாந்தத்தோடு இருக்கிறது. அதனால் அதை ரக்ஷித்துக்கொண் டிருக்கிறோம்.

சத்தியமே பேச வேண்டும் என்பது உயர்ந்த கொள்கை. பத்துத் திருடர்களாக ஒரு பெண்ணை விரட்டி வந்தால், 'அவள் அங்கே ஒளிந்துகொண் டிருக்கிறாள்' என்று சத்தியத்தைச் சொன்னால் அது உயர்ந்ததா?

सत्यं भूतहितम्

ஸத்யம் பூதஹிதம்

என்கிறார்கள். பூர்ணமான சத்தியம் என்றால் அங்கே மௌனமாக இருக்க வேண்டும்.

சத்தியமே வேண்டும் என்றால் பொய்யோ மெய்யோ ஒன்றும் சொல்லாமல் மௌனமாக இருக்க வேண்டும். ஆனால் இந்தக் கொள்கையை எல்லாரும் பின்பற்ற முடியாது. இதற்கும் அதிகாரி பேதம் உண்டு. இப்படி நம்முடைய மதத்தில் அநேக கொள்கைகள், ஒவ்வொரு முறையில் காப் பாற்றப்பட்டு வந்திருக்கின்றன. மிக உயர்ந்த கொள்கையாக ஒன்று இருந்தால் அதை எல்லாருக்கும் சொல்லிப் பலன் இல்லை. எல்லாராலும் அதை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வர முடியாது.

வேதத்தை ரக்ஷிக்க வேண்டியவன் பொய் சொல்லக் கூடாது; புலால் உண்ணக்கூடாது; கப்பல் ஏறி வெளிநாடு களுக்குப் போகக் கூடாது. அந்நாட்டுப் பழக்கவழக்கங்களில் அவன் ஈடுபடக்கூடாது. அந்தப் பழக்கவழக்கங்களை இங்கே கொண்டுவந்து மந்த்ரஸாந்நித்யத்துடன் கூடிய வேதத்தை ரக்ஷிக்கக்கூடிய பொறுப்பு ஏற்பட்டிருக்கும் தன் ஸ்வஜாதி பந்துக்களிடம் கலக்கும்படி செய்யக்கூடாது. இப்படி அவனுக்கு அநேக தர்மங்கள் இருக்கின்றன.

வியாபாரிகள் என்றால் அவர்களுக்கு வேறு சில தர்மங்கள். அவர்களுக்கு, 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்று சொன்னார்கள்.

சந்நியாசிக்குப் பெண்டாட்டி இல்லை; பிள்ளைகுட்டி இல்லை. அவர்களைக் காப்பாற்ற வேண்டிய கடமை இல்லை. சொந்தமாக அவன் சமையலே செய்யக்கூடாது. இலையைக்கூடக் கிள்ளக்

கூடாது. பூரணமான அஹிம்சைக்கு அவனே அதிகாரி. அவன் யாகங்கூடச் செய்யக்கூடாது. பிட்சை எடுத்தே சாப்பிட வேண்டும். மற்றவர்கள் எல்லாம் படிப்படியாக அஹிம்சைக்கு அதிகாரிகள். கிருகஸ்தர்கள், குழந்தை குட்டிகளைக் காப் பாற்றவேண்டி இருக்கிறது. மனைவியினுடைய கற்பைக் காப் பாற்றவேண்டிய பொறுப்பு அவனுக்கு இருக்கிறது. அவ ளுடைய மான அவமானம், குடும்பத்தின் மான அவமானம் எல்லாவற்றையும் ரட்சித்துச் சந்நியாசிகளை ஆதரித்துப் பல கர்மாக்களைச் செய்யவேண்டி இருக்கிறது. இப்படிப்பட்ட வர்கள் தர்மத்தை நிலைநாட்டச் சில சமயங்களில் ஹிம்சையான காரியத்தைச் செய்யவேண்டி இருக்கும். ஆகவே இவர்களுக்கு அஹிம்சை என்பது பூர்ணமாக இல்லை. பிரம்மசாரிக்கு ஒரு தர்மம், கிருஹஸ்தனுக்கு ஒரு தர்மம், சந்நியாசிக்கு ஒரு தர்மம், ஒவ்வொரு வர்ணத்தவர்களுக்கு அவரவர்களுடைய கடமைகளை அநுசரித்து ஒவ்வொரு தர்மம் என்று இப்படியாகப் பிரித்துக்கொண்டு, நம் மதஸ்தர்கள் அநாதிகாலம் தொட்டு மிக மிக உயர்ந்த கொள்கைகளை எல்லாம் அழிந்து போகாமல் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். எல்லாரும் ஒன்றுதான்; எல்லாரும் எல்லாக் காரியங்களையும் செய்யலாம் என்று இப்போதுதான் அரசியல் ரீதியில் பேச ஆரம்பித்து, எல்லாரும் எல்லாத் தர்மங்களையும் உயர்ந்த கொள்கைகளையும் விட்டுக் கொண்டு வருகிறோம்.

சில காலத்திற்கு முன்பு வரையில் பிராமணன் ஒருத்தன், வேறு வர்ணத்தவன் வீட்டில் சாப்பிடத் தயாராகப் போனாலும், 'இல்லை சுவாமி. நீங்கள் சாப்பிடக்கூடாது, வேண்டுமானால் பால் வாங்கி வருகிறேன்: சாப்பிடுங்கள்' என்று சொல்வான். சேரிக்குப் பிராமணன் போனால் சட்டி பானைகளைக் கொண்டு வந்து உடைத்து, 'நீ இங்கே வராதே, உன் தர்மத்தைக் காப்பாற்று' என்று விரட்டுவார்கள். தங்கள் தங்கள் தர்மத்தைக் காப்பாற்றவேண்டும் என்ற நினைப்போடு, இதர வர்ணத்தவர்களும் அவரவர்களுடைய தர்மத்தைக் காப்பாற்றும் படி உதவவேண்டும் என்ற மனப்பான்மை அந்தக் காலத்தில் இருந்தது.

'அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.'

என்று வள்ளுவர் துறவற இயலில் சொல்கிறார். யாகம், யக்ஞம் எல்லாம் பண்ணுவது கிருகஸ்தனுடைய தர்மம். சந்நியாசிக்கு யாகம் வேண்டாம், யக்ஞம் வேண்டாம். ஒரு சின்ன இலை யைக்கூடக் கிள்ளக்கூடாது. அது அவன் தர்மம். கிருகஸ்த

னுடைய தர்மத்தை அவர் சொல்லும்போது இல்லற இயலில் அவன் கடமையைச் சொன்னார்.

**'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை.'**

செத்துப்போனவன், சாகாது இருக்கும் சந்நியாசி, பிரம்மசாரி இவர்களை எல்லாம் அவன் ரட்சிக்க வேண்டியவன் என்பதை வற்புறுத்தினார். இங்கே துறவறத்தைப்பற்றிச் சொல்லும்போது, 'யாகம் யக்ஞம் இவற்றை எல்லாம் ஆயிரக் கணக்கில் பண்ணுவதைவிட ஒன்றினுடைய உயிரைக் கொன்று உண்ணாமல் இருப்பதுதான் பெரிய தர்மம்' என்றார். அதனாலே வள்ளுவர் யாகம் பண்ணுவது தப்பு என்றார் என்று சொல்ல முடியுமா? ஆயிரம் பாவத்தைக் காட்டிலும் ஒரு புண்ணியம் நூறு பங்கு உயர்வு என்று சொல்வதில் என்ன விசேஷம் இருக்கிறது? அவனைக் காட்டிலும் இவன் பத்துப் பங்கு பணக்காரன் என்றால், அவனும் பணக்காரன், அவனைவிட இவன் பணக்காரன் என்றே அர்த்தம் ஆகும். யக்ஞம் பண்ணுவது புண்ணியம். அதைக் காட்டிலும் இது உயர்ந்தது என்பது அதற்குப் பொருள். ஆயிரம் யக்ஞம் பண்ணுவதைக் காட்டிலும் இது புண்ணியம். ஆனால் இதை எல்லாராலும் பின்பற்ற முடியாது. ஆகவே துறவற இயலில் சொல்கிறார். சந்நியாசி என்றால் ஓர் இலையைக்கூடக் கிள்ளக்கூடாது. அதுதான் நம் தர்மம். இந்த உத்தமமான குணத்தை எவனாவது ஒருவன் பின்பற்றி வந்தாலுங்கூடப் போதும். மற்றவர்கள் கொஞ்சம் அந்த நிலைக்கு உயரும்போது அவன் மாதிரியே இருக்கப் பழகுவார்கள்.

'நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்றார்கள். பூர்ணமாக நல்லவன் ஒருவன் இருந்தால் போதும். அதற்காகத்தான் அவரவர்கள் கொள்கைப்படி அவரவர்கள் இருக்கவேண்டும் என்பதை நம் மதத்தில் வற்புறுத்துகிறார்களே தவிர, எல்லாரும் ஒரு கொள்கையைத்தான் பின்பற்றவேண்டும் என்று சொன்னதில்லை. வேறு மதத்தில் இருப்பவர்களை நாம் எதைப் பண்ணுகிறோமோ அதைத்தான் பண்ணவேண்டும் என்று வற்புறுத்தியதும் இல்லை. அவரவர்கள் அவரவர்களுடைய தர்மத்தை - கொள்கையைப் பின்பற்ற வேண்டும். பகவான் கீதையில் சொல்லும்போது,

**स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥**

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: |
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தத் ச்ருணு ||

என்கிருர்.

ஒவ்வொருவனும் அவனவனுடைய வர்ணத்திற்குரிய கர்மாவில் கண்ணும் கருத்துமாக இருந்தால் எல்லாத் தர்மங்களும் உயர்ந்த கொள்கைகளும் காப்பாற்றப்படும். எல்லாத் தர்மங்களையும் எல்லாருக்கும் பொதுவாகச் சொல்லக்கூடாது. உயர்ந்த கொள்கைகளை எல்லாருக்கும் சொல்லக்கூடாது, குப்தமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று நம் சாஸ்திரத்தில் சொன்னார்கள்.

எத்தனைதான் பிறருடைய தர்மம், உயர்வானதாக இருந்தாலும் நம்முடைய தர்மம் கீழானதாக இருந்தாலும் நம்முடைய சுபாவமான தர்மத்தை அநுஷ்டிப்பதுதான் பிறனுடைய தர்மத்தைக் காட்டிலும் மேலானது என்கிருர்.

श्रेयान् स्वधर्मो विगुणः परधर्मात् स्वनुष्ठितात् ।

ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண; பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத் |

அவனவன் எந்த எந்தத் தர்மத்தில் இருக்கிருனே அந்த அந்தத் தர்மத்தைக்காமம், கோபம் இல்லாமல் செய்யவேண்டும் என்பது கீதை உபதேசம். இப்படிச் செய்தால் உயர்ந்த பலன், உயர்ந்த கொள்கைகள் அவனிடத்திலும் உண்டாகி விடுகின்றன.

பகவானிடத்தில் பக்தி இருந்தால் எல்லாரிடத்திலும் பிரியமும் பிரேமையும் வரும். அநாவசியமான த்வேஷம், சண்டை எல்லாம் குறையும். அஹிம்சை என்ற உயர்ந்த லட்சியம் நடைமுறையில் சாத்தியமாகும். எல்லாவற்றையும் தன்னிடத்திலிருந்து உண்டாக்கித் தன்னோடு ஐக்கியமாக்கிக்கொள்கிற சாசுவதமான வஸ்து எதுவோ அதனிடத்தில் நாம் வைக்கிற பிரேமைதான் ஜனனம் எடுத்திருப்பதன் பயன். பிறவி எடுத்திருப்பதன் பயன் அந்த ஒரு வஸ்துவினிடத்தில் பிரேமை வைப்பதனுல்தான் பூர்த்தியாகிறது. எவனுல் பொருள்கள் எல்லாம் உற்பத்தி செய்யப்படுகின்றனவோ எவனுல் எல்லாப் பொருள்களும் ரட்சிக்கப்படுகின்றனவோ அவனை அவரவர்கள் தங்கள் தங்களுக்கு விதித்திருக்கும் தர்மங்களைக் கர்மாக்களைப் செய்வதன் மூலம் பிரியம் வைத்து அடைகிருர்கள். ஆகவே நம்முடைய கர்மாக்களை நாம் பண்ண வேண்டும். பண்ணி, நம்முடைய புத்தியைச் சுத்தமாக்கிக்கொண்டு சதா அழிவில்லாத ஒரு வஸ்துவினிடத்தில் பிரியம் வைத்து உண்மையான ஆனந்தத்தை, பரம்பொருளை அடைய வேண்டும்.

முற்றும்